# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY.

**Monday, the 7th April 1958.**

The House met in the Assembly Chamber, Fort St. George at half past eight of the clock, Mr. Speaker (THE HON. DR. U. KRISHNA RAU) in the Chair.

## I.—QUESTIONS AND ANSWERS.

## STARRED QUESTIONS.

MR. SPEAKER : இன்று கூட 30 கேள்விகளுக்கு மேல் இருக்கின்றன. அவைகளை முடிப்பதற்கு கனம் அங்கத்தினர்களுடைய ஒத்துழைப்பு வேண்டும்.

*A murder case*

* 40 *S.N.Q.*—SRI M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the Government have received a complaint, dated 5th February 1958 from one Srimathi Valliammal of Manoor village, Tindivanam taluk, South Arcot district, regarding the murder of her husband Chinnian;

(*b*) whether the Government have received any further representations in the matter from the M.L.As. of Tindivanam Constituency; and

(*c*) if so, the action taken thereon?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) & (*b*) Yes, Sir.

(*c*) The case is being investigated by the Crime Branch, C.I.D., Madras.

SRI M. JAGANNATHAN : What is the reason for this undue delay in investigation? Why is it that the Police have not yet registered a case?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The hon. Member mentioned this to me some time ago and I asked the Police to take up the case. They have not been able to trace the culprits. Therefore, the C.I.D. has taken up the case for investigation. Investigation does cause some delay because it has to be continued till the crime is traced. I have been looking into it and shall take action the moment it is all completed.

MR. SPEAKER : The Hon. Minister says that the matter is under investigation. When the investigation is over, the hon. Member can ask questions. I would like the hon. Member to take note of this.

SRI M. JAGANNATHAN : May I know whether any Police dogs were requisitioned to trace the culprits in this case?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I have no information. I do not think the Police dogs were requisitioned in this case.

Sri T. T. DANIEL : May I know from the Hon. Minister the main allegations in the complaint and also in the representations made by the M.L.A's representing the Tindivanam constituency?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : The allegation was that it was not a case of suicide but one of murder and that it was made out as a case of suicide.

Sri T. S. RAMASWAMY PILLAI : May I know whether there was a second *post-mortem* on this after the representation of the M.L.A.?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : Yes, Sir. A report from the Professor of Medical Jurisprudence has also been received and that has also been examined.

**Sri V. K. KOTHANDARAMAN** : சின்னையன் யாரால், எந்த ஜாதியைச் சேர்ந்தவரால் கொலை செய்யப்பட்டான் என்பதை சொல்ல முடியுமா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : என்னிடம் பூரா தகவலும் இல்லை. ஜாதியை இப்பொழுது சொல்லுவதும் சரியல்ல என்று நினைக்கிறேன்.

*Pay of Professors*

* 42 *Q.*—Sri N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether there is any proposal to increase the salary of the professors and tutors in Government and private colleges; and

(*b*) if so, the details thereof ?

The Hon. Sri C. SUBRAMANIAM : (*a*) & (*b*) Yes, Sir. The matter is under consideration.

**Sri N. K. PALANISAMI** : தனிப்பட்டவர்கள் நடத்தும் கல்லூரிகளிலுள்ள டியூடர், புரபஸர்களுடைய சம்பளத்தை உயர்த்தும் விஷயத்தில் 1,000 மாணவர்களுக்கு குறைவாக உள்ள கல்லூரியில் உயர்த்தப்படுமா ? அல்லது பொதுவாக தனிப்பட்டவர்கள் நடத்தும் கல்லூரியில் உள்ள ஆசிரியர்கள் எல்லோருக்கும் உயர்த்தப்படுமா ?

The Hon. Sri C. SUBRAMANIAM : This is a matter relating to the University Grants Commission. They have laid down certain conditions for the purpose of raising the scales of pay and this is a matter to be considered by the colleges.

**Srimathi KOLANTHAI AMMAL** : கல்லூரி பேராசிரியர்களுடைய சம்பளத்தை கவனிக்கும்பொழுது தமிழ் பகுதியிலே வேலை செய்கின்ற கிரேட் 1, கிரேட் 2 ஆசிரியர்களுடைய வேறுபாடு சம்பளத்தையும் கவனிப்பார்களா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : எல்லா பகுதியிலும் கவனித்துத் தான் இதில் ஒரு முடிவு செய்யவேண்டியதாயிருக்கிறது. நான் இந்தப் பிரச்னை பரிசீலனையில் இருக்கிறது என்று என் பதிலிலேயே சொல்லியிருக்கிறேன்.

**Sri S. LAZAR** : இப்பொழுது இருக்கக்கூடிய சம்பள விகிதத்தில் சர்க்கார் கல்லூரியில் இருக்கக்கூடியவர்களுக்கும், பிரைவேட் மேனேஜ்மெண்டு கல்லூரியில் இருக்கக்கூடியவர்களுக்கும் வித்தியாசம் இருக்கிறதா ?

7th April 1958]

THE HON. SRI C. SUBRAMANIAM: சிறிது வித்தியாசம் இருக்கிறது.

*N.G.Os.*

* 43 *Q.*—SRI N. K. PALANISAMI: Will the Hon. the Chief Minister be pleased to state whether the Government are aware of the protest meetings held on the 19th March 1958 by Non-Gazetted Officers all over the State to press their demands which have already been submitted to the Government?

THE HON. SRI C. SUBRAMANIAM: Yes, Sir.

SRI N. K. PALANISAMI: கனம் மந்திரி அவர்கள் ஏற்கனவே இந்த சர்க்காரின் சார்பாக மத்திய சர்க்காருககு இவர்களுடைய குறைபாடுகளையெல்லாம் எடுத்துச் சொல்லி, அவர்களுக்கு நியாயம் வழங்கவேண்டுமென்று எழுதியிருக்கிறார்கள். ஆகவே அதன் அடிப்படையில் மறுபடியும் அவர்களுக்கு அதிருப்தியை போக்குவதற்கு ஏதாவது சர்க்கார் நடவடிக்கை எடுக்குமா?

THE HON. SRI C. SUBRAMANIAM: அதிருப்தியை போக்குவதற்கு சர்க்கார் நடவடிக்கை எடுப்பது வேறு விஷயம். ஆனால் அதற்காக இம்மாதிரி ப்ரொடெஸ்டு மீடிங் போடுவதால் ஏதாவது பலன் ஏற்படும் என்று நினைப்பது தவறு.

SRI A. GOVINDASAMY: என். ஜி. ஓக்கள் எதிர்க் கட்சியினரின் துணையை இதுவிஷயத்தில் நாடுவதாலும், எதிர்க் கட்சியினர்கள் அவர்களுக்கு பரிந்து பேசுவதாலும், இந்தப் பிரச்னையை சுமுகமாக தீர்த்துவிட முடியாது என்று நிதி அமைச்சர் அவர்கள் சொன்னது உண்மையா? எதிர்க் கட்சியிலுள்ள எம். எல். ஏக்களை என். ஜி. ஓக்கள் அணுகுவதில் என்ன தவறு இருக்கிறது என்று கேட்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: அதுபற்றி முன்பே இந்தச் சபையில் நான் குறிப்பிட்டிருக்கிறேன். இம்மாதிரி இதை ஒரு அரசியல் பிரச்னையாக்குவதால் என். ஜி. ஓக்களுக்கு பாதகம்தான் விளையும். இந்தப் பிரச்னை சுமுகமாக தீருவதற்கு பதிலாக, இன்னும் அது கஷ்டமான பிரச்னையாக முடிந்துவிடும்.

SRI S. LAZAR: மத்திய சர்க்காருக்கு அனுப்பிய யாதாஸ்தின் மீது ஏதாவது பதில் கிடைத்திருக்கிறதா? ஏதாவது நடவடிக்கை எடுத்திருக்கிறார்களா?

THE HON. SRI C. SUBRAMANIAN: இன்னும் பதில் கிடைக்க வில்லை.

SRI S. B. ADITYAN: வருகிற மே மாதம் 15-ம் தேதியன்று என். ஜி. ஓக்கள் வேலை நிறுத்தம் செய்வதற்கு தயார் செய்து கொண்டிருக்கிறார்கள் என்பது அரசாங்கத்துக்கு தெரியுமா?

MR. SPEAKER: This is a separate question and does not arise from the main question.

*Development of Industries*

* 44 *S.N.Q.*—SRI N. K. PALANISAMI: Will the Hon. the Minister for Industries be pleased to state whether the Government have represented to the Centre to allot any amount to this State

from the fund provided for the development of industries in the backward areas in the country?

THE HON. SRI R. VENKATARAMAN : No special allotment for development of Industries in Backward areas has been provided by the Planning Commission and the question does not arise.

*Veterinary Doctors*

* 45 *S.N.Q.*—SRI M. S. SELVARAJAN : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether any representation was recently received from the students of the Madras Veterinary College demanding enhanced scale of pay of the Veterinary Doctors; and

(*b*) if so, the action taken thereon?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) A copy of printed memorandum addressed to Sri V. Ramaiah, Minister for Electricity has been received.

(*b*) In view of the fact that the scales of pay were revised only last year and any further revision will have repercussions on other allied Services the Government rejected the request for enhancement of the scale of pay. It is proposed not to re-open the issue.

* 46 *S.N.Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether any memorandum regarding the enhancement in the scales of pay and dearness allowance to the Veterinary Surgeons was presented by the Madras Veterinary Students Forum to the Secertary to Government, Finance Department, when he addressed the Students Forum recently;

(*b*) whether a copy of the above memorandum will be laid on the Table of the House;

(*c*) whether any, and if so, what action has been taken thereon; and

(*d*) if no action has been taken, the reasons therefor?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No, Sir. No Memorandum was received by Secretary, Finance Department. Nor did he address the students Forum.

(*b*), (*c*) & (*d*) The questions do not arise.

SRI N. K. PALANISAMI : மெடிகல் காலேஜ் மாணவர்கள் எவ்வளவு வருஷ காலம் படிக்கிறார்களோ, அவ்வளவு வருஷ காலம் இவர்களும் படிக்கிறார்கள். இவர்களுடைய சம்பளத்தை கொஞ்சமாவது உயர்த்துவதற்கு சர்க்கார் முயற்சி செய்யுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இவர்களோடு மெடிகல் காலேஜ் கிராஜுவெட்களை ஒப்பிடலாம். அக்ரிகல்சரல் கிராஜுவேட்களையும் ஒப்பிடலாம். அப்படி ஒப்பிட்டுப்பார்த்தால் இப்பொழுது சமீபத்தில் இவர்களுக்கு உயர்த்தப்பட்ட சம்பளம்கூட இதற்கு குறைவாகத் தான் இருக்கிறது.

7th April 1958]

*Swayamariyathai marriages*

* 47 *S.N.Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Home be pleased to state the reasons for the decision to defer the enactment of the law to validate Swayamariyathai Marriages?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The Government decided to defer the enactment of a Law to validate Swayamari-yathi Marriages, as there was no insistent demand for such a legislation.

**SRI A. A. RASHEED** : Is it not a fact that the Bill has been passed by the Legislative Council and has been introduced here?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I do not think the Bill is pending consideration by this Legislature. The Bill was proposed to be introduced by a non-official Member and it was withdrawn. One consideration that weighs with the Government is the passing of the Special Mariages Act of 1954 which covers these questions.

SRI A. GOVINDASAMY : இது தனிப்பட்ட அங்கத்தினர்களால் கொண்டுவரப்பட்ட மசோதா என்று சொன்னார்கள். உள்ளபடியே இதை சர்க்கார்தான் கொண்டு வந்தார்கள். வேண்டுமானால் பரிசீலிக்கட்டும். எதற்காக இந்த சட்டத்தை நிறுத்தி வைத்திருக்கிறார்கள் ? இந்த சட்டத்தை குட்டிகிருஷ்ண நாயர் அவர்கள் இருக்கும்பொழுது அரசாங்கமே கொண்டுவந்தார்கள். அதைக் கொண்டுவர வேண்டுமென்று பல உறுப்பினர்களும் கேட்டுக்கொண்டார்கள் . . . .

MR. SPEAKER : The hon. Member is giving information. He is not asking a question.

SRI A. GOVINDASAMY : அதற்கு வேண்டிய நடவடிக்கைகள் எடுப்பார்களா ?

MR. SPEAKER : If he still persists, I will call the next question. He is giving information and I will not alllow it any more.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நான் முன்பே சொன்னேன். 1954-ம் வருஷத்திய ஸ்பெஷல் மாரியேஜஸ் சட்டம் பாஸ் செய்யப்பட்டிருக்கிறது. இந்தப் பிரச்னைகளெல்லாம் அதிலே சேர்ந்திருக்கின்றன என்று நான் சொன்னேன்.

SRI K. VINAYAKAM : When that piece of legislation was considered in 1954, was not an assurance given by the Government that a new legislation would be brought forward so as to regularise self-respect or swayamariyathai marriages as they are called? Was not a Bill in the offing as far as the Cabinet was concerned? May I know what happened to it?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I may once again repeat that since then, the Special Marriages Act, 1954, has been passed and the hon. Members may go into the provisions of that Act once again and then, if they feel that there is still need for this special legislation, the Government may consider that. 8-40 a. m.

[7th April 1958

SRI M. JAGANNATHAN : How does the Hon. Minister define a ‘ swayamariyathai marriage ’?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : சுயமரியாதைக் கல்யாணம் என்பது, சாதாரணமான சம்பிரதாயச் சடங்குகள் இல்லாமல் நடத்தப்படும் கல்யாணம் ஆகும். ஒருக்கால் அதில் பிரசங்கம் செய்வதும் சேர்ந்திருக்கிறதோ, என்னமோ. எனக்குத் தெரியாது.

*Remission of Land Revenue*

* 48 *S.N.Q.*—SRI A. GOVINDASAMY : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether the Government have received recently mahazars for the grant of remission of land revenue in Villupuram, Tirukoilur and Cuddalore taluks owing to the failure of water-supply from Tirukoilur Anicut and Ellis choultry ayacut; and

(*b*) if so, the action taken thereon?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Yes, Sir. Certain representations regarding grant of land revenue remission were received from the ryots of Cuddalore and Villupuram taluks.

(*b*) They have been transferred to the Collector of South Arcot for necessary action. Under the provisions of Board's Standing Orders, the Collector himself is competent to sanction wet remission wherever necessary in cases where crops have failed due to inadequate supply of water from Government irrigation sources.

SRI A. GOVINDASWAMY : நஞ்சைத் தீர்வையைத் தள்ளிவிட்டு, புஞ்சைத் தீர்வையை வாங்கினால் விவசாயிகளுக்கு போதுமான நிவாரணம் கிடைக்காது. ஆகவே முழுத் தீர்வையையும்—நஞ்சை, புஞ்சை இரண்டையும்—தள்ளுவதற்கு அரசாங்கம் உத்திரவு போடுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : கலெக்டர், தமக்குக் கீழே இருக்கும் அதிகாரிகளுக்கு “அதை ‘அஜ்மாஷ்’ பண்ணவேண்டும்” என்று உத்திரவு போட்டிருக்கிறார். ரிப்போர்ட் வந்தபிறகு, என்ன செய்ய வேண்டுமோ அதைச் செய்யலாம்.

SRI A. GOVINDASAMY : அந்தப் பகுதியிலுள்ள விவசாயிகள் பல கஷ்டங்களினால் மிகவும் பாதிக்கப்பட்டிருப்பதால், அந்தப் பகுதியில் ‘புல் ரெமிஷன்’ (முழு வஜா) கொடுக்கப்படுமா ? அதற்கான உத்தரவை அரசாங்கம் போடுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அரசாங்கம் எப்படிப்பட்ட உத்தரவைப் போடும் என்று சொல்வதற்கில்லை. அந்த ரிப்போர்ட் வந்த பிறகு அதைப் பார்த்து, என்ன செய்ய வேண்டுமோ அதைச் செய்யலாம்.

*Irrigation wells*

* 550 *Q.*—SRI G. G. GURUMOORTHI (on behalf of Sri P. G. Manickam) : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the number of agriculturists to whom loans were given under the Loan Subsidy Scheme for digging the irrigation wells in 1957 in the Coimbatore District; and

7th April 1958]

(*b*) among the wells dug (i) how many completed, and (ii) how many not yet completed?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) The well subsidy scheme was not in operation in the State during 1957. Subsidy loans were granted to 4,685 ryots in Coimbatore district under the Scheme when it was in operation from 1947–48 to 1951–52.

(*b*) (i) 3,339.

(ii) 1,346.

SRI M. S. SELVARAJAN : பாசனக் கிணறுகள் வெட்டுவதற்காகக் கொடுக்கப்படும் மானியம் எந்த அடிப்படையில் வழங்கப்படுகிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அந்த மானியம் கொடுக்கும் திட்டம் இப்போது நிறுத்தப்பட்டு விட்டது என்று நான் சொன்னேன். 1951–52 வரையில்தான் அந்தத் திட்டம் அமுலில் இருந்தது. இப்போது, உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்காகச் செலவழிக்கப்படும் பணத்தில் ஒரு பகுதி கிணறு வெட்டுவதற்குக் கொடுக்கப்படுகிறது ; வெட்டப்படக்கூடிய கிணறு உணவு உற்பத்திப் பெருக்கத்திற்குப் பயன்படக்கூடுமானால், அதற்கு இந்தப் பணம் கொடுக்கப்படுகிறது.

SRI A. R. SUBBIAH MUDALIAR : உணவுப் பொருள் உற்பத்திப் பெருக்கத் திட்டத்தின்கீழ், கிணறுகள் வெட்டுவதற்காகக் கடன் கொடுப்பதற்காக 'லோன் ஸப்ஸிடி ஸ்கீம்'–ஐ அமல் நடத்த சர்க்கார் உத்தேசிக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்போது கடன் கொடுக்கப்படுகிறது. எல்லாவற்றிற்காகவும் கடன்கள் கொடுக்கப்படுவது போல் கிணறுகள் வெட்டவும் கடன்கள் கொடுக்கப்படும்.

MR. SPEAKER : I think we can take up Question Nos. 568, 569 and 570 together.

SRI K. VINAYAKAM : Sir, I think they are different questions altogether.

MR. SPEAKER : They relate to the same subject. So, I think the Hon. Minister may answer the questions together as it will save time.

*Prohibition offences*

* 568 *Q.*—SRI K. B. S. MANI (on behalf of Sri P. G. Manickam) : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the amount spent for the enforcement of Prohibition in 1957;

(*b*) the number of persons in each district who have committed offences in contravention of the Madras Prohibition Act and the nature of such offences;

(*c*) the number of persons sentenced to imprisonment and the number fined; and

(*d*) the amount realised by way of fine?

[7th April 1958

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) There is no separate allotment of expenditure for Prohibition, since the enforcement of Prohibition has been transferred to the Inspector-General of Police, wth effect from 3rd January 1955.

(*b*) A statement [a] showing the particulars is placed on the table of the House.

(*c*) The number of persons sentenced to imprisonment was 34,762 and the number of persons fined was Rs. 85,230.

(*d*) The amount realized by way of fines was Rs. 26,94,891.08 naye paise.

*Liquor permits*

* 569 *Q.*—SRI A. VEDARATHNAM (on behalf of Sri P. G. Manickam): Will the Hon. the Minister for Home be pleased to state the number of persons in each district who have been given liquor permits in 1956 and 1957?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: [b] A statement giving the particulars is placed on the table of the House.

*Prohibition Enquiry Committee.*

* 570 *Q.*—SRI A. VEDARATHNAM: Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the Government have accepted and implemented the recommendations of the Prohibition Enquiry Committee under the Chairmanship of Sri Nachiappa Gounder;

(*b*) if so, the details thereof; and

(*c*) if not, the reason therefor?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: The main recommendations of the Madras Prohibition Enquiry Committee, 1948, of which the late Sri K. A. Nachiappa Gounder was the Chairman, were as follows:—

(1) that the enforcement of Prohibition should be entrusted to the general Police;

(2) that amelioration work connected with Prohibition should be transferred to the Co-operative Department; and

(3) that the Prohibition Act should be amended in the light of certain recommendations made by the Committee.

*Recommendation* (1) *above.*—Enforcement of Prohibition was transferred to the Police Department *in toto* with effect from 3rd January 1955.

---

a Printed as Appendix I at pages 352-353 infra.

b Printed as Appendix II at page 354 infra.

7th April 1958]

*Recommendation* (2) *above.*—Ameliorative work connected with Prohibition was transferred to the Co-operative Department, with effect from 15th October 1948.

*Recommendation* (3) *above.*—A Bill to amend the Madras Prohibition Act, 1937, so as to bring into effect most of the recommendations pertaining to legislation made by the Committee has recently been passed by the Madras Legislature.

Sri K. VINAYAKAM : Sir, I rise on a point of order. While answering question No. 568, the Hon. Minister has said that a statement is placed on the table of the House. But, I find that it has not been given to us.

Mr. SPEAKER : It was placed on the table of the House on Saturday. As the Hon. Home Minister was not here at that time, the question has been postponed for to-day. If the hon. Member will look up his file, he will find the statement with Saturday's batch of papers.

Sri K. VINAYAKAM : It is customary that when a question is postponed for a later date, the relevant statements and answer papers will also be laid on the table of the House on the day the question is answered.

Mr. SPEAKER : The hon. Member's suggestion will be considered.

Sri A. V. P. ASAITHAMBI : மதுவிலக்குச் சட்டம் மீறப்படுவதற்கு மூன்று முக்கிய காரணங்கள் இருக்கின்றன.

Mr. SPEAKER : The hon. Member is only giving information. Let him please put the question.

Sri A. V. P, ASAITHAMBI : கேள்வி போடுகிறேன். மதுவிலக்குச் சட்டம் மீறப்படுவதற்கு மூன்று முக்கிய காரணங்கள் இருக்கின்றன. அவைகள்.—(1) குடிப்பதைத் தவிர்க்கமுடியாத பலர் இருக்கிறார்கள் ; (2) சாராயம் குடித்ததற்காகவோ, சாராயம் காய்ச்சுவதற்காகவோ, சாராயம் விற்றதற்காகவோ சிறை தண்டனை கொடுக்கப்படுபவர்கள் சிறைச்சாலையை மதிப்பதில்லை ; (3) நம் ராஜ்யத்தின் எல்லைகளில் இருக்கும் பாண்டிச்சேரி, பெங்களூர், கொல்லம் போன்ற இடங்களில் மதுவிலக்குச் சட்டம் எதுவும் அமலில் இல்லை. ஆகவே, மதுவிலக்குச் சட்டத்தை வெற்றிகரமாக அமல் நடத்துவதற்காக, குடிப்பதைத் தவிர்க்கமுடியாதவர்களுக்கு தனிப் பெர்மிட்டுகள் வழங்குவதற்கும், சிறைச்சாலையை மதியாதவர்கள் விஷயத்தில் தண்டனைக்கான விதிகளை மாற்றி தண்டனை முறையை மாற்றுவதற்கும், பாண்டிச்சேரி, பெங்களூர், கொல்லம் முதலிய இடங்களில் மதுவிலக்குச் சட்டத்தை அமலுக்குக் கொண்டுவரச் செய்வதற்கும், உடனடியாக நடவடிக்கைகள் எடுக்க சர்க்கார் முன்வருமா ?

Mr. SPEAKER : கனம் அங்கத்தினர் குறிப்பிட்ட விஷயங்கள் மூலக் கேள்விகளின் பதில்களில் இல்லையே. அவை பதில்களில் இருந்தால் தானே கனம் அங்கத்தினர் இந்தக் கேள்வியைப் போடலாம் ? எப்படி இருந்தாலும், கனம் மந்திரி பதிலளிக்க சம்மதித்தால் எனக்கு ஆட்சேபனையில்லை.

The Hon. Sri M. BHAKTAVATSALAM : இந்த ராஜ்யத்திற்கு அப்பாலுள்ள பிராந்தியங்கள் சம்பந்தமாக இந்த ராஜ்ய சர்க்கார் எந்த நடவடிக்கையையும் எடுக்கமுடியாது. குடிப்பதைத் தவிர்க்கமுடியாதவர்களைப் பொறுத்தவரையில், வைத்திய காரணங்களுக்காக யார் யார்

பெர்மிட்டுகள் கோருகிறார்களோ அவர்களுக்கு பெர்மிட்டுகள் வழங்கப் படுகின்றன என்று குறிப்பிட்டேன். மற்றபடி, சட்டத்தில் திருத்தங்கள் அவசியமாக இருந்தால், அது அப்போதைக்கப்போது திருத்தப்பட்டு அமல் நடத்தப்படுகிறது.

**Sri P. S. CHINNADURAI** : கனம் அமைச்சர் கொடுத்துள்ள பதிலில், குடிப்பதற்குப் பெர்மிட் பெற்றிருக்கும் அதிகாரிகளின் தொகை சென்னை நகரத்தில் அதிகமாகக் காணப்படுகிறது. இவர்கள் எந்த வகை யினர் ? அவர்கள் நோய் உள்ளவர்களா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : அதிகாரிகள் என்ற பிரிவில் குறிப்பிடப்பட்டிருப்பவர்கள் சாதாரண அதிகாரிகள் அல்ல ; அவர்கள் ராணுவ அதிகாரிகள் போன்றவர்கள்.

**Sri N. R. THIAGARAJAN** : எம். எல். ஏ-க்களிலும், எம். எல். சி-க்களிலும் எத்தனை பேர்களுக்கு பெர்மிட்டுகள் கொடுக்கப்பட்டிருக் கின்றன என்பதை கனம் அமைச்சர் தெரிவிக்கமுடியுமா ?

Mr. SPEAKER : How can the hon. Member ask a question about the hon. Members of the House here? It is out of order.

Sri A. A. RASHEED : Is it not the policy of the Government to be liberal in the issue of permits to reduce Prohibition offences?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : I cannot say that being liberal in the matter of issue of permits will reduce Prohibition offences.

Sri K. VINAYAKAM : I rise on a point of order. If permits are issued on health grounds, may I know why the Hon. Minister cannot disclose the names of persons in this Assembly?

Mr. SPEAKER : The Hon. Minister may not have the information with him. The hon. Member may put a separate question.

Sri M. JAGANNATHAN : Sir, I rise to a point of order. The Hon. Minister might have been supplied, in certain cases, with the necessary break-up figures by the department concerned. In such cases, he may be in a position to answer our supplementaries and it is for him to answer them.

Mr. SPEAKER : : I am sorry the hon. Member is under a mis-conception. It is for the Speaker to allow or not to allow a supplementary question. Unless I allow a particular question, he cannot answer it. So, there is no point of order.

Sri K. VINAYAKAM : Sir, is it not a fact that such of those persons who honestly apply for issue of permits are much more honest when compared to those who stealthily practice the crime of drinking illicit liquor and thus give more scope for the Government to put them behind the bars?

Mr. SPEAKER : The question is out of order.

Sri K. VINAYAKAM : May I know how my question is out of order, Sir?

Mr. SPEAKER : The question is an insinuation, and therefore, it is out of order.

Sri K. VINAYAKAM : No, Sir.

7th April 1958]

MR. SPEAKER : It is not for you to say 'No'. I say your question is out of order. Next question No. 575 may be put.

*Discharged prisoners*

* 575 *Q.*—SRI K. B. S. MANI (on behalf of Sri P. G. Manickkam) : Will the Hon. the Minister for Home be pleased to state how many shelters have been opened for the temporary stay of persons discharged from jails after the expiry of their sentences and at what places these shelters have been opened?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Four shelters have been opened so far for the temporary stay of persons discharged from correctional institutions at the following places :—

(1) One for men at Coimbatore.

(2) One for women at Karaikudi.

(3) One for boys at Chingleput.

(4) One for girls at Kancheepuram.

SRI A. A. RASHEED : Do the Government give any grants to these shelters, Sir?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Yes, Sir, the Government do maintain these shelters.

*Ceylon repatriates*

* 579 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Home be pleased to state the number of persons who returned to this State after being repatriated from Ceylon?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The number of persons who returned from Ceylon to this State from 19th October 1954 to 2nd March 1958 is 39,890. Out of them, 14,299 are those who returned after receiving quit notice from the Government of Ceylon.

SRI S. B. ADITYAN : ஐயா, இலங்கையிலிருந்து தமிழ் நாட்டுக்கு வருகிற அகதிகளைப்பற்றி கவனிப்பதற்கென்று சென்ற ஆண்டிலே நியமிக்கப்பட்ட அதிகாரி இதுவரையில் என்ன காரியங்கள் செய்திருக்கிறார் என்பதை அமைச்சர் அவர்கள் தயவுசெய்து அறிவிக்க முடியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATASALAM : இதைப்பற்றி தனியாகக் கேள்விகேட்டால் பதிலளிக்கலாம்.

SRI A. VEDARATHNAM : இலங்கையிலிருந்து இங்கே திரும்பி வந்த அகதிகளின் புனர் வாழ்வுக்காக அரசாங்கத்தினிடம் ஏதேனும் கோரிக்கை சமர்ப்பிக்கப்பட்டிருக்கிறதா ? அதைப்பற்றி அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : சில யோசனைகளும், கோரிக்கைகளும் தெரிவிக்கப்பட்டிருக்கின்றன. இதற்காக நியமிக்கப்பட்ட

[7th April 1958

பிரத்தியேக அதிகாரி தங்களுடைய சிபார்சுகளை அனுப்பியிருக்கிறார். அவைகளெல்லாம் பரிசீலனை செய்யப்பட்டு அப்போதைக்கப்போது நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது.

SRI P. S. CHINNADURAI : இலங்கையிலிருந்து நம்முடைய தமிழ் நாட்டுக்குத் திருப்பி அனுப்பப்பட்டிருக்கிறவர்களுடைய தொகை "நாம்—தமிழர் இயக்கம்" ஆரம்பிக்கப்படுவதற்கு முன்னால் எத்தனை, பின்னால் எத்தனை என்று அமைச்சர் அவர்கள் தகவல் தெரிவிக்க முடியுமா?

THE HON. SRI. M. BHAKTAVATSALAM : இந்த இயக்கத்தைப் பற்றி அரசாங்கத்தினிடம் தகவல் ஒன்றும் இல்லை. ஆகையால், இதைப் பற்றி பதிலளிப்பதற்கில்லை.

SRI K. B. S. MANI : மந்திரி அவர்கள், அவ்வப்பொழுது நடவடிக்கை எடுத்து, அவர்களுக்குப் புனருத்தாரண வாழ்வு அளிக்க வசதி செய்து இருப்பதாகச் சொன்னார்கள். அப்படி எவ்வளவுபேருக்கு என்ன என்ன செய்திருக்கிறார் என்பதை விளக்குவார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதற்குப் பதிலளிப்பதற்கு என்னிடம் இப்பொழுது தகவல் இல்லை.

*Seed Farms*

* 582 *Q.*—SRI A. VEDARATHNAM : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the Japanese method of cultivation is adopted in the State Seed Farms at present; and

(*b*) if not, the reasons therefor and what other method of cultivation is adopted there?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) The answer is in the affirmative.

(*b*) Does not arise.

SRI A. VEDARATHNAM : விதைப் பண்ணைகள் நடைபெறுகிற அந்த நிலங்களெல்லாம் இப்பொழுது குத்தகைக்கு எடுக்கப்பட்டிருக்கின்றனவா? அவைகளை அரசாங்கமே சொந்தமாக வாங்கிக்கொள்ள ஏதாவது உத்தேசம் உண்டா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்பொழுது குத்தகைக்கு தான் எடுக்கப்பட்டிருக்கிறது. ஓரளவு வாங்குவது என்ற உத்தேசம் இருக்கிறது. அது பரிசீலனையில் இருக்கிறது.

SRI T. S. RAMASWAMY PILLAI : எல்லாவிதைப் பண்ணைகளிலும் ஜப்பானிய முறை கையாளப்படுகிறதா? இல்லை என்றால் எல்லா விதைப் பண்ணைகளிலும் அம்முறை கையாளப்படுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நெற் பயிரைப் பொறுத்த மட்டில் ஜப்பானிய முறை கையாளப்பட்டு வருகிறது.

*Murder cases*

* 585 *Q.*—SRI T. S. RAMASWAMY PILLAI : Will the Hon. the Minister for Home be pleased to state the number of cases of murder, (i) registered and (ii) ending in conviction during the last five years, districtwar?

7th April 1958]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, A statement [a] furnishing the required particulars is placed on the table of the House.

SRI V. K. KOTHANDARAMAN : இந்த ஸ்டேட்மெண்டில் கொடுக்கப்பட்டிருக்கும் கொலை வழக்குகள் பதிவு செய்யப்பட்ட கணக்கிலே இராமநாதபுரம் ஜில்லாவில் முதுகுளத்தூரில் சமீபத்தில் நடந்த கொலை சம்பந்தமான வழக்குகளும் சேர்க்கப்பட்டிருக்கின்றனவா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தினர் அவர்கள் இங்கே வைக்கப்பட்டிருக்கும் விவரங்களைப் பார்ப்பார்கள். எந்தெந்த ஆண்டுகளுக்கு விவரங்கள் கேட்கப்பட்டனவோ அந்தந்த ஆண்டுகளுக்கு விவரங்கள் தரப்பட்டிருக்கின்றன. அதற்கு மேலே கனம் அங்கத்தினர் அவர்கள் கேட்கின்ற கேள்விக்கு அவர்களே பதில் பெற்றுக்கொள்ளலாம்.

SRI S. LAZAR : பதிவு செய்யப்பட்ட கேஸ்களின் எண்ணிக்கையையும் கன்விக்ஷன் இருந்திருக்கக்கூடிய எண்ணிக்கையையும் பார்க்கும்போது சுமார் 75 : 25 என்ற விகிதாசாரத்தில்தான் இருக்கிறது. இதற்கு என்ன காரணம் என்பதை சர்க்கார் பரிசீலனை செய்திருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கொலை செய்கின்றவர்கள் நல்ல சாட்சியம் வைத்துக்கொண்டு கொலை செய்வது இல்லை. அதுதான் முக்கியமான காரணம்.

SRI T. T. DANIEL : Sir, from the papers placed on the table of the House, we find that the number of murder cases in Coimbatore, Salem, and Tirunelveli districts, seems to be larger than in the other districts. May I know from the Minister whether the Government have gone into that question so as to find out whether this is due to the backwardness of these districts in point of education and economic condition?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, backwardness has nothing to do with the commission of crimes like this. But as I have pointed out on some other occasion, even in most of the advanced countries in Europe, the crimes are on the increase in regard to murders.

*Iron and tyre industries*

* 586 Q.—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Industries be pleased to place on the table of the House a list of industries like iron and tyre that have been investigated and found feasible and yet could not be started due to persons with enough capital not coming forward to take up the same and run them?

THE HON. SRI R. VENKATARAMAN : No detailed investigation has so far been made by Government of the possibilities of starting major industries in the State like iron and tyre. Dunlop Rubber Co. (India), Limited, have been granted a licence to manufacture motor and giant covers and cycle covers (or tyres) in Ambathur.

SRI A. A. RASHEED : May I know, Sir, what are the steps taken by the Government to attract capital for those industries?

THE HON. SRI R. VENKATARAMAN : Invitation to the capitalists

---

a Printed as Appendix III at pages 355—357 infra.

[7th April 1958

*Minor ports*

* 587 Q.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(a) the amount allotted for the development of minor ports in 1957–58;

(b) the amount spent so far;

(c) the amount of grant or loan received from the Central Government ; and

(d) the present stage of the various works taken up for execution?

THE HON. SRI P. KAKKAN : The attention of the hon. Member is invited to the paper [a] placed on the table of the House.

SRI N. K. PALANISAMI : நாகப்பட்டணம், கடலூர் ஆகிய இரண்டு இடங்களிலுமுள்ள துறைமுகங்கள் விஷயத்தில்தான் வேலை செய்யப்பட்டிருக்கிறது. பாக்கி இருக்கும் துறைமுகங்களுக்கு ஏன் பணம் ஒதுக்கவில்லை ?

THE HON. SRI P. KAKKAN : ஏன் பணம் ஒதுக்கவில்லை என்ற பிரச்னை இல்லை. முதலில் நாகப்பட்டணம், கடலூர் ஆகிய இவ்விரு இடங்களிலுள்ள துறைமுகங்களைத்தான் அரசாங்கம் எடுத்து வேலை செய்வதாக உத்தேசம்.

SRI S. M. ANNAMALAI : மத்திய சர்க்காரிடமிருந்து கிடைக்கக் கூடிய தொகை ரூ. 4,51,825 என்று இருக்கிறது. இதில் கிராண்டு எவ்வளவு ? லோன் எவ்வளவு ?

THE HON. SRI P. KAKKAN : மத்திய சர்க்காரிடமிருந்து கிராண்டாகக் கிடைத்தது நாகப்பட்டிணம் துறைமுகத்திற்காக ரூ. 4,27,325 கடலூர் துறைமுகத்திற்காக ரூ. 24,500.

SRI K. B. S. MANI : பழங்காலப் பெருமை பெற்ற தரங்கம்பாடி துறைமுகம் சம்பந்தப்பட்ட ரிகார்டுகளை மத்திய சர்க்காருக்கு அனுப்பியிருப்பதாக கடந்த ஆண்டிலே நமது மந்திரி அவர்கள் தெரிவித்தார்கள். அது சம்பந்தமாக இதுவரை ஏதாவது தகவல் வந்ததா ? அப்படியானால் அதுபற்றி என்ன நடவடிக்கை எடுக்கப்போகிறீர்கள் ?

MR. SPEAKER : கனம் அங்கத்தினர் தனிக் கேள்வி போடவேண்டும்.

SRI A. GOVINDASAMY : கடலூர் துறைமுகம் அமையும் நேரத்தில் புதுச்சேரியில் ஒரு 'பியிர்' கட்டியிருப்பதுபோல் கடலூர் துறைமுகத்திலும் ஒன்று கட்டுவதற்கு அரசாங்கம் யோசிக்குமா ?

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினர் தனிக் கேள்வி போடவேண்டும்.

*Electricity for agriculturists*

* 588 Q.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Electricity be pleased to state whether the Government considered any proposal to reduce the charges on electricity consumed by agriculturists by $6\frac{1}{4}$ per cent on the recommendation of the Pykara Electricity System, Coimbatore?

THE HON. SRI V. RAMAIAH : No, Sir.

---

[a] Printed as Appendix IV on pages 89-90 infra.

7th April 1958]

SRI N. K. PALANISAMI : 1956-ம் வருஷத்தில் அக்டோபர் மாதத்தில் சர்க்காருக்கு அந்த இலாகாவிலிருந்து சிபாரிசு வந்திருக்கிறதா? அதாவது விவசாயத்திற்கான மின்சாரக் கட்டணத்தை இப்பொழுது இருப்பதிலிருந்து $6\frac{1}{4}$ சத விகிதம் குறைக்க வேண்டும் என்ற சிபார்சு வந்திருக்கிறதா ? அப்படியானால், அதன் பேரில் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI V. RAMAIAH : அதுபோன்ற சிபார்சு அரசாங்கத்திற்கு வரவில்லை.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : So far as the supply of electrical energy to agriculturists is concerned, I find some disparity between areas and areas. I find that in certain areas they are collecting at the rate of Rs. 35 as u.c.m. whereas in certain areas they are collecting at Rs. 50 as u.c.m. May I request th Hon. Minister to tell the reason for this disparity?

THE HON. SRI V. RAMAIAH : In the collection of minimum charges there is no disparity at all. From every scheme a return of ten per cent is expected. In the calculation of this ten per cent the amount may vary from scheme to scheme.

SRI N. K. PALANISAMI : சர்க்காருக்கு இப்பொழுது வரக்கூடிய வருமானம் குறையாமலேயே விவசாயிகளுக்கு கொடுக்கும் மின்சாரத்திற்கான இந்தக் கட்டணத்தைக் குறைக்க சர்க்கார் ஏதாவது ஏற்பாடு செய்வார்களா ?

THE HON. SRI V. RAMAIAH : இதற்குத் தனி கேள்வி வேண்டும்.

*D.M.K.*

* 589 *Q*.—SRI A. GOVINDASAMY : Will the Hon. the Minister for Home be pleased to state the class in which M.Ps. 9 a.m.
and M.L.As. belonging to Dravida Munnetra Kazhagam who were arrested under the Preventive Detention Act were placed in Jail?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : No M.L.A. or M.P. belonging to the Dravida Munnetra Kazhagam was arrested under the Preventive Detention Act. Therefore the question does not arise.

SRI A. GOVINDASAMY : திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்தவர்கள் எந்தச் சட்டத்தின் கீழ் கைதி செய்யப்பட்டார்கள் என்று சொல்லமுடியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : க்ரிமினல் ப்ரொஸீஜர் கோட் 151–வது பிரிவுப்படி கைதி செய்யப்பட்டார்கள்.

SRI S. LAZAR : குற்றம் செய்யக்கூடிய குற்றவாளிகளை திராவிட முன்னேற்றக் கட்சியைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும்கூட சாதாரண கைதிகளை மூன்றாவது வகுப்பில் வைக்கும்போது அந்தக் கட்சியைச் சேர்ந்த எம்.பி., எம்.எல்.ஏ. முதலியவர்களும், தலைவர்களும் தங்களுக்கு ஏதாவது ஸ்பெஷல் க்ளாஸ் வேண்டுமென்று கோரிக்கையை அனுப்பியிருக்கிறார்களா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அந்தமாதிரி திராவிட முன்னேற்றக் கட்சியைப் பொறுத்தமட்டில் யாரும் தண்டிக்கப்பட்டு சிறையில் இருக்கிறார்கள் என்று நினைக்கவில்லை. ஆகவே இந்தப் பிரச்னை எழவேயில்லை.

**Sri K. ANBAZHAGAN :** திராவிட முன்னேற்றக் கட்சியைச் சேர்ந்த எம்.எல்.ஏ., எம்.பி. முதலியவர்கள் பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் கைது செய்யப்படவில்லை என்றாலும் சாதாரண கைதிகளைப்போலக் கூட நடத்தப்படக்கூடாது, தண்ணீர்கூடக் கொடுக்கப்படக்கூடாது என்பதாக ஏதாவது உததரவு போடப்பட்டுள்ளதா ? சட்டம் இருக்கிறதா என்று அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** அண்டர் ட்ரையல் கைதிகளுக்கும், தண்டிக்கப்பட்ட கைதிகளுக்கும் எந்த எந்த விதிப்படி தண்டனை அளிக்கப்படவேண்டும், அந்தஸ்துக்கு ஏற்றபடி எந்த எந்த வகுப்புகளில் வைக்கவேண்டும் என்பதற்கு விதி இருக்கிறது. ஆனால் க்ரிமினல் ப்ரொஸீஜர் கோட் 151-வது பிரிவுப்படி கைது செய்யப்பட்டவர்களுக்கு அப்படிப்பட்ட விதி ஒன்றும் இல்லை. சாதாரண கைதிகளைவிடக் கேவலமான முறையில் நடத்தப்பட்டார்கள் என்பதை நான் ஒத்துக்கொள்ளவில்லை. அதை ஒப்புக்கொள்ளவும் முடியாது.

**Sri A. V. P. ASAITHAMBI :** திராவிட முன்னேற்றக் கழக எம்.எல்.ஏ., எம்.பி., முதலியவர்களுக்கு எந்தவிதமான வசதியும் கொடுக்கப்படவில்லை. ஆனால் இப்பொழுது கைதி செய்யப்பட்டு காவலில் வைக்கப்பட்டிருக்கும் ஸ்ரீ முத்துராமலிங்க தேவருக்கு முதல் வகுப்பு கொடுக்கப்பட்டிருக்கிறது. அதேமாதிரி இவர்களுக்கு ஏன் கொடுக்கவில்லை என்று சொல்வார்களா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** ஸ்ரீ முத்துராமலிங்க தேவர் பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் கைதி செய்யப்பட்டு காவலில் வைக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்களுக்கு என்ன என்ன வசதி கொடுக்கப்படவேண்டுமென்பதற்கு தனி விதி இருக்கிறது. க்ரிமினல் ப்ரொஸீஜர் கோட் 151-வது செக்ஷன்படி கைது செய்யப்பட்டவர்களுக்கு அந்த விதி இல்லை.

**Sri K. ANBAZHAGAN :** செக்ஷன் 151-வது பிரிவுப்படி கைதி செய்யப்பட்டவர்கள் துண்டுகூடப் போட்டுக்கொள்ளக்கூடாது, குடிக்கத் தண்ணீர் கேட்டால்கூடக் கொடுக்கக்கூடாது என்பதாகச் சட்டம் இருக்கிறதா என்று அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** அப்படி ஒன்றும் உத்தரவு கிடையாது. உத்தரவு போடவில்லை என்று சொல்ல விரும்புகிறேன்.

*Woodbriar Estate, Nilgiris*

* 590 *Q.*—**Sri N. MARUDACHALAM :** Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether Government have received any report that the Labour Union has given a strike notice as the management of Woodbriar Estate at Nilgiris has thrown out more than hundred labourers and doing the work on contract in contravention of the statutory agreement it made with the Labour Union before the Labour Officer; and

(*b*) if so, the action taken thereon by Government?

**The Hon. Sri R. VENKATARAMAN :** (*a*) Yes, Sir.

(*b*) The dispute has been referred to the Industrial Tribunal, Madras, for adjudication.

**Sri N. MARUDACHALAM :** நீலகிரி எஸ்டேட் மானேஜ்மென்டார் நூற்றுக்கணக்கான தொழிலாளர்களைத் தள்ளிவிட்டு கண்டிராக்ட் முறையில் வேலை நடத்திவருகிறார்கள். அந்தக் கண்டிராக்ட் முறையை அனுமதிக்காது,

7th April 1958]

வேலையிலிருந்து நீக்கப்பட்ட தொழிலாளர்களைத் திருப்பி வேலையில் வைத்து வேலைவாங்க அரசாங்கம் உத்தேசிக்குமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இந்தப் பிரச்னை கோர்ட்டுக்கு விடப்பட்டிருக்கிறது.

*Amount due to the Tanjore District Board from the Raliway Funds.*

* 591 *Q.*—SRI A. VEDARATHNAM : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the District Board of Tanjore has received its due share of Railway Funds from the Central Government;

(*b*) if so, the amount received; and

(*c*) the person to whom this amount is being entrusted now as there is no district board at present?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) & (*b*) Yes, Sir. Rs. 1,75,18,794 (Rupees one hundred seventy-five lakhs eighteen thousand seven hundred and ninety-four).

(*c*) The amount is held in deposit by the Government of Madras.

SRI A. V. P. ASAITHAMBI : இந்த ரயில்வே நிதி எதற்காக என்று அமைச்சர் அவர்கள் விளக்க முன்வருவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : தஞ்சாவூர் ஜில்லாவில் அந்த ஜில்லா போர்டுக்குச் சொந்தமாக ரயில்வே கொஞ்சம் இருந்தது. அதன் நிர்வாகம் ரயில்வே போர்டால் நடத்தப்பட்டு வந்தபோது அதில் கொஞ்சம் விகிதாசாரம் அந்த ஜில்லா போர்டுக்காக ஒதுக்கப்பட்டது. தங்கள் உரிமையை ஜில்லா போர்டார் ரயில்வே போர்டினிடமே கொடுத்துவிட்டதால் ஆண்டுதோறும் அவர்களுக்கு கூடிவந்த தொகையை எல்லாம் கணக்குப் போட்டு இந்தத் தொகை கொடுக்கப்படுகிறது.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : May I know, Sir, how they propose to utilize this amount?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Now the Government which holds the amount in deposit proposes to pay 4 per cent interest to the District Board. There have been so many proposals to utilize the amount including the proposal to start a medical college in Tanjore. If the hon. the Leader of the Opposition would put a separate question to my Hon. Colleague the Minister for Local Administration, she might perhaps be able to answer that question in detail.

SRI A. VEDARATHNAM : இதற்கு முன்னிருந்த ஜில்லா போர்டார் அந்தத் தொகை பற்றி எந்த முறையில் செலவிடவேண்டும், எந்த எந்த இனத்திற்குச் செலவிடவேண்டுமென்று ஏதாவது தீர்மானம் நிறைவேற்றி அரசாங்கத்திற்கு அனுப்பியிருக்கிறார்களா ? அப்படியானால் அந்த விவரம் என்ன ? அதைப்பற்றி அரசாங்கம் என்ன முடிவு செய்திருக்கிறது.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஜில்லா போர்டு சில யோசனைகளைச் சொல்லியிருக்கிறது. அதைப்பற்றிய விவரங்கள் என்னிடம் இல்லை.

[7th April 1958

*Employees' State Insurance Scheme*

* 592 *Q.*—Sri N. MARUDACHALAM : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) the reason for the delay in giving treatment to the patients in the new hospital constructed at Coimbatore under the Employees' State Insurance Scheme; and

(*b*) the reason for the delay of two or three months in giving sickness cash-benefit to the employees and increased cash-benefit that is being given recently to employees suffering from tuberculosis?

The Hon. Sri R. VENKATARAMAN : (*a*) The Employees' State Insurance Hospital building, Coimbatore, is being completed. Only the Tuberculosis Ward is ready for occupation. This ward will be taken over shortly. Preliminary action for staffing and equipping the hospital is being taken.

(*b*) There was some delay in payment of cash benefits during latter half of 1957 due to the incidence of 'Flu' which affected the working of the local offices. The arrears got cleared by about the end of December 1957 and it is reported that payments are being effected now on normal basis. In respect of extended Tuberculosis benefits efforts are being now made by the Employees' State Insurance Corporation to expedite payment, and a member of the staff is deputed once in a month to visit the Perundurai Sanatorium and help the insured persons in obtaining and filling up their claims so that payments can be made expeditiously.

Sri N. MARUDACHALAM : அதில் அவர்களுக்கு மருந்து வாங்குவதற்குக் காலதாமதம் ஆகிறதாகக் கருதப்படுகிறது. தாமதப்படாமல் உதவி செய்வதற்கு நமது அரசாங்கம் எடுத்துக்கொள்கிற நடவடிக்கை என்ன ?

The Hon. Sri R. VENKATARAMAN : இதுபற்றி ஸ்டேட் இன்ஷூரன்ஸ் கார்ப்பரேஷன் மகாநாடு போட்டு பரிசீலனை செய்தது. என்ன என்ன வசதிகளை அதிகரிக்கவேண்டும் என்பது பரிசீலனை செய்யப்பட்டிருக்கிறது. இருக்கக்கூடிய குறைகளை நிவர்த்திக்க எல்லா நடவடிக்கைகளும் எடுத்துக்கொள்வதாகச் சொன்னார்கள்.

Sri S. PAKKIRISWAMY PILLAI : ராஜ்ய சுகாதார இன்ஷூரன்ஸ் திட்டத்தின் கீழ் எல்லா தொழிலாளர்களுக்கும் இன்ஷூரன்ஸ் செய்யப்பட்டு வேண்டிய உதவி செய்யப்பட்டிருக்கிறது. அப்படி இருக்கும்போது அநேக தொழிலாளர்களுக்கு க்ஷயரோகத்தால் பீடிக்கப்பட்ட தொழிலாளர்களுக்கு இடம் இல்லையென்று சொல்லி வேலையில்லாமல் செய்து சில சமயத்தில் அவர்களைத் தவிக்கும்படி விட்டுவிடுகிறார்கள். அதற்கு நேரிடையான நடவடிக்கை என்ன செய்தார்கள் என்று அறிய விரும்புகிறேன்.

The Hon. Sri R. VENKATARAMAN : கனம் அங்கத்தினர்களுக்கு நன்றாகத் தெரியும்; க்ஷயரோகத்தால் பீடிக்கப்பட்டவர்களுக்குப் போதுமான அளவு ஆஸ்பத்திரியில் இடம் இல்லையென்பதும் அதனால் ரிஜிஸ்டர் செய்து கொள்ளச்சொல்லி முறைப்படி அவர்களுக்கு இடம் அளிக்கப்பட்டு வருகிறது என்பதும் தெரியும். ஆனால் அக்யூட் கேஸ்களாக இருந்தால் உடனடியாக ஆஸ்பத்திரியில் சேர்த்துக்கொள்கிறார்கள். அதற்கு ஆஸ்பத்திரியில் இடம் உண்டு.

7th April 1958]

SRI N. MARUDACHALAM : கோவை ஆஸ்பத்திரியில் இன்னும் லைட் போடவில்லை, போட்டா வசதி போடவில்லை. எப்போது அங்கே நோயாளிகள் அனுமதிக்கப்படுவர்கள் ?

THE HON. SRI R. VENKATARAMAN : இது எவ்வளவு சீக்கிரம் திறப்பதற்கு முடியுமோ அவ்வளவு சீக்கிரம் திறக்கப்படும்.

*Agricultural College for Tanjore*

* 593 *Q.*—SRI A. VEDARATHNAM : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether as per resolution passed by the District Planning Board, Tanjore, it is proposed to start an Agricultural College in that district; and

(*b*) if so, where and when?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No.

(*b*) Does not arise.

SRI A. VEDARATHNAM : ஜில்லா பிளானிங் போர்டி லிருந்து விவசாயக் கல்லூரியை ஏற்படுத்த வேண்டுமென்று தீர்மானம் வந்திருக்கிறது. அந்த ஜில்லாவில் ஏற்படுத்த வேண்டியதன் அவசியத்தையும், தேவையையும் உணர்ந்து உடனடியாக அந்த இடத்தில் விவசாயக் கல்லூரியைத் துவக்க அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ப்ளானிங் போர்டு தீர்மானம் போட்டுவிடுவது சுலபம், ஆனால் அந்தத் தீர்மானத்தை ஒப்புக் கொண்டு விவசாயக் கல்லூரியை அமைப்பதில் எவ்வளவோ பிரச்சனைகள் இருக்கின்றன. அதற்கு வேண்டிய பணம் இருக்கிறதா என்று பார்க்க வேண்டும். கோவை கல்லூரியைப் பொறுத்தவரையில் மாணவர்களின் எண்ணிக்கை உயர்த்தப்பட்டிருக்கிறது. அதோடு இன்னும் சில விரிவு செய்யப்படுகிறது. அதற்கு ஏராளப்பணம் ஆகிறது. கல்லூரியோடு ஒரு ஆராய்ச்சி நிலையமும் ஏற்படுத்தினால்தான் இரண்டும் சேர்ந்து வேலை செய்ய முடியும். இது எல்லாம் பரிசிலனை செய்யப்பட்டே முடிவு எடுக்கப்படும். கவனிக்கப்பட்டுவருகிறது.

*National Co-operative Stores, Virudhunagar.*

* 594 *Q.*—SRI A. V. P. ASAITHAMBI : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) the reason for the closure of the National Co-operative Stores, Virudhunagar;

(*b*) whether any misappropriation of funds has taken place there recently; and

(*c*) if so, the action taken thereon?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) The Virudhunagar National Co-operative Stores had not been working satisfactorily and had sustained heavy losses. The General Body of the Stores at its meeting held on 22nd August 1954 therefore resolved in favour of voluntary liquidation. The attempts made by the Department and the Central Bank to revive it proved futile as members did not evince any interest in the affairs of the Stores. The Deputy Registrar, Ramanathapuram and Co-operative Central Bank recommended the cancellation of the registration of the Stores. The registration of the Stores was therefore cancelled on 19th November 1955.

[7th April 1958

(b) No case of misappropriation or fraud has been reported recently. However, there was a case of misappropriation of stocks to the extent of Rs. 2,233·84 in January 1954 by two employees of the Stores (Salesmen).

(c) Criminal action was taken against these two employees and they were convicted by the Sub-Magistrate, Sattur on 28th September 1954 to undergo imprisonment till the rising of the Court and to pay fines of Rs. 200 and Rs. 75 respectively or in the alternative to undergo simple imprisonment for two months and one month respectively. Arbitration proceedings were taken under section 51 of the Madras Co-operative Societies Act VI of 1932 for the recovery of the misappropriated amount. A sum of Rs. 1,000 only was found recoverable from the employees concerned.

9-10 a.m. SRI V. K. KOTHANDARAMAN : பெரிய நஷ்டமும் மோசடியும் ஏற்பட்டு அதை மூடக்கக்கூடிய நேரத்தில் அந்த ஸ்டோர்ஸின் தலைவர், காரியதரிசி இவர்கள் யார் என்று சொல்லமுடியுமா ? எவ்வளவு நஷ்டம், எவ்வளவு மோசடி என்றும் சொல்ல முடியுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : வியாபாரத்தில் நஷ்டம் லட்சமிருக்கும். மோசடி 2,000 ரூபாய்தான். அந்த சமயத்தில் யார் இருந்தார்கள் என்று தெரியாது.

*Cattle-lifting*

* 595 Q.—SRI S. LAZAR (on behalf of Sri V. Arunachala Thevar) : Will the Hon. the Minister for Home be pleased to state—

(a) how many cases of cattle-lifting were reported to the Kiranur Police, Pudukkottai division, in 1956 and 1957;

(b) how many were (i) recovered; and (ii) how many not recovered by the Police; and

(c) whether the Government have any scheme to prevent cattle-lifting in general?

THE HON. SRI M. BHAKTAVATSALAM :—

| | | | |
|---|---|---|---|
| (a) | | 1956 ... ... ... | 31 |
| | | 1957 ... ... ... | 22 |
| (b) | (i) | 1956 ... ... ... | 17 |
| | | 1957 ... ... ... | 16 |
| | (ii) | 1956 ... ... ... | 14 |
| | | 1957 ... ... ... | 6 |

(c) No, Sir.

SRI S. LAZAR : மாகாணத்தில் இதுபோன்ற திருட்டுகள் அதிகமாக நடக்கிறது.

MR. SPEAKER : The hon. Member is not correct in making such an insinuation.

SRI S. LAZAR : It is not an insinuation and I do not mean it. It is a fact. அந்தப் பகுதியில் இதைத் தடுப்பதற்கு சர்க்கார் ஏதாவது ஸ்பெஷல் நடவடிக்கைகள் எடுக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்தக் குற்றங்கள் செய்பவர்கள் என்று சந்தேகப்படும் நபர்களை போலீஸ் கவனமாக கவனித்து வருகிறார்கள்- இப்படிப்பட்ட குற்றங்கள் நடைபெற்றால் அவர்களுக்கு அதில் ஏதாவது சம்பந்தமுண்டா என்று பரிசீலித்து நடவடிக்கைகள் எடுத்து வருகிறார்கள்.

7th April 1958]

*Handloom industry*

* 596 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether the Government have apprised the Centre in February 1958 of the critical conditions of the handloom industry in this State and requested them to restore the cut made in the rebate; and

(*b*) if so the details of the same?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Yes.

(*b*) The Government of India were requested to retain the old rebate of 9 nP in the rupee on the sale of handloom cloth at least up to 31st March 1958. They were also requested to consider the suggestion of sending trade delegations of handloom merchants and producers to foreign countries like Ceylon, Burma, Malaya and Indonesia for recapturing old markets in those countries and for making specific mention of handloom cloth in the commodities schedules to the trade agreements to be entered into by India with various other countries. The Government of India's reply is awaited.

SRI N. K. PALANISAMI : மத்திய சர்க்கார் எக்ஸைஸ் டியூட்டியில் இருந்து 15 கோடி ரூபாய் குறைப்பதின் காரணமாக, மேலும் கைத்தறி துணிகளுக்கு அதிகமாக போட்டி இருப்பதாலும் ஏன் ஒன்றரை அணு ரிபேட் என்றிருப்பதை இரண்டணு என்று உயர்த்த இச்சர்க்கார் சிபார்சு செய்யக்கூடாது ?

THE HON. SRI R. VENKATARAMAN : இதை கனம் அங்கத்தினர் பார்லிமெண்ட்டில் அவர்களது கட்சி அங்கத்தினர்களை விட்டு கேள்வி போடும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

SRI A. MARIAPPAN : கைத்தறித் துணி அதிகமாகத் தேங்கிக் கிடப்பதால் அதை விற்பனை செய்ய மாகாண சர்க்கார் ஏதாவது நடவடிக்கை எடுத்திருக்கிறதா ?

MR. SPEAKER : இதுபற்றி இரண்டு நாட்கள் இன்ட்ஸ்ட்ரீஸ் கோவாப்பரேஷன் டிமான்ட் வந்தபோது விவாதித்தாகிவிட்டது.

If the hon. Minister is willing to answer it, I have no objection.

SRI A. GOVINDASAMI : கைத்தறி வார விழா கொண்டாடும் போது ரிபேட் கூட்டிக் கொடுத்ததுபோல் தீபாவளி, பொங்கல் பண்டிகை சமயத்திலும் ரிபேட்டை உயர்த்திக்கொடுக்க இந்த சர்க்கார் மத்திய சர்க்காருக்கு சிபார்சு செய்யுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : அந்த மாதிரி சிபார்சு ஏற்கெனவே செய்யப்பட்டிருக்கிறது.

SRI P. S. CHINNADURAI : நாம் அனுப்பியிருக்கிற கோரிக்கைக்கு மத்திய அரசாங்கம் பதில் அனுப்ப தாமதம் ஏற்படுவதால் இந்த பதிலைப் பெறுவதற்கு இன்றே ஒரு விசேஷ தூதரை இந்த ராஜ்ய சர்க்கார் அனுப்பி வைக்க முன்வருவார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : It is a suggestion which may be considered.

[Sri S. Lazar] [7th April 1958

ஆசைப்படுகிறேன்—நமது அரசாங்கம் சம்பந்தப்பட்ட வரைக்கும் அதிலும் சென்னை அரசாங்கம் சம்பந்தப்பட்டவரைக்கும், நாம் வியாபாரத் துறையிலும் சரி, இன்னும் தொழிற் துறையிலும் சரி, ஓரளவுக்கு பின்தங்கியிருக்கிறோம் என்று நமது அரசாங்கப் புள்ளி விவரங்களிலிருந்து தெரிகிறபோது, இந்த விற்பனை வரியானது வியாபாரத் துறைக்கும் உற்பத்திப் பெருக்கத்திற்கும் ஓரளவு சம்பந்தம் உடையது என்ற அடிப்படையிலே பார்க்கும்போது, இதிலே அரசாங்கம் ஓரளவு கவனமாகச் செல்லவேண்டும் என்றுமட்டும் நான் சொல்ல ஆசைப்படுகிறேன். ஆகவே, அசெஸ்மெண்ட் அதிகாரிகள் தங்களுடைய சுயநலத்தை எண்ணி ஒரு சில இடங்களில் அவர்கள் அசெஸ்மெண்ட் செய்யும்போது ஏதோ வரியை விதிக்கவேண்டும் என்ற ஒரு அக்கறை காணப்படுகிறதே தவிர, வரி வசூல் செய்யவேண்டும் என்பது மட்டும் அல்லாது வியாபாரிகளுக்குத் தொல்லைகள் கொடுக்காமலும் இருக்க வேண்டும் என்ற எண்ணம் இருப்பதாகத் தெரியவில்லை.

அடுத்தபடியாக, அப்பெல்லெட் ஆபீசர் என்ற முறையில், இப்பொழுது இருக்கும் சட்ட அமைப்புப்படி, டெபுடி கமர்ஷியல் டாக்ஸ் ஆபீசர் இருக்கிறார் என்று இந்த இடத்தில் நான் சொல்ல ஆசைப்படுகிறேன். அவர்கள் விற்பனை வரி இலாகாவிலேயிருந்து எடுக்கப்பட்டவராக இருப்பது சரியல்ல. ஒரு நீதி மன்றத்தில் இருக்கும் ஜுடிஷியல் ஆபீசர் மாதிரி இருக்கவேண்டும். ஜுடிஷியல் அனுபவம் உள்ளவராக இருக்கவேண்டும். ஏதோ டிபார்ட்மெண்ட் ஆசாமி ஒருவர் டி.ஸி.டி.ஓ. ஆக அமர்த்தப்பட்டால், அவருக்கு அப்பீலுக்கான அதிகாரங்கள் இருப்பதன் காரணமாக, அரசாங்கத்திற்கு அதிகமான வருமானம் வாங்கிக் கொடுத்தால், ஏதோ ஓரளவு தங்களுக்கு உத்தியோக உயர்வு கிடைக்கும் என்ற எண்ணம் அவர்களுக்கு இருக்கிறது. அப்படிப்பட்டவர்களுக்குப் பதிலாக ஒரு ஜுடிஷியல் ஆபீசரை 'இன்டிபென்டென்ட்' ஆக இருப்பவராகப் பார்த்துப் போட்டால் நல்ல முறையில் இரு தரப்பாருக்கும் நல்ல பயனை விளைவிக்கும் என்பதில் சந்தேகம் இல்லை.

ட்ரிப்யூனல் சம்பந்தப்பட்ட வரையில் குறிப்பாகச் சொல்லமுடியும். அது நேர்மையான முறையில், நல்ல முறையிலே நமது நாட்டிலே நியாயம் வழங்கி வருகிறது. அதில் எந்தவிதமான சந்தேகமும் இல்லை. ட்ரிப்யூனல் அங்கத்தினர்களைப்பற்றி எனக்கு எதுவுமே தெரியாது. ஆனால், ட்ரிப்யூனல் ஸிஸ்டம் நல்ல முறையிலே நமது மாகாணத்தில் இருந்து வருவது குறிப்பிடத்தக்கது. அதற்கு என்ன காரணம் என்று பரிசீலனை செய்து பார்த்தோமானால், அதிலே ஜுடிஷியல் அனுபவம் உள்ள அங்கத்தினர்கள் அதில் இருக்கும் காரணத்தால் நல்ல முறையிலே அதிலே நிர்வாகம் நடந்து வருகிறது. அதிலும் குறிப்பாக நல்ல முறையிலே தீர்ப்புகள் அளிக்கவேண்டுமென்ற மனப்பான்மையும் இருக்கிறது. ஏராளமான கேஸ்கள் அங்கே தாக்கல் செய்யப்படுகின்றன. ஆகவே, ட்ரிப்யூனல் போன்று மாகாணத்தின் பல நகரங்களுக்கு மொபைல் ட்ரிப்யூனலாகச் சென்று அந்தந்த இடங்களிலேயே தீர்ப்புகள் அளிக்கும்படி ஏற்பாடு செய்தால், அதற்கான நடவடிக்கையை அரசங்கம் எடுத்தால் மிகவும் நன்றாக இருக்கும்.

இந்த ட்ரிப்யூனலிலே வியாபாரத் துறையிலே அனுபவம் உள்ள அங்கத்தினர் ஒருவரையும் சேர்த்துக்கொள்வது நல்லது என்பது என் போன்றவர்களுடைய கருத்து ஆகும்.

இப்பொழுது உணவுப் பொருள் சம்பந்தப்பட்ட வரைக்கும் வரி விதிப்பு தேவை இல்லை என்ற சர்ச்சை நடந்துகொண்டு வருகிறது. ஆனால், குறிப்பாக நான் சொல்ல முடியும். 'பெரிஷபள்' என்று சொல்லக்கூடிய முறையில் காய் கறிகள் இன்னும் இது போன்ற அழுகக் கூடிய பொருள்களுக்கு விதிவிலக்கு கொடுப்பது நல்லது என்பது என் போன்றவர்களுடைய கருத்து. இதை சர்க்கார் நல்ல முறையில் பரிசீலனை செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கின்றேன்.

7th April 1958] [Sri S. Lazar]

கடைசியாக வரி விதிப்பு சம்பந்தப்பட்ட வரைக்கும் நாம் கையாளக்கூடிய இன்னும் ஒரு முக்கியமான கொள்கைபற்றி தெரிவிக்க விரும்புகிறேன். நான் ஏற்கெனவே சொன்னதுபோல், நமது மாகாணம் வியாபாரத் துறை யிலும் தொழிற் துறையிலும் பின்தங்கியிருப்பதாக அரசாங்கக் குறிப்புகள் தெரிவிக்கின்றன. அதைப் பார்க்கும்போது, இந்தத் துறையிலே எந்த வித பாதகமும் ஏற்படாத முறையில், அந்தந்த பொருள்களின் ட்ரான் சாக்ஷன்மீது வரி விதிப்பதற்குப் பதிலாக, எல்லாப் பொருள்களுக்கும் செய்ய முடியாது என்பதை நான் ஒத்துக்கொள்கிறேன். கூடியவரைக்கும் குறித்த அளவுக்குமேல் வியாபாரம் செய்யக்கூடியவர்களிடம் வருஷ மொன்றுக்கு ஒரு குறிப்பிட்ட தொகை கட்டக்கூடியவாறு லைசென்ஸ் முறையை ஏற்பாடு செய்யவேண்டும். குறிப்பாக பஞ்சு வியாபாரம் சம்பந்தப் பட்ட வரைக்கும் இப்படிப்பட்ட முறை இப்பொழுது இருக்கிறது. ஏதோ வருஷத்தில் ஒரு தடவை பணத்தைக் கொடுத்து லைசன்சு பெற்றுவிட்டால் பிறகு அவர்களுக்கு எந்தவிதமான தொல்லையும் இல்லை. இதனால் அவர்கள் தங்களுடைய வியாபாரத்தை நன்றாகக் கவனிக்கமுடியும்.

இன்னும் ஒன்று குறிப்பாகக் கவனிக்கமுடியும். நாம் ஒரு முனை விற்பனை வரி விதிக்கவேண்டுமென்ற அடிப்படையில் ஒரு சில பொருள் களுக்கு, அதிலும் குறிப்பாக இண்டஸ்ட்ரீஸ் ப்ராடக்டுகளுக்கு விதிக்க வேண்டுமென்ற கருத்து நமது அரசாங்கத்திற்கு இருப்பதாகத் தெரிகிறது. ஆனால், இந்தக் கருத்தின் பலனாக உற்பத்தி எந்த விதத்திலும் பாதிக்கப் படக்கூடாது. அதிலும் குறிப்பாக, நமது மாகாணத்தில் உற்பத்தி குறைவு என்ற நிலைமை இருக்கும்போது, வியாபாரமும் இங்கே ஓரளவுக்கு குறை வான நிலைமையில் இருக்கும்போது, ஒரு முனை விற்பனை வரியின் ரேட்டை அதிகமாக்கினால் பாதிக்கப்படும். வரியினுடைய மொத்த அளவு குறையக் கூடாது என்ற காரணத்திற்காக, மற்ற எல்லா மாகாணங்களையும்விட நம் ராஜ்யத்தில் வரி விதிப்பு குறைவாக இருந்தால்தான் சரியாக வியாபாரம் செய்யவேண்டும் என்ற ஒரு எண்ணம் வியாபாரிகளுக்குக் கண்டிப்பாக ஏற்படும். ஏனென்றால் அவர்களுக்கு இருக்கக்கூடியவையெல்லாம் ப்ராபிட் மோடிவ், அதாவது லாப நோக்கம் ஒன்றுதான். நமது நாடு செழிக்கவேண்டும், வியாபாரம் பெருகவேண்டும் என்ற அடிப்படையிலே அல்ல. ஆகவே, இந்தக் கருத்தையும் மனதிலே கொண்டு, நமது வியாபாரமும் தொழிலும் எந்த முறையிலும் பாதிக்கக்கூடாத அளவிலே அங்கே நமது திட்டத்தை வரி விதிப்பு முறையை அரசாங்கம் கையாள வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என்னுடைய வார்த்தையை முடித்துக் கொள்ளுகிறேன்.

**SRI M. P. SARATHI** : கனம் தலைவர் அவர்களே, இந்த விற்பனை வரி சம்பந்தமாக கொண்டுவரப்பட்ட வெட்டுப் பிரேரணையை ஆதரித்து எனது கருத்தைச் சொல்லலாம் என்று நினைக்கிறேன். முக்கியமாக விற்பனை வரி 1937-ல் அரை தம்படி என்று ஏற்பட்டு, அதற்குப் பிறகு ஒரு தம்படியாகி, பிறகு காலணாவாக உயர்ந்து, இப்பொழுது இரண்டு நயா பைசாவாக ஆக்கப்பட்டு, மேலும் மேலும் வளர்ந்துகொண்டே போகக்கூடிய நிலைமையில் இன்று டாக்டர் லோகநாதன் அவர்களுடைய ரிப்போர்ட் ஒரு கமிட்டிக்கு அனுப்பப்பட்டது. அந்தக் கமிட்டிக்கு அனுப்பப்பட்டு, அங்கு இதை ஒத்திவைக்கப்படக்கூடிய நிலைமைக்கு வந்திருக்கிறது. ஏனென்றால் அதில் இப்பொழுது குளறுபடியான நிலைமை ஏற்பட்டிருக்கிறது. செலக்ட் கமிட்டிக்குப் போனபிறகு, எங்கு பார்த்தாலும் வியாபாரிகளுடைய நிலைமை என்ன ஆகுமோ, எப்படி எப்படி ஒரு முனை விற்பனை வரி ஏற்படுமோ என்ற பீதியில் காய்கறி கடைக்காரர்களும், புஷ்பக் கடைக் காரர்களும் இப்படி சிறுசிறு வியாபாரிகளெல்லாம் மகஜர் அனுப்பியும் சட்டசபையைச் சுற்றி வட்டமிட்டுக்கொண்டிருக்கும் நிலைமை ஏற்பட்டிருக் கிறது. ஏன் ஒரு முனை விற்பனைவரி ஏற்படவேண்டுமென்று பல வியா பாரிகள் கோரியும், பல மகாநாடுகள் கூட்டியும், இந்த நிலைமை ஏற்பட் டிருக்கிறது. ஒரு முனை விற்பனைவரி என்று போடப்பட்டு,

[Sri M. P. Sarathi] [7th April 1958

வரும்படியில் 13 கோடி ரூபாய் வசூலிக்கக்கூடிய இந்த விற்பனை வரியில் ஒன்றும் குறையாமல், அதே ரீதியில் இதை ஏற்படுத்தி விடலாம் என்ற நோக்கத்தை வைத்துக்கொண்டு செய்வதால் இம்மாதிரி ஏற்படுகிறது என்று நான் நினைக்கிறேன். முக்கியமாக, விற்பனை வரி எதனால் ஏற்பட்டது ? இந்திய சர்க்கார் இந்த நாட்டில் மக்களுடைய நன்மையை நோக்கமாகக்கொண்டு மதுவிலக்குத் திட்டத்தை அமுலுக்குக்கொண்டுவர வேண்டுமென்றதற்காக அதை சென்னை சர்க்கார் மாத்திரம்தான் இப்பொழுது கொண்டுவந்திருக்கிறார்கள். இதற்காக வேண்டி விற்பனைவரி, ஏற்படுத்தப்பட்டது. எந்த மாகாணத்திலேயும் நல்லமுறையில் நடத்த முடியாத மதுவிலக்குத் திட்டத்தை எங்கள் மாகாணத்திலே முதன் முதலாகக் கொண்டுவந்தோம். அதற்காக நஷ்ட ஈடாகப் பணம் கொடுக்கவேண்டுமென்று அவர்களைக் கேட்டு அங்கே விற்பனை வரி இல்லாமலேயே செய்திருக்கலாம். ஆனால், அதற்குப் பதிலாக நாம் என்ன செய்திருக்கிறோம் என்றால், ஒரு தம்படியிலிருந்து இன்று நான்கு தம்படி வரை பெருக்கிக்கொண்டு போகிறோம். ஆகையால், வியாபாரிகளுடைய தொல்லை நாளுக்கு நாள் அதிகமாகப் போய்க் கொண்டிருக்கிறது. முக்கியமாக இப்பொழுது கமிட்டியில் அதைத் தீர ஆலோசித்து பல ஜில்லாக்களில் வியாபாரிகளெல்லாம் அந்தக் கமிட்டியின் முன் தங்களுடைய எண்ணத்தைத் தெரிவிக்கும்படி வரவழைத்து, அவர்கள் எண்ணத்தின்படி ஆலோசித்து இந்த ஒரு முனை விற்பனை வரியை ஏற்படுத்தினால், அதற்குப் பிறகும் வியாபாரிகள் தொல்லை இல்லாமல் இருக்கிறார்களா என்பதை அமைச்சர் அவர்களே முடிவு செய்யவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன். முக்கியமாக உணவு தானியங்களுக்கு விற்பனை வரி இருக்கக்கூடாதென்று இங்குள்ள அனைவரும் சொல்கிறோம். அதை சர்க்கார் கவனிக்கவேண்டும். அப்படியே உணவுப் பொருளுக்கு விற்பனை வரி விதிப்பதாக இருந்தாலும் 1%-க்கு மேல் விதிக்கக்கூடாது என்று கேட்டுக் கொள்ளவிரும்புகிறேன். சாதாரண மாக இன்று இந்த விற்பனை வரியினால் சிறு சிறு வியாபாரிகள் பலர் மிகுந்த கஷ்டங்களுக்கு உள்ளாகியிருக்கிறார்கள். கடைகளை மூடிவிட்டே தெருவில் சுற்றும்படியான நிலைமை ஏற்பட்டிருக்கிறது. இப்போது சிறு சிறு வியாபாரிகளைப் பாதிக்காத நிலைமை உண்டாகவேண்டும் என்பதற்காக டோடல் டர்ன்ஓவர் அதிகப்படுத்தியிருப்பது வரவேற்கத்தக்கதுதான் என்றா லும் இதனால் பெருமளவுக்கு நன்மை ஏற்படும் என்று சொல்லமுடியாது.

10–30 a.m. அதோடு லாரிகளில் சாமான்களை ஏற்றிச் செல்லும்போது அங்கங்கே அந்த லாரிகளை மடக்கி அது எங்கே போகிறது, அதிலுள்ள சாமான் என்ன என்பதாகவெல்லாம் பல கேள்விகளைக் கேட்டு ஒரு மணி இரண்டு மணி நேரத்திற்குமேல் வழியில் வரிசையாக நிறுத்திவிடுகிறார்கள். இதனால் வியாபாரிகளுக்கு நஷ்டம். லாரிக்காரர்களுக்கு தொந்தரவும் நஷ்டமும் உண்டாகிறது. இப்படிப்பட்ட கஷ்டங்களும், தொந்தரவுகளும் வியாபாரி களுக்கு இருந்துகொண்டிருக்குமானால் இந்தச் சர்க்காருக்கு நல்ல பெயர் கிடைக்காது என்று தெரியப்படுத்திக்கொள்ள விரும்புகிறேன். உண்மையி லேயே ஒரு சர்க்கார் நல்ல முறையில் மக்களுடைய ஆதரவைப் பூர்ணமாகப் பெற்று இயங்கவேண்டுமானால் ராஜ்ய மக்களுடைய இராஜ்ய வியாபாரி களுடைய நல்லெண்ணமும், ஒத்துழைப்பும் இருக்கவேண்டியது அவசிய மாகும். வருவாயை மாத்திரம் அதிகப்படுத்திக்கொள்ள வேண்டுமென்ற எண்ணம் இந்தச் சர்க்காருக்கு இருக்குமானால் அதற்கு வேறு எத்தனையோ வழிகள் இருக்கின்றன. உதாரணமாக ஒன்றைச் சொல்லிக்கொள்ள விரும்பு கிறேன். பத்திரிகையில் விளம்பரம் வருவதைப் பார்க்கிறோம். லட்சக்கணக் கான ரூபாய்கள் விளம்பரங்களினால் பத்திரிகை முதலாளிகளுக்கு வந்து கொண்டிருக்கிறது. அவர்கள் சிப்பந்திகளுக்காவது சரியான முறையில் ஊதியம் கொடுத்துக்கொண்டு வருகிறார்களா என்றால் அதுவும் இல்லை. கோடிக்கணக்காக சம்பாதிக்கிறார்கள். அவர்களுக்கு ஏன் அந்தப் பணத்தில் ரு பங்கு சர்க்காருக்குக் கிடைக்கும்படியாக வரி போடக்கூடாது என்று கேட்கிறேன்.

7th April 1958] [Sri M. P. Sarathi]

அதோடு இன்னொரு விஷயத்தைப்பற்றியும் இங்கே சொல்லவேண்டு மென்று விரும்புகிறேன். முன்பும் சொல்லியிருக்கிறேன். எண்ணெ உற்பத்திக்கு சென்டிரல் டாக்ஸ் விதித்திருக்கிறார்கள். நமது சர்க்காரும் 3% விதிக்கலாம் என்று கண்டிருக்கிறது. இப்படிச் செய்வார்களானால் குடிசைத் தொழில் என்ற முறையில் இன்றையதினம் இயங்கி வருகிற கைச் செக்கு, மாட்டுச் செக்கு எல்லாம் அழிந்துவிடக்கூடிய ஆபத்து ஏற்படும் என்று தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். ஆகையால் 1% வேண்டு மானால் எண்ணெகளுக்கு வரி விதிக்கலாம் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். முக்கியமாக மைசூரிலும், ஆந்திராவிலும் 1% தான் இருப்பதாகத் தெரிகிறது. இங்கு அதை 3% ஆகப் போடக்கூடாது என்று தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

சிறு வியாபாரிகளிடத்திலிருந்து விற்பனை வரி வசூலிப்பது இல்லை என்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். அப்படி ஒன்றும் வசூலிக்காமல் விடுவதாகத் தெரியவில்லை. சிறு சிறு கிராமங்களுக்குக்கூடச் சென்று திண்ணையில் கடை வைத்திருப்பவர்களுக்குக்கூட வரி போட்டுவிட்டுத்தான் வருகிறார்கள். பலவிதமான தொல்லைகளுக்கு—கணக்கை காட்டு, எடுத்துக் கொண்டுவா என்பதாக—உள்ளாக்குகிறார்கள். இது அனைவருக்கும் தெரிந்த விஷயம். இதையெல்லாம் கவனித்துத்தான் நான் வெட்டுப்பிரேரணை கொடுத்திருக்கிறேன். இதை எல்லோரும் ஆதரிக்க வேண்டுமென்பதாகக் கேட்டுக்கொண்டு நான் முடித்துக்கொள்கிறேன்.

**Sri A. MARIAPPAN** : கனம் சபாநாயகர் அவர்களே, கனம் மந்திரி அவர்கள் கோரியிருக்கும் மானியத் தொகையை ஆதரித்து நான் இரண்டொரு வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். கனம் அமைச்சர் அவர்கள் எத்தனையோ இலாக்காக்களை நல்லமுறையில் நடத்தி நல்ல பெயரை வாங்கியிருக்கிறார்கள் என்றாலும் இந்த விற்பனைவரி இலாகா சம்பந்தப்பட்ட வரையில் அவர்களுக்கு நல்ல பெயர் கிடையாது. அதற்குக் காரணம் விற்பனைவரி அதிகாரிகள் வியாபாரிகளை மரியாதையாக நடத்துவது இல்லை. எந்த இடங்களை எடுத்துக்கொண்டாலும் வியாபாரிகள் விற்பனைவரி காரியாலயத்திற்குப் போகும்போது உட்காரச் சொல்லி பேசுவதுகூடக் கிடையாது. அதுவும் ஏ.ஸி.டி.ஓ. என்பவர்கள் வியாபாரிகளை நடத்துகிற முறை அந்தப் பக்கங்களுக்குச் சென்று பார்த்தால் தெரியும். அவர்கள் நடந்து கொள்கிற முறையினால்தான் காங்கிரஸ் சர்க்காருக்கே இன்றைய தினம் கெட்ட பெயர் வந்து கொண்டிருக்கிறது. அதுவும் குறிப்பாக சேலத்தில் நடந்திருக்கும் ஒரு விஷயத்தைக் குறிப்பிட விரும்புகிறேன். ஒரு இடத்தில் 1957-ம் வருஷம் மார்ச்சுமீ 30உ-யில் கணக்குப் பார்த்திருக் கிறார்கள். மேலும் அந்தக் கணக்கு 1957-ம் வருஷம் ஏப்ரல்மீ 20உ-யில் சம்பந்தப்பட்ட அதிகாரிக்கு சர்வே செய்யப்பட்டிருக்கிறது. விற்பனைவரி அதன்பேரில் விதிக்கப்பட்டும் இருக்கிறது. ஆனாலும் அந்த வியாபாரி குறிப்பிட்டபடி கணக்குக் காட்டவில்லை. ஆறு மாதங்களுக்கு விற்பனைவரி கட்டாமல் மறைத்திருக்கிறார் என்பதாகத் தண்டிக்கப்பட்டிருக்கிறார்.

இந்த மாதிரியாக நம் ராஜ்யத்தில் பல தவறுகள் நடந்து கொண்டிருக் கின்றன. அதோடு செவ்வாய்ப்பேட்டை போன்ற இடங்களில் வாரம்தோறும் சந்தை கூடுகிறது. அதிகமாக வியாபாரம் ஆகக்கூடிய இடம். அங்கெல்லாம் இந்த அதிகாரிகள் மிகவும் தவறுதலான முறையில் நடந்து கொள்வதன் காரணமாக நமது வருமானமும் பாதிக்கப்படுகிறது. விவசாயிகள் பல தொந்தரவுகளுக்குள்ளாவதால் சர்க்காருக்கும் அதிகமான கெட்ட பெயர் உண்டாகிறது. அதிகமாக லஞ்சம் வாங்கவேண்டும் என்பதற்காகவே அந்த அதிகாரிகள் இம்மாதிரியான முறைகளை எல்லாம் கையாளுகிறார்கள்.

குறிப்பாக உணவுப் பொருள்கள் மீதுள்ள வரியை எடுத்து விடவேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன். உணவுப் பொருள்கள்மீது வரி விதிப்பதில் எவ்வளவோ சங்கடங்கள் இருக்கின்றன. செவ்வாய்பேட்டை போன்ற இடங்களை எடுத்துக்கொண்டால் உணவுப் பொருள்கள்மீது வியாபாரிகளுக்கு வரி வாங்க முடியவில்லை. பெண்கள் தலையில் அரிசி போன்ற சாமான்களை 10-40 a.m.

[Sri A. Mariappan] [7th April 1958

எடுத்துச்சென்று விற்பனை செய்கிறார்கள். சேலம் போன்ற நகரங்களில். அப்படிக்கொண்டு வந்து விலைக்கு கொடுக்கும்போது அவர்களுக்கு அதன் மீது விற்பனைவரி வசூலிக்க முடிவதில்லை. ஆகவே, உணவுப பொருள்கள் மீதுள்ள வரியை கண்டிப்பாக எடுத்துவிடவேண்டுமென்று ஒரு முறைகூட நான் கேட்டுக்கொள்கிறேன். அதற்குப் பதிலாக, எனக்கு முன் பேசிய நண்பர் அவர்கள் சொன்னதுமாதிரி பத்திரிகைகளில் கொடுக்கப்படும் விளம்பரங்களுக்கு பக்கம் ஒன்றுக்கு 1,000, 1,500 ரூபாய் என்று வாங்கு கிறார்கள். அதில் ரூபாய் ஒன்றுக்கு எட்டணு வரி விதித்தாலும் பாதக மில்லை. அம்மாதிரி வரி விதிக்க சர்க்கார் முன் வரவேண்டும். அதற்கு மாகாண சர்க்காருக்கு அதிகாரம் இருக்கிறதா இல்லையா என்று தெரிய வில்லை. அப்படி மாகாண சர்க்காருக்கு அதிகாரம் இல்லாவிட்டாலும்கூட, மாகாண சர்க்கார் மத்திய சர்க்காரை வற்புறுத்தி அப்படி விளம்பரங்களின் மேல் வாங்கக்கூடிய ரூபாய்க்கு வரி போடவேண்டுமென்று சொல்லி, அந்த வரி மூலம் உணவுப் பொருள்கள் மீது போடும் வரியை சரிக்கட்ட வேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக, கைத்தறிக்கு உபயோகப் படுத்தப்படும் ஜரிகைக்கு 2% வரி விதிக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அதை, வரியில்லாமல் செய்யவேண்டும், அப்படி செய்ய முடியாவிட்டால் அதற்கு ½% வரி போட்டால் போதும். "டைஸ்" சாயம் போன்ற பொருள்களுக்கும் வரி விதிக்கப்படுகிறது. அதற்கும் ஒரு முனை வரி விதிக்கப்படுகிறது. அதற்கு 6% வரி விதிக்கப்படுகிறது. அது அதிகமாகும். ஆகவே அதை 3% என்று குறைக்கவேண்டுமென்றும் கேட்டுக்கொள் கிறேன். ஹோட்டல் முதலாளிகளை எடுத்துக்கொண்டால் அவர்களுக்கு அநீதி, தீங்கு இழைக்கப்படுகிறது. அவர்களுக்கு என்ன வியாபாரம் நடக்கிறது என்று பரிசீலிப்பதில்லை. குத்து மதிப்பாக அவர்கள் இவ்வளவு கொடுக்க வேண்டுமென்று நிர்ப்பந்திக்கிறார்கள். சேலத்தில் பெரிய ஹோட்டல் முதலாளிகள் இன்று அவைகளை மூட வேண்டிய நிலையில் இருக்கிறார்கள். ஆகவே, சர்க்கார் ஹோட்டல் முதலாளிகளுக்கு விதிக்கப் படும் வரிகளை நன்கு பரிசீலித்து அது சரியானதா என்று பார்த்தபிறகு வரி விதிப்பதற்குண்டான நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள வேண்டு மென்றும் சர்க்காரை நான் கேட்டுக்கொள்கிறேன். குறிப்பாக, இந்த சேல்ஸ் டாக்ஸ் பில் ஒத்தி போடப்பட்டிருப்பதால் அமைச்சர் அவர்கள் நம் மாகாணத்தில் நல்ல முறையில் சுற்றுப்பிரயாணம் செய்து வியாபாரிகள் இந்த சேல்ஸ் டாக்ஸைப்பற்றி என்னென்ன குறைகள் கூறுகிறார்கள் என்று அறிந்து அவைகளை நன்கு பரிசீலித்து வியாபாரிகளுக்கு கஷ்டம் இல்லாத முறையில் வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டுமென்று அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன். வியாபாரிகளைப் பொறுத்த வரையில் ஒரு சிலரைத் தவிர மற்றவர்கள் வரி செலுத்துவதில் வருத்தப் படுவதில்லை. அவர்கள் நல்ல முறையில் வரி செலுத்திக்கொண்டுதான் இருக்கிறார்கள். தங்களுக்கு தீங்கு இழைக்கக்கூடாது, அதிகாரிகள் தங்களைக் கொடுமைப்படுத்தக்கூடாது என்றுதான் அவர்கள் கோரு கிறார்கள். ஆகவே, மீண்டும் சொல்லிக் கொள்கிறேன், இந்த விற்பனை வரி இலாகாவிற்கு வியாபாரிகள் சென்றால் அவர்களை அதிகாரிகள் மரியாதை யாக நடத்துவதற்குண்டான ஏற்பாடுகளை சர்க்கார் செய்யவேண்டும், அதற்கு ஏதாவது ஒரு தாக்கீது அனுப்பினாலும்கூட நன்றாகயிருக்கும் என்று நான் நினைக்கிறேன். அவ்வாறு செய்யவேண்டுமென்றும் அமைச்சர் அவர்களை நான் கேட்டுக்கொள்கிறேன் அதோடு ஏ.ஸி.டி.ஓ. போன்றவர்களுக்கு இன்னும் சற்று அதிக சம்பளம் கொடுத்து இன்னும் தரம் உயர்ந்த வர்களாக நியமிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். சர்க்கார் முதல் ஐந்தாண்டு திட்டம், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் இவைகள் மூலமாக மக்களுக்கும், வியாபாரிகளுக்கும் நன்மை செய்திருந்தாலும், இந்த விற்பனை வரி இலாகாவால் செய்யப்படும் அநீதி காரணமாக அக்கிரமம் காரணமாக வியாபாரிகள் இன்றையதினம் ஆளும் கட்சியை வெறுக்கிறார்கள். அதன் மீது அவர்களுக்கு வெறுப்பு ஏற்பட்டிருக்கிறது. நாம் விடுதலைக்காக போராடிய காலத்தில் ஆயிரம், லட்சம், கோடிக் கணக்கான பணம் கொடுத்து, நன்கொடை கொடுத்து உதவிய வியாபாரிகள் இன்றையதினம் அதே கட்சியை குறை கூறுவதோடு, இந்த விற்பனைவரி இலாகாவினர்

7th April 1958] [Sri A. Mariappan]

செய்யும் கொடுமை காரணமாக மிகவும் அல்லல் உருகுகிறார்கள். ஆகவே வியாபாரிகளுக்கு தகுந்ததொரு பரிகாரம் தேடவேண்டுமென்று அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொண்டு எனது உரையை முடித்துக்கொள்கிறேன்.

*SRI P. S. ELLAPPAN: தலைவர் அவர்களே, இந்த விற்பனை வரி சம்பந்தமாக எல்லோரும் அதை ஆதரித்துப் பேசினார்கள். நான் அதை ஆதரித்தோ அல்லது நிராகரித்தோ ஒன்றும் சொல்ல விரும்பவில்லை. எனக்கு சில சந்தேகங்கள் பொதுவாக இருக்கின்றன. அதைப்பற்றி தெரிந்துகொள்ள வேண்டுமென்பதுதான் என் ஆசை. 1926-ல் எம். கே. மைக்கேல் என்று சொல்லக்கூடியவர் சர்வெண்ட்ஸ் ஆப் இந்தியா சொஸைட்டியில் ஒரு அங்கத்தினராக இருந்தார். இந்தியாவும் சுயாட்சியும் என்று ஒரு புஸ்தகம் எழுதினார். அதன் விலை ஆறணாதான். சின்ன புத்தகம். அதற்கு ரைட்ஹானரபிள் ஸ்ரீ வி. எஸ். ஸ்ரீனிவாஸ சாஸ்திரியார் அவர்கள் முகவுரை எழுதியிருந்தார்கள். அதில் என்ன எழுதப்பட்டிருந்தது என்றால், நமது தேசத்தில் வரக்கூடிய வருவாயை வெள்ளையன் ஒவ்வொரு வருஷத்திலும் எந்தெந்த வழியில் பணத்தை எடுத்துக்கொண்டு போகிறான் என்பதுதான். நமது தேசத்திற்கு சுதந்திரம் கிடைத்துவிட்டால் பாலாக ஓடும், தேனாக பாயும் என்று சொல்பவர்களும் சொன்னவர்களும் இதைக் கவனிக்கவேண்டும். ரெவின்யூ மூலம் வரக்கூடிய வருவாய், 33 கோடி. மதுவால் வரக்கூடிய வருவாய் 18 கோடி. அபின், கஞ்சா இவைகளினால் வரக்கூடி வருவாய் $4\frac{1}{2}$ கோடி. உப்பில் இருந்துவரும் வருவாய் $7\frac{1}{2}$ கோடி. இப்படி, சகல செலவுகளும் போக இவ்வளவு ரூபாயை அவர்கள் இங்கிலாந்திற்கு கொண்டுபோகிறார்கள் என்று எடுத்துச் சொல்லி யிருக்கிறார்கள். இவ்வளவு ரூபாய்களை வெள்ளையன் லண்டனுக்கு எடுத்துச் செல்கிறானே, இது என்ன அநியாயம், எல்லோரும் சேர்ந்து இவர்களை விரட்டவேண்டாமா என்றெல்லாம் எழுதியிருந்தார். இப்பொழுது வெள்ளையனை விரட்டிவிட்டோம். அவனும் போய்விட்டான். ஆனால் அந்தப் பணம் இப்பொழுது எங்கே போயிற்று? என்று கேட்கிறேன். இதைத்தான் மக்களும் கேட்கிறார்கள். இப்பொழுது உப்புக்கு வரி, மிளகாய்க்கு வரி, புளிக்கு வரி என்றெல்லாம் போடுகிறார்கள். முன்பெல்லாம், ஒரு விவசாயி உழுதுவிட்டு வந்து ஒரு கடையில் சென்று கால் அணா கொடுத்துவிட்டு புகையிலை தா என்றால் இரண்டு முழம் புகையிலை கிடைக்கும். ஆனால் இப்பொழுது ஒரு அணாவிற்கு ஜான் அளவு புகையிலைகூட கிடைப்பதில்லை. இப்படியிருக்கிறது நிலைமை. மக்கள் படும் கஷ்டத்தைப்பற்றி சொல்ல முடியாது. ஆகவே, நான் அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன், விவசாயிகளை நல்ல முறையில் கவனிக்கவேண்டும் என்று இன்று நம் தொழில் மந்திரி அவர்கள் சொன்னார்கள், ஒரு ஸ்டோர்ஸில் ஒரு லட்சம் ரூபாய் கொள்ளைபோய்விட்டதென்று. ஓரணா, இரண்டணா என்று ஏழை மக்கள் தங்கள் உயிரை விட்டுகொடுக்கும் பணத்தை இப்படி கொள்ளை அடித்துக்கொண்டு போகிறார்கள் சிலர். இந்த அநியாயத்தை எங்கேபோய் சொல்வது? இவ்வளவு அதிகாரிகள், இவ்வளவு மந்திரிகள், இவ்வளவு எம்.எல்.ஏ.-க்கள் இருக்கும்போது வருஷா வருஷம் லட்சக்கணக்கில் ரூபாய் கொள்ளைபோகிறது. "குருடன் கடையில் அள்ளாதவன் கிடையாது" என்பது போல இருக்கின்றது லக்ஷக்கணக்கில் நஷ்டம் என்ற பெயரில் கொள்ளை போகும் சேதி. நான் தொழில் அமைச்சர் அவர்களைப்பற்றி குறைகூறவில்லை. அவரை சின்ன வயதில் இருந்து எனக்குத்தெரியும், ஸ்ரீ பி. என். சங்கரநாராயண ஐயர் அவர்களால் நிர்மாணிக்கப்பட்ட கோகலே ஹரிஜன காலனியில் நான் இருந்தபோது மந்திரியார் அவர்களை நான் நன்றாக அறிவேன். நமது தொழில் அமைச்சர் அவர்கள் மிகவும் நல்லவர். நான் அவரை தோத்திரம் செய்வதாக நினைத்துக்கொள்ளா தீர்கள். உண்மையிலேயே அவர் மிகவும் நல்ல மனம் படைத்தவர். நான் சொல்வது, மக்களின் பணம் மிகவும் ஜாக்கிரதையாக செலவழிக்கப்பட வேண்டும். அப்பணத்தை வீணாக்காமல் பார்த்துக்கொள்ள வேண்டு மென்றுதான் சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன். நான் எதிர்கட்சியில் இருந்து சொல்வதாக நினைத்துக்கொள்ளாதீர்கள். நாம் எல்லோரும் ஒன்றுதான். கொஞ்ச நாளில் எல்லாம் சரியாகப் போய்விடும். (பலத்த சிரிப்பு) இதோடு என் பேச்சை நிறுத்திக்கொள்கிறேன்.

**Sri M. R. KANDASWAMI MUDALIYAR :** தாற்காலிக சபாநாயகர் அவர்களே, நமது கனம் அமைச்சர் அவர்கள் கொண்டுவந்திருக்கும் இம்மான்யத்தை ஆதரித்து சிற்சில விஷயங்கள் சொல்ல ஆசைப்படுகிறேன். இந்த மான்யம் வரவேற்கத்தக்க மான்யம். நம் வருவாய், நமது பெரியவர்கள் சொன்னதுமாதிரி, காமதேனுவிற்கு சமானமாக, கற்பக விருக்ஷத்திற்கு சமானமாக எப்பொழும் வருவாயை வற்றாத ஊற்றாக கொடுக்கக்கூடிய மான்யமான இந்த மான்யத்தை நான் வரவேற்கிறேன். எனக்கு முன்னால் பேசிய அங்கத்தினர் அவர்கள் சில குறைகளைப்பற்றி சொன்னார்கள். அவர், வெள்ளைக்காரன் காலத்தில் அதிகப் பணம் லண்டனுக்கு சென்று கொண்டிருந்ததே, இப்பொழுது அவைகள் எங்கே போய்விட்டது என்று கேட்டார்கள். ஆனால் ஆங்கிலேயன் வரிகளைகொண்டு செல்லக்கூடிய காலங்களில் நமது நாட்டில் செய்யவேண்டிய பல வேலைகளையும் செய்யாமல் வரிகளை எல்லாம் கொண்டு சென்றான். ஆனால் இப்போது நாட்டினுடைய முன்னேற்றத்திற்காக நமக்கு கிடைக்கும் வருவாயைக்கொண்டு குறைந்த செலவினங்களை வகுத்துக்கொண்டு அதற்கு தகுந்த முறையில் நமது நாட்டிற்கேற்றவாறு பல திட்டங்களை வகுத்துக் கொண்டு அதை நிறைவேற்றுவதற்காக செலவு செய்துகொண்டிருக்கின்றோம். கனம் அங்கத்தினர்அவர்கள் இதை நினைத்துப் பார்க்க வேண்டும். ஆங்கிலேயன் இருந்த காலத்தில் நமது நாட்டுக்கு அவசியமான
10-50 a.m. பல துறைகளில் முன்னேற்றம் ஏற்படாமல் இருந்தது. அவைகளில் எல்லாம் இன்றைக்கு முன்னேற்றம் காண்பதற்காக விற்பனை வரி வசூலிக்கப் பட்டு வருகிறது. என்றால் விற்பனை வரியின் மூலம் கிடைக்கின்ற பணத்தை துர்விநியோகம் செய்யப்படுகிறதா என்பதை பார்க்கவேண்டும். எந்த வரியும் விதிக்காமல் நாட்டை ஆளமுடியாது. ஆயினும் இந்த விற்பனை வரியைப் பற்றி ஒரு சில அபிப்பிராய கருத்துக்கள் நிலவிவருகின்றன. காரணம் என்னவென்றால் வரிகளை வசூல் செய்யக்கூடிய அதிகாரிகள், தங்களுடைய அதிகாரங்களை துஷ்பிரயோகம் செய்து வருவதால் இந்த அபிப்பிராயம் நிலவி வருகிறது. எல்லா அதிகாரிகளும் இப்படி என்று சொல்லிவிட முடியாது. வியாபாரிகளை நிர்ப்பந்தம் செய்யவேகூடாது. வியாபாரிகளுக்குத் தொந்தரவே கொடுக்கக்கூடாது என்று சொன்னால் வியாபாரிகள் அரசாங்கத்தை ஏமாற்றுவதற்காக தவறான கணக்கைத்தான் வைத்துக்கொண்டிருப்பார்கள். எல்லா வியாபாரிகளும் அப்படியிருப்பார்கள் என்று சொல்ல முடியாது. ஒரு குறிப்பிட்ட அளவுக்குமேல் வருமானம் இருந்தால் அதன்படி சரியான கணக்கு காட்டாமல் அரசாங்கத்தை ஏமாற்றுகிறார்கள். இதற்காக சரியான கணக்கை கண்டுபிடிப்பதற்காக அதிகாரிகள் கடுமையான முறைகளை கையாளவேண்டியிருக்கிறது. சில அதிகாரிகள் வேண்டுமென்றே சில தப்புக்களை செய்கிறார்கள் என்பதை சொல்லுவதற்கு வருத்தப்படுகிறேன். இதன் காரணமாக அரசாங்கத்தின்மீது மக்களுக்கு துவேஷமும் ஏற்படுகிறது. நம்முடைய நாட்டு மக்களுடைய மனதில் இவ்விதம் ஒரு கருத்து தோன்றியிருக்கிறது. ஆகவே அதிகாரிகள் சரியான முறையில் வியாபாரிகளிடம் நடந்துகொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

(இச்சமயத்தில் மிஸ்டர் ஸ்பீக்கர் தலைமை வகித்தார்).

அதாவது ஸேல்ஸ் டாக்ஸ் ஆபிஸர்களில் ஒரு சிலர் கணக்கு சரியாக இல்லையென்றால் வியாபாரிகளுக்கு ஒரு அவதி கொடுத்து, வியாபாரிக்கு கணக்கு சரியில்லை என்ற விபரத்தை தெரியப்படுத்தி, வியாபாரிகள் அதன்பேரில் சொல்லக்கூடிய பதிலை தெரிந்துகொண்டு வரி விதிக்கவேண்டும் என்று இருக்கிறது. ஆனால் சில அதிகாரிகள் அப்படி செய்வதேயில்லை. வரிகளை அவர்களை கேட்காமலே விதித்து சிறிய வியாபாரிகளை கஷ்டப்படுத்துகிறார்கள். அவர்கள் கொடுக்கின்ற கணக்குகள் சரியில்லை என்று தெரிந்தால் வியாபாரிகளுக்கு தெரியப்படுத்தி, அவர்களுடைய பதிலை அறிந்த பிறகு வரி விதிப்பதாயிருந்தால் அதை யாரும் ஆட்சேபிக்க முடியாது. அவ்விதம் சில அதிகாரிகள் செய்யாமல் இருப்பதினால்தான் கஷ்டங்கள் ஏற்படுகிறது. சரியான முறையில் வரி விதிப்பதை ஆட்சேபிக்கமுடியாது. வரி விதிக்காமல் இந்த நாட்டை ஆளமுடியாது. அதோடு இந்த வியாபாரிகளும் நாட்டி

7th April 1958] [Sri M. R. Kandaswami Mudaliyar]

னுடைய நன்மையைக் கருதி தாங்களாகவே கொடுக்கவில்லை. பொது மக்களிடமிருந்து வாங்கக்கூடிய பணத்தைத்தான் அரசாங்கத்திற்கு கொடுக்க வேண்டும். ஆகவே அரசாங்கத்தை ஏமாற்றுமல் நாட்டினுடைய நன்மையைக் கருதி சரியான முறையில் கணக்குகளை வைத்துக்கொள்ள வேண்டும் என்று எல்லா வியாபாரிகளையும் கேட்டுக்கொள்கிறேன். முறையற்ற முறையில் வியாபாரிகள் நடக்கக்கூடாது என்றும் கேட்டுக் கொள்கிறேன். அதோடு, இதற்கு முன்னல் 10 ஆயிரம் ரூபாய்க்கு மேல் வியாபாரம் செய்யக்கூடியவர்களுக்கு வரி விதிக்கவேண்டும் என்று இருந்தது. இப்போது அது 5,000 ரூபாய்க்கு வந்திருக்கிறது. இப்போது பொருட்களின் விலை எல்லாம் அதிகமாக இருக்கின்ற காரணத்தால் இந்த தொகை மிகவும் குறைந்த தொகை. எளிதாக ஒவ்வொரு சிறிய வியாபாரிக்கும் வந்துவிடும். இதற்காக சிறிய வியாபாரிகள் கணக்கு எல்லாம் வைத்து பார்க்கவேண்டிய கஷ்டம் ஏற்படுகிறது. இந்த கஷ்டங்களை போக்குவதற்காக இப்போது 5 ஆயிரம் என்றிருப்பதை 10 ஆயிரம் என்று ஆக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன், இது நாம் சிறிய வியாபாரி களுக்கு செய்யக்கூடிய கடமை என்ற முறையில் இதை ஆலோசனை செய்து இவ்விதம் செய்யவேண்டும் என்று அமைச்சர் அவர்களை தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன். அடுத்ததாக, அச்சுத் தொழிலை நடத்தக்கூடியவர் களுக்கு விற்பனை வரி விதிக்கின்ற காலங்களில் அவர்கள் விலைக்கு வாங்கும் காகிதத்திற்கும் வரி விதிக்கப்படுகிறது. உதாரணமாக 25 ரூபாய்க்கு காகிதம் வாங்கி பிரிண்ட் செய்யும்போது அதற்கு கூலி 10 ரூபாய் என் றிருந்தால் இப்போது 25-ம் 10-ம் 35 ரூபாய் விற்பனை வரி விதிக்கப் படுகிறது. இது முறையல்ல. இவ்விதம் அவர்கள் விலைக்கு வாங்கக்கூடிய காகிதத்திற்கும் வரி கொடுக்கவேண்டியிருக்கிறது. ஆகவே இந்த முறை பிரஸ்காரர்களுக்கு தொந்தரவாக இருக்கிறது. ஆகவே இதை நீக்கிவிட்டு அவர்களுடைய பிரிண்டிங் சார்ஜு-க்கு மாத்திரம் வரி விதித்தால் நலமாக இருக்கும் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன். இவ்விதம் காகிதத்திற்கும் சேர்த்து வரி போடுவது அவர்களுக்கு இழைக்கப்படும் அநீதியாகும். ஆகவே விலைக்கு வாங்கக்கூடிய காகிதத்திற்கு டாக்ஸ் போடுவது என்பது சரியான முறையல்ல. ஆகவே அவர்களுடைய பிரிண்டிங் சார்ஜுக்கு மாத்திரம் வரி விதிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதோடு உணவுப் பொருள்கள்மீது வரி விதிப்பதைப்பற்றி பல மெம்பர்கள் ஆட்சேபம் தெரிவித்தார்கள். இந்த முறையில் எல்லோரும் சமதர்மமான முறையில் நடத்தப்படுகிறுர்கள். அதாவது இந்த வரி அரசன் முதல் ஆண்டி வரையிலும் கொடுக்கவேண்டியிருக்கிறது என்று சொல்லுகிறுர்கள். ஆனுல் இந்த உணவுப் பொருட்கள்மீது வரி விதிப்பதில் பெரிய வியாபாரி களுக்கு பாதகம் ஏற்படுகிறது. இதில் பெரிய வியாபாரிகளுக்கும் சிறிய வியாபாரிகளுக்கும் ஒரு மூட்டையின் பேரில் ஒரு ரூபாய், ஒன்றரை ரூபாய் வித்தியாசம் ஏற்படுகிறது. வரி விதிக்காமல் இருக்கின்ற வியாபாரிகள் குறைந்த விலைக்கு உணவுப் பொருட்களை விற்கிறுர்கள். அதே சமயத்தில் பெரிய வியாபாரிகளுக்கு இவ்விதம் விற்பனை செய்ய முடியாது. இவ்விதம் மூட்டை ஒன்றுக்கு ஒரு ரூபாய் ஒன்றரை ரூபாய் வித்தியாசம் வருகிறது. ஆகவே உணவுப் பொருட்கள்மீது வரி போடுவதை எடுத்துவிட்டால் பொது மக்களுக்கு ஒரு பெரிய உதவி செய்ததாக இருக்கும் என்று நான் அபிப்பிராயப்படுகிறேன். ஆகவே இதன்பேரில் வரியை பூராகவும் நீக்கிவிட வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதே முறையில்தான் பேப்பர்கள் வாங்கி பிரிண்ட் செய்வதில் பேப்பர்களின்மீது வரி போடக்கூடாது. அதே போன்றுதான் உணவுப் பொருட்கள் மீதுள்ள வரியையும் எடுத்துவிட வேண்டும். இவைகளை செலக்ட் கமிட்டியிலும் இதைப்பற்றி அமைச்சர் அவர்கள் நன்ருக பரிசீலனை செய்வார்கள் என்று நம்புகிறேன். அதோடு அதிகாரிகளை நல்ல முறையில் வியாபாரிகளிடத்தில் நடந்து கொள்வதற்கு அமைச்சர் அவர்கள் தகுந்த முறையில் நடவடிக்கைகள் எடுத்துக்கொள்வார்கள் என்று நம்புகிறேன். வியாபாரிகளை இந்த அதிகாரிகள் இம்சிக்கிறுர்கள் என்ற எண்ணத்தை போக்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டு என் சிற்றுரையை முடித்துக்கொள்கிறேன்.

SRI P. S. CHINNADURAI : மதிப்பிற்குரிய சபாநாயகர் அவர்களே, இந்த விற்பனே வரி சம்பந்தமான புதிய திட்டமானது பொறுக்கு கமிட்டியினுடைய பரிசீலனேயில் இருக்கின்ற காரணத்தால் இந்த மான்ய விவாதத்தில் அதிகமாக, விரிவாக பேசவேண்டும் என்று நான் விரும்பவில்லே. ஆனல் ஒரு விஷயத்தைப்பற்றி அரசாங்கத்தினுடைய
11-00 a.m. கவனத்திற்கு கொண்டுவர விரும்புகிறேன். அதை சொல்லவேண்டியது என்னுடைய கடமை என்று எண்ணுகிறேன். உணவுப்பொருட்கள்மீது வரி விதிக்கக்கூடாது என்று ஒவ்வொரு ஆண்டிலும் இந்த சபையில் பலதரப்பிலிருந்தும் அங்கத்தினர்கள் வற்புறுத்தி வந்திருக்கிருர்கள். இந்த ஆண்டிலேகூட இந்த மான்யத்தின்பேரில் பேசிய பல அங்கத்தினர்கள் இதனேக் குறித்து மிகவும் கடுமையாகப் பேசியிருக்கிருர்கள். ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்கள்கூட உணவுப் பண்டங்களின்பேரில் இந்த வரி விதிக்கக்கூடாது என்று வலியுறுத்திச் சொல்லியிருக்கிருர்கள், ஆனல் அரசாங்கத்தார், இந்த உணவுப் பண்டங்களின்பேரில் வரி விதிப்பை எடுத்துவிட்டால் அதனல் வருமானம் குறைந்துவிடும், அதற்கு என்ன செய்வது எனறு நினேக்கிருர்கள். இந்த உணவுப் பண்டங்களின்மீது விற்பனே வரி விதிக்கக்கூடாது என்று பலமுறை எடுத்துக்காட்டியதுண்டு. இப்பொழுது கொண்டு வரப்பட்டிருக்கிற விற்பனே வரி மசோதாவில் பல விஷயங்கள் விட்டுப்போய் இருக்கின்றன என்றுதான் எனக்கு தோன்றுகிறது. குறிப்பாக, பத்திரிகை (நியூஸ் பேப்பர்கள்) தொழிலே நடத்துபவர்கள் நிறைய சம்பாதியத்தை தேடிக்கொண்டிருக்கிருர்கள். ஒவ்வொருவரும் பல அடுக்கு மாளிகைகளேக் கட்டிக்கொண்டிருக்கிருர்கள் என்பதை நாம் அறிவோம். அவ்வளவு பெரிய அளவில் வருமானத்தைப்பெறும் பத்திரிகைத் தொழிலே நடத்துபவர்களுக்கு ஏதாவது விற்பனே வரி விதித்திருக்கிருர்களா என்று பார்த்தால் கிடையாது. அவர்கள் நிறைய விளம்பரங்கள் போடுவதன்மூலமாக வருமானம் சம்பாதிக்கிருர்கள். தவிர, தங்களுடைய பத்திரிகைகளே அதிகமாக விற்பனே செய்வதன் மூலமும் வருமானத்தைப் பெருக்கிக்கொள்கிருர்கள். அவர்களுடைய சிப்பந்திகளுக்குக்கூட போதுமான அளவு சம்பளம் கொடுக்காமல், கொள்ளே அடித்துக்கொண்டு போகிற முதலாளிகள் இந்த வரி விதிப்பிலிருந்து தப்பித்துக்கொள்ளக்கூடாது. திருத்த மசோதாவில் இவர்களுக்கு விற்பனே வரிபோடுவதற்கு ஏற்பாடு செய்திருந்தால் நன்ருக இருக்கும். இதைப் பற்றி இந்த அரசாங்கம் நன்ருக ஆலோசனே செய்து முடிவு எடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக் கொள்கிறேன்.

* SRI V. K. RAMASWAMY MUDALIYAR : கனம் சபாநாயகர் அவர்களே, விற்பனே வரி மான்யத்தின்பேரில் கொண்டு வந்துள்ள வெட்டுப் பிரேரணேயை ஆதரித்து ஒருசில வார்த்தைகளேச் சொல்ல விரும்புகிறேன். இந்த விற்பனே வரியானது முதன்முதலில் ராஜாஜி அவர்கள் முதலமைச்சராக இருந்தபொழுது, மதுவிலக்கினல் ஏற்பட்ட நஷ்டத்தை ஈடு செய்வதற்காக கொண்டுவரப்பட்டது, அதற்குப் பிறகு ரேட்டை அதிகரித்து, இந்த வரியானது "காமதேனு" என்று சொல்லும் அளவுக்கு விருத்தியடைந்துகொண்டு வந்திருக்கிறது. இதன் காரணமாக வருஷத்தில் 10 கோடி ரூபாய்க்குக் குறையாமல் சர்க்காருக்கு வருமானம் வந்துகொண்டிருக்கிறது. இந்த சட்டமானது சரிவர அமல் நடத்தப்பட்டு வருகிறதா என்பதையெல்லாம்பற்றி நாம் யோசிக்கவேண்டும். சில அதிகாரிகள் வியாபாரிகளே துன்புறுத்திக் கொடுமைப்படுத்தி வருவதாகவும் பல புகார்கள் அடிக்கடி வந்துகொண்டிருக்கின்றன. இன்னும் சில இடங்களில் பார்த்தால் இந்த வரியைக் கொடுக்காமல் இருப்பதற்காக "எவேஷன்" கையாளப்பட்டு வருவதாகவும், அதனல் லீக்கேஜ் இருப்பதாகவும் கேள்விப்படுகிறோம். வரிகளே நல்ல முறையில் விதித்து அவைகளே வசூல் செய்வதற்கும் தக்க எற்பாடு சர்க்கார் செய்ய வேண்டும். என்னேப் பொறுத்த மட்டில், சில சாமான்களுக்கு வரியைக் குறைத்துப்போட்டு, அதை நல்ல முறையில் வசூல் செய்தால், நாம் எதிர்பார்க்கிற அளவுக்கு மேலாக வசூலாகும் என்பதில் சந்தேகமில்லே. இதை சர்க்கார் நன்ருக யோசிக்கவேண்டும். தவிர, வரி கொடுப்பவர்

7th April 1958] [Sri V. K. Ramaswamy Mudaliyar]

களுக்கு அதிகமான தொந்திரவைக் கொடுக்க வழியும் தேடக்கூடாது. ஆனால் வரியை சரிவரக் கொடுக்காமல், சிலர் அதற்காக குறுக்கு வழியைக் கண்டுபிடித்து வரி கொடாமல் இருப்பதற்காக வேலை செய்தால் அவர்களைத் தண்டிக்கவேண்டியது நியாயம். இருந்தபோதிலும் வியாபாரி களுக்குத் தொந்தரவு கொடுத்து கணக்குகளைப் பறிமுதல் செய்வதோ அல்லது மற்ற சாக்குப்போக்குகளைச் சொல்லி அவர்களைத் துன்புறுத்தவோ செய்தால், வியாபாரத்தில அவர்களுக்கு உற்சாகம் இருக்காது என்பதைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். இந்த டாக்டர் லோகநாதன் ரிப்போர்ட்டை பற்றி அநேக அங்கத்தினர்கள் பேசினார்கள். இந்த சிபார்சுகளை உடனடியாக அமலுக்குக் கொண்டுவரும்படியான ஏற்பாடுகள் செய்திருந்த போதிலும், உள்ளே புகுந்து எல்லாவற்றையும் பார்க்கிறபொழுது, உடனே இதை அமலுக்குக் கொண்டுவந்தால் சில வியாபாரத் துறைகளிலே சர்க்காருக்கு அதிக நஷ்டம் ஏற்படும். தவிர நமது மாகாணத்தில் போட்டிருக்கும் வரிக்கும், மற்ற மாகாணங்களில் போட்டிருக்கும் வரிக்கும் வித்தியாசம் இருக்கிறது. அதனால் பல சிக்கல்கள் ஏற்படும். ஆகவே இதைத் தீர்க்காலோசனை செய்து, வருகிற ஆண்டிலே கொண்டுவரப் போவதாகச் சொல்லியிருக்கிறார்கள். இதை நான் பாராட்டுகிறேன். நன்றாக ஆலோசனை செய்து, பின்னர் ஏதாவது ஊழல்கள் இல்லாத படியும், நமக்குக் கிடைக்கக்கூடிய வருமானம் எவ்வளவு அதிகமாக கிடைக்குமோ அதற்கும் ஏற்பாடு செய்யும் முறையில் இதை அமலுக்குக் கொண்டுவரவேண்டும்.

டாக்டர் லோகநாதன் ரிப்போர்ட்டில் "டிரேட் லைசென்சை"ப் பற்றி சிபார்சு செய்திருப்பதைப் பார்க்கிறோம். முன்பு 5,000 ரூபாய் என்று நிர்ணயிக்கப்பட்டிருந்தது. டாக்டர் லோகநாதன் அதை 7,500 ரூபாய் ஆக்கவேண்டுமென்று சிபார்சு செய்திருக்கிறார்கள். நம்முடைய சர்க்கார் அதை ரூபாய் 4,000-ஆகக் குறைத்துப்போட்டு, லைசென்சு கட்டணத்தை 6 ரூபாயிலிருந்து 10 ரூபாயாக உயர்த்தியிருக்கிறார்கள். பொதுவாகப் பார்க்கப்போனால், டாக்டர் லோகநாதன் சிபார்சுகளில் எவை சாதகமாக இருக்கின்றனவோ அவைகளை ஏற்றுக்கொண்டும், சாதகமாக இல்லாதவைகளை புறக்கணித்திருப்பதாகவும்தான் தோன்றுகிறதேயொழிய, முன் இருந்த கட்டணம் என்ன, எப்படி இருந்தால் நல்லமுறையில் வசூல் செய்ய முடியும் என்பதையெல்லாம் யோசித்துப் பார்த்ததாகத் தெரியவில்லை. இப்பொழுது சாமான்கள் விலைவாசிகள் எல்லாம் உயர்ந்துவிட்டன. ஆகவே அந்த லிமிட்டை மேலும் குறைத்தால் டிரேடு லைசென்சு மூலம் நமக்கு வருமானம் வருமா, வராதா என்பதை யோசித்துப் பார்க்க வேண்டும். 4,000 ரூபாய் என்று போட்டால் சிறிய வியாபாரிகள் பாதிக்கப்படுவார்கள்.

அதே மாதிரித்தான் விற்பனை வரி சம்பந்தப்பட்டமட்டிலும், 10,000 ரூபாய் லிமிட் இருந்தது. டாக்டர் லோகநாதனும் அதே லிமிட்டைத்தான் சிபார்சு செய்தார்கள். ஆனால் நம்முடைய சர்க்கார் அதைக்குறைத்து 5,000 ரூபாயாக நிர்ணயித்திருக்கிறார்கள். இதை அப்படியே அமலுக்குக் கொண்டுவருவார்களேயானால் தினசரி சராசரியாக 14 ரூபாய்க்கு விற்பனை செய்பவர்கள்கூட இந்த வரிக்கு உள்ளாவார்கள். ஆகையால் சிறிய வர்த்தகர்கள் அதிகம் பேர் இதனால் பாதிக்கப்படுவார்கள். சிறிய கடை வைத்திருக்கும் பெண்பிள்ளைகள் எல்லோரும்கூட, அதாவது விறகுக் கடை, தோசைக்கடை, ஆப்பக்கடை வைத்திருப்பவர்கள்கூட இந்த வரி செலுத்தும்படியான கட்டத்திற்குள் வருவார்கள் என்பதை அமைச்சர் அவர்களின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். ஆகையால் இதை நன்றாக யோசித்து பழைய லிமிட்டையே கொண்டுவரலாம் அல்லது விலைவாசிகள் உயர்ந்திருப்பதால் அதை உயர்த்தலாமா என்பதைப் பற்றி யோசிக்கலாம். அதைக் குறைத்தால் சிறிய வர்த்தகர்கள் பாதிக்கப்படுவார்கள்.

டாக்டர் லோகநாதன் ரிப்போர்ட் பிரகாரம் 79 அயிட்டங்களுக்கு ஒருமுனை வரி போடவேண்டும் என்று சிபார்சு செய்திருக்கிறார்கள். அதை

[Sri V. K. Ramaswamy Mudaliyar] [7th April 1958

நம்முடைய சர்க்கார் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். சதவீதத்தையும் அதிகப் படுத்தியிருக்கிறார்கள். அதைப்பற்றியும் நாம் நன்றாக யோசிக்கவேண்டும். 79 அயிட்டங்களையும் ஒப்புக்கொண்டு வரியின் விகிதத்தையும் உயர்த்தினால், அதனால் சில வர்த்தகர்கள் பாதிக்கப்படுவார்கள் என்று சொல்ல விரும்புகிறேன். உணவு உற்பத்தியைப் பற்றி பல அங்கத்தினர்கள் குறிப் பிட்டார்கள். இந்த உணவுப் பொருள்களின்மீது எந்தவிதமான வரியும்
11-10 a.m. போடக்கூடாது என்பதுதான் என்னுடைய அபிப்பிராயம். பழங்கள், பதார்த்தங்கள், அரிசி, கோதுமை முதலிய உணவு பொருள்களுக்கு வரியிலிருந்து விலக்கு அளிக்கவேண்டும். டாக்டர் லோகநாதன் அவருடைய ரிப்போர்ட்டில் உணவுப்பொருள்களுக்கு ½ சதவிகிதம் வரி இருக்கவேண்டும் என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். நம்முடைய சர்க்கார் சில உணவுப் பொருள்களின்மீது 1 சதவிகிதமும், கோதுமை, பருப்பு, கேழ்வரகு முதலிய பொருள்களின்மீது 2 சதவிகிதமும் வரி போட்டிருக் கிறார்கள். உணவுப் பொருள்களிலேயே ஏன் வித்தியாசம் இருக்கவேண்டும் என்று எனக்கு தெரியவில்லை. உணவுப் பொருள்களின்மீது வரியே இருக்கக்கூடாது. அப்படி ஏதாவது வரி போட்டாலும் அது குறைந்ததாக இருக்கவேண்டும். இதில் வித்தியாசம் இருக்கக்கூடாது என்பது என்னுடைய அபிப்பிராயம்.

கமிஷன் ஏஜண்டுகள் 100 ரூபாய் லைசென்ஸ் கட்டணம் கொடுத்து லைசென்ஸ் வாங்கிக்கொண்டிருந்தார்கள். அவர்களிடமிருந்து விற்பனை வரி வசூலிப்பது என்றால் எப்படி வசூலிப்பது. அவர்கள் 100-க்கு இவ்வளவு சதவிகிதம் கமிஷன் என்று போட்டுக்கொண்டு வியாபாரம் செய்து வருகிறார்கள். அவர்களிடமிருந்து வரி வசூலிப்பது என்பதும் மிகவும் சிரமமாக இருக்கும். இவர்கள் விஷயத்தை நன்றாக பரிசீலனை செய்து பார்க்கவேண்டும் என்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

கடைசியாக, உணவுப் பொருள்கள், பண்டங்கள் இவைகளுக்கு வரி விலக்கு கொடுக்கவேண்டும் என்றும், நன்றாகப் பரிசீலனை செய்து, இந்த புது சட்டத்தை கொண்டுவரவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

MR. SPEAKER : Before I call upon the Hon. Minister, I have to mak an announcement. I am extending the time for withdrawal of nominations to the Public Accounts Committee and the Estimates Committee till 10 a.m. to-morrow morning. The Hon. Minister will now reply.

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் சபாநாயகர் அவர்களே, நான் பதில் உரையை துவங்குவதற்கு முன்னால் அகில இந்திய அடிப் படையில் நியமிக்கப்பட்ட கமிஷன் சொல்லியிருக்கின்ற ஒன்றிரண்டு விஷயங்களைக் குறிப்பிட விரும்புகிறேன்.

"It is true that all taxes are unwelcome and that no tax can be rendered popular by good administration"

என்று சொல்லப்பட்டிருக்கிறது. அந்த நிலைமையில்தான் நான் இந்த சபையின் முன்பு இருக்கிறேன் என்பதை தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன். எவ்வளவுதான் திறமையாக இலாகா நிர்வாகம் இருந் தாலும் வரி விதிப்பு காரணமாக அது 'பாபுலராக' இருக்க முடியாது. ஆகவே இந்த வரி விதிப்பு இலாகா நடத்துகின்ற முறையில் என்னென்ன குறைபாடுகள் இருக்கின்றன என்பதைப் பார்க்கும்போது இதை இரண்டு பிரிவுகளாகப் பிரித்து பதில் சொல்லாம் என்று நினைக்கிறேன். ஒன்று நிர்வாக முறையில் இருக்கும் கஷ்டங்கள், குறைகள் ; இரண்டாவது வரிவிதிப்பு முறையில் இருக்கும் கஷ்டங்கள், குறைகள், நிர்வாக இலாகாவில் இருக்கக்கூடிய கஷ்டங்களையும், குறைகளையும் பார்க்கும்போது, இதில் அமல் நடத்துவதில் ஏதாவது திருத்தங்கள் செய்ய முடியுமா என்பது, ஆலோசனை செய்யப்பட்டது. டாக்டர் லோகநாதன் அவர்கள் அறிக்கையில் கூறிய எல்லா யோசனைகளும் ஏற்றுக்கொள்ளப்பட்டன.

7th April 1958] [Sri R. Venkataraman]

'அஸெஸ்மெண்ட்' செய்பவர்கள் தனியாகவும், அப்பீலை பரிசீலித்து முடிவு செய்பவர்கள் தனியாகவும் இருக்கவேண்டும் என்று அவர்கள் சொன்னார்கள். இதை சர்க்கார் ஏற்றுக்கொண்டிருக்கிறது. 'அஸெஸ்மெண்ட்'-ல் ஏதாவது விருப்பு வெறுப்பு காரணமாக தவருக வரி விதிப்பு செய்து இருந்தாலும்கூட 'அப்பீல்லிங்'-ல் இருப்பவர்கள் எப்பொழுதுமே வரி விதிப்பில் ஈடுபடாமல் இருப்பதன் காரணமாக நன்ருக பரிசீலனை செய்து நீதி வழங்க முடியும் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இதற்கு மேல் 'அப்பலேட் ட்ரிப்யூனல்' ஒன்று வைத்திருக்கிருேம். அதற்குத் தலைமையாக ஒரு ஜில்லா ஜட்ஜ் இருக்கிருர். அதைப்பற்றி அங்கத்தினர்கள் பெருமையாக சொன்னார்கள். "அப்பலேட் ட்ரிப்யூனல் நன்ருக நடந்து வருகிறது, செம்மையாக விசாரிக்கின்றது, அங்கு எந்த விதமான குறைபாடும் இல்லை" என்று சொன்னார்கள். ஆனால் இப்பொழுது இருக்கின்ற ட்ரிப்யூனல் சென்னை நகரத்தில் இருக்கிறது. இன்னும் ஒரு ட்ரிப்யூனலை சென்னை ராஜ்யத்தில் வேறு ஏதாவது ஒரு இடத்தில் ஏற்படுத்தி அந்த பிராந்தியத்தில் உள்ள அப்பீல்களை விசாரிக்கும்படி ஏற்பாடு செய்ய வேண்டும் என்று சில அங்கத்தினர்கள் சொன்னார்கள். நாம் புதிதாக கொண்டுவந்திருக்கிற மசோதா நிறைவேற்றப்படுமானால் இந்த 'அஸெஸ்மெண்ட்' வேலை மிகவும் குறைந்துவிடும். 5,000 ரூபாயிலிருந்து 25,000 ரூபாய் வரை இருக்கக்கூடியவர்களுக்கு 'அஸெஸ்மெண்ட்' கிடையாது. அவர்களுக்கு 'ஸ்லாப் ரேட்' போடப்படும். மொத்தமாக ரூபாய் 5, 10, 20, 25 என்று போடப்படும். அப்பொழுது இவர்களுக்கு எவ்வளவு வருமானம் வருகிறது என்று கணக்கிட வேண்டிய தேவையில்லை. 'ஸ்லாப் ரேட்'டின் பிரகாரம் ஒருவர் 5,000 ரூபாயிலிருந்து 10,000 ரூபாய் பிரிவுக்குள் வருகிருரா அல்லது 10,000 ரூபாயிலிருந்து 20,000 ரூபாய் பிரிவுக்குள் வருகிருரா என்று பரிசீலனை செய்யவேண்டிய பிரச்னைதான் இருக்கும். ஆகையால் அப்பீல்கள் குறைந்து விடும் என்று நான் நம்புகிறேன். அப்பீல்கள் நிறைய இருக்குமானால் இரண்டு இடங்களில் ட்ரிப்யூனல்கள் வைத்து நடத்துவதற்கு ஏற்பாடு செய்யலாம். இல்லாவிட்டால் சென்னை நகரத்தில் இருக்கின்ற ஒரு ட்ரிப்யூனலே போதும். இவையெல்லாம் அனுபவத்தை ஒட்டி செய்யக்கூடிய காரியங்கள் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

'அஸெஸ்மெண்ட்' ஆபீசர்கள் சரியான முறையில் நடந்துகொள்வதில்லை என்று வருஷா வருஷம் சொல்வது வழக்கம். இந்த வருஷம் அதிகமாக புகார்கள் சொல்லவில்லை என்று பார்க்கும்போது எனக்கு சந்தோஷமாக இருக்கிறது. இந்த இலாகாவை நிர்வகிக்க ஆரம்பித்த காலத்தில் ஒவ்வொரு நாளும் புகார்கள் வந்து கொண்டிருந்தன. டாக்டர் லோகனாதன் அவர்கள் விசாரணை நடத்த ஆரம்பித்த காலத்திலிருந்து இந்த புகார்கள் குறைந்து விட்டன. இதற்கு காரணம் என்னவென்றால், இந்த சட்டத்தை அமுல் நடத்தும்போது எந்தவிதமான தொல்லையும் இருக்கக்கூடாது என்று நிர்வாக உத்தியோகஸ்தர்கள் உணர்ந்துகொண்டு விட்டதனால்தான். இதைத்தான் அரசாங்கம் விரும்புகிறது என்று அவர்கள் நன்ருக உணர்ந்திருக்கிருர்கள். இந்தப் புகார்கள் இல்லாத காரணத்தினல் தொல்லைகள் இல்லை என்று நான் நினைக்கிறேன். இதனல் அவர்கள் மனித இயல்பு மாறி தெய்வீகப் பிறவியாகி விட்டார்கள் என்று நான் சொல்லவில்லை. தவறுகள் இருந்தால் அதை சர்க்காருக்கு தெரிவிக்கும்படி கேட்டுக்கொள்கிறேன்.

நண்பர் மாரியப்பன் ஒன்றிரண்டு விஷயங்களை கூறினர்கள். அவர் எனக்கு இதுவரை இதைப்பற்றி ஏன் எழுதவில்லை என்று எனக்குத் தெரியவில்லை. தனிப்பட்ட அதிகாரி சரியான முறையில் நடந்துகொள்ளவில்லை என்றால், அதைப்பற்றி எனக்கு உடனடியாக எழுதினல் அதை நான் கண்காணிப்பதற்கு உதவியாக இருக்கும். பொதுவாக அதிகாரிகள் எல்லோரும் தவறு செய்கிருர்கள் என்று சொன்னல் அது சரியாகாது.

அவர்கள் உற்சாகம் குறைந்து விடும். அம்மாதிரி ஏற்படாமல் தனிப்பட்டவர் ஏதாவது தவறுகள் செய்தால் அதை உடனே சர்க்காருக்கு எடுத்துச் சொல்லவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

11-20 a.m. வரிவிதிப்பு முறைகளைப்பற்றி பேசப்பட்டது. ஆரம்பத்திலேயே நான் சொன்னேன். அதிகமாக பதில் சொல்லுவதற்கில்லை என்று. காரணம் என்னவென்றால் இந்த விஷயங்கள் பூராவும் செலக்ட் கமிட்டி முன்னால் விசாரணையில் இருக்கிறது. கமிட்டியில் பல சிறந்த வியாபாரிகளை கூப்பிட்டு அவர்களுடைய அபிப்பிராயங்கள் கேட்கப்பட்டன. ஏராளமானவர்கள் ஒரு முனை வரியே வேண்டும் என்றவர்கள் பல கட்ட வரியே நல்லது என்று சொன்னார்கள். உதாரணமாக சோடா விற்பவர்கள் பல கட்ட வரியே வேண்டும் என்றார்கள். அதேபோலே ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பாத்திர வியாபாரிகள், அலுமினிய பாத்திர வியாபாரிகள், சாயம் போடுபவர்கள், இன்னும் மற்றவர்கள் ஒரு முனை வரி வேண்டாம் என்று கூறினார்கள், ஆகவே இவர்கள் முன்பு கொண்டிருந்த அபிப்பிராயங்களை மாற்றிக் கொள்ளவேண்டியதாக ஏற்பட்டிருக்கிறது. இதேபோல சேம்பர் ஆப் காமர்ஸ்காரர்களும் பல கட்ட வரி இரண்டு பர்ஸண்டு போடுவதைக் காட்டிலும் ஒரு முனை வரியாக ஆறு அல்லது ஏழு பர்ஸண்டு போட்டால் வாங்குவதற்கு தயக்கம் ஏற்படும், கன்ஸியூமர் ரிஸிஸ்டன்ஸ் உண்டாகும் என்றார்கள். ஆகவே இதை மீண்டும் பரிசிலனை செய்து பார்த்துத்தான் திட்டவட்டமாக அபிப்பிராயம் சொல்லமுடியும் என்றார்கள். வியாபாரிகளின் விருப்பத்திற்கிணங்க நன்றாக அவகாசம் கொடுத்து முடிவு எடுப்பதற்காக ஒரு வருஷம் தள்ளிப் போடப்பட்டிருக்கிறது.

கனம் கோதண்டராமன் அவர்களுக்கு தன்னம்பிக்கையே குறைவு. பெரிய வியாபாரிகளெல்லாம் சொன்னதன்பேரில் சர்க்கார் மாற்றிவிட்டது என்றார்கள். அவர் செலக்ட் கமிட்டியிலேயே இருப்பவர். அங்கத்தினர்கள் எல்லாம் நன்றாக உணர்வார்கள். இது கமிட்டி முன்னால் வைக்கப்பட்டு அங்கத்தினர்களால் யோசனை செய்யப்பட்டு எடுக்கப்பட்ட முடிவு. ஆகவே அந்த அளவுக்கு இந்த பெருமையை கனம் கோதண்டராமன் அவர்களும் ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

SRI M. KALYANASUNDARAM : நீங்கள் இப்பொழுது இப்படி சொன்னதை வரவேற்கிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : வரி விதிப்பு சம்பந்தமாக கிளர்ச்சிக்கும், கடையடைப்புக்கும் ஏற்பாடு செய்கிறார்கள். இதற்கு அவசியமே இல்லை. மக்கள் அபிப்பிராயத்திற்கு இணங்க இதற்கென்று ஒரு தனி நிபுணரை போட்டு விசாரித்து கனம் அங்கத்தினர்களின் அபிப்பிராயங்களையும் கேட்டு, மேலும் வியாபாரிகள் சொல்லுவதையெல்லாம் கேட்டு நல்ல முறையிலே இதைச் செய்யவேண்டுமென்று முன்வந்திருக்கும் போது கிளர்ச்சிக்கு அவசியம் என்ன ? அபிப்பிராயங்களைச் சொல்ல வேண்டிய இடங்களிலே சொல்லியும் செலக்ட் கமிட்டி அங்கத்தினர்கள் மூலமாகவும் சொன்னாலே போதும். இதிலிருந்து எங்களுக்கு ஒரு சந்தேகம். இந்த கிளர்ச்சிகள் செய்வதைப்பார்த்தால் உண்மையிலேயே நியாயம் எந்த பக்கம் இருக்கிறது என்பதைப்பற்றி. உதாரணமாக லோகநாதன் அவர்கள் அறிக்கையில் சொன்னார்கள். இந்த நாட்டு செக்குகளுக்கு வரி விலக்கு கொடுப்பதுபற்றி. மில்களில் உற்பத்தியாகும் எண்ணெய் நாட்டு செக்கு எண்ணெய் என்று விற்கப்படுகிறது என்று இருந்தாலுங்கூட நாட்டு செக்கு பாதுகாக்கப்படவேண்டும் என்ற என் சொந்த அபிப்பிராயத்திற்கு இடங்கொடுக்க விரும்பினேன். ஆனால் செலக்ட் கமிட்டிக்கு 300 அல்லது 400 தந்திகள் வரவே ஓரளவு லோகநாதன் அவர்கள் சொல்லுவதில் உண்மை இருக்குமோ என்ற சந்தேகம் வளர்ந்தது. அதே போல்தான் இந்த ரூ. 5,000 பற்றியும் இதை டாக்ஸேஷன் என்கொயரி கமிட்டியின் சிபார்சு அடிப்படையில் செய்திருக்கிறோம். இதில் ஒரு தப்பான அபிப்பிராயங்கொண்டு இதற்கு ஒரு கிளர்ச்சி செய்வதிலிருந்து இந்த லிமிட்டில் உள்ள வியாபாரிகள் வரி விதிப்பிலிருந்து தப்புகிறார்களோ

7th April 1958] [Sri R. Venkataraman]

என்று அஞ்சவேண்டி இருக்கிறது. பரிசீலனை செய்து முடிவு செய்ய செலக்ட் கமிட்டி இருக்கிறது. இக் கமிட்டி முடிவு செய்த பிறகு இதை மேலும் பரிசீலிக்க சந்தர்ப்பங்கள் இருக்கின்றன. இதை நல்ல முறையிலே நடத்த வேண்டுமென்பது. நாட்டின் நிர்வாகத்தை நடத்துவது கஷ்டமான வேலை. அதற்கு வரி விதிப்பு என்ற கஷ்டமான காரியத்தை மேற்கொண்டு நடத்த வேண்டி இருக்கிறது. அதை மக்களிடத்திலே நல்ல முறையிலே செய்ய வேண்டுமென்பதே சர்க்காரின் நோக்கம் என்பதை சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

இந்த மானியக் கோரிக்கையின் சபை முன்னால் வைக்கும்போது சட்டத்திலே எந்த விதமான மாறுதலும் செய்யப்படவில்லை என்பதை அங்கத்தினர்கள் உணர்வார்கள். இதற்கு எந்த விதமான கிளர்ச்சியும் அவசியமில்லை. காய்கறிகாரர்கள், அரிசி வியாபாரிகள் மற்றவர்கள் தங்களுக்கு ஏதோ திடீர் என்று ஆபத்து வந்துவிட்டதாக நினைப்பது தவறு. ஒரு ஆபத்தும் வந்துவிடவில்லை. 1939-வது வருஷ சட்டம் நன்றாக நடத்தப்படுகிறது. புதிதாக கொள்கை பூர்வமாக நாங்கள் ஒரு மசோதாவை பரிசீலனையில் வைத்திருக்கிறோம். கொள்கை என்ன? இது இரண்டு விதமானது. ஒன்று சில பொறுக்கிய பண்டங்கள்மீது அதிக வரி விதிப்பது. அல்லது எல்லா பண்டங்களின் மீதும் குறைவான வரியை விதித்து வேண்டிய பொருளை ஈட்டுவது. இதில் எது செய்தாலும் நியாயத்திற்கு ஒத்தது என்பது பரிசீலித்து தீர்ப்பு செய்ய வேண்டிய விஷயம். இப்பொழுது நாம் நினைக்கும் சோஷலிஸ சமுதாய பாணியில் நிர்வாகத்தை நடத்தவேண்டும். அந்த அடிப்படையில் எல்லா மக்களும் தங்கள் தங்கள் கட்டணத்தை செலுத்துவார்கள் என்பதை ஒட்டி தான், அந்த அடிப்படையில்தான் பார்க்கப்படுகிறது. அந்த மாதிரி பல பண்டங்கள்மீது பல வரிகள் விதிப்பதுபற்றிய மசோதா செலக்ட் கமிட்டி முன்னால் பரிசீலனையில் இருக்கிறது.

பழைய நண்பர் திரு. எல்லப்பன் சொன்னார்கள், வரியெல்லாம் வசூலித்து அந்தக் காலத்தில் வெள்ளைக்காரன் எடுத்துக்கொண்டான், இப்பொழுது வரிவசூல் செய்வது எதற்கு என்றார்கள். திரு. எல்லப்பன் அவர்களுக்கு நான் ஞாபகப்படுத்த விரும்புகிறேன். 15 அல்லது 20 வருஷங்களுக்கு முன்னால் கோகுலம் ஹரிஜனங்களுக்கு உதவி செய்ய கால் காலணவாக சேர்க்க வேண்டியிருந்தது. ஆனால் இப்பொழுது நமது சர்க்கார் வரிவசூல் செய்து பெரிய அளவில் ஹரிஜனங்களுக்கு, படிப்பு, சுகாதாரம், வைத்தியம் இன்னும் பல துறைகளிலும் வசதிகள் செய்வதற்கு செலவிடுகிறார்கள். மேலும் உலக பொருளாதார கொள்கையை பார்க்கும்போதும் நன்றாக தெரியும். எல்லா நாடுகளிலும் இந்த விற்பனை வரி விதிக்கப்படுகிறது. நியாயமான வரி என்றுதான் நிபுணர்கள் கருதுகிறார்கள்.

கடைசியாக நண்பர் சின்னதுரை நியூஸ் பேப்பர்களுக்கு வரி போட வேண்டும் என்று சொன்னார்கள். ஆனால் அந்த அதிகாரம் மத்திய சர்க்காரைச் சேர்ந்தது, சென்னை சர்க்காருக்கு இல்லை என்று தெரிவித்துக் கொள்ளுகிறேன். அந்த யோசனையை அவர்கள் டெல்லியில் இருக்கும் தங்கள் பிரதிநிதிகளிடம் சொல்லி பார்லிமெண்டில் சொல்லி ஏற்பாடு செய்தால் அதனால் எங்களுக்கும் வருமானம் வருமானால் அதை வரவேற்கிறோம்.

கடைசியாக உணவுப்பொருள்கள் பற்றி. நெல்லை எடுத்துக்கொண்டால் சாதாரணமாக அது உற்பத்தியாகும் இடத்திலேயே 80 சத விகிதம் உட்கொள்ளப்படுகிறது. வியாபாரம் அதிகமாக நடப்பதில்லை. விவசாயிகள் பெரும் பகுதியை கூலியாகப் பெற்று உணவுக்கு உபயோகப்படுத்துகிறார்கள். இதில் ஒரு பர்சண்டு விகிதத்தில் சர்க்காருக்கு ரூ. 45 லட்சம் வருகிறது. அதே சமயத்தில் இந்த தொகையை விட்டுக்கொடுகக் கூடாதா என்று கேட்கப்படுகிறது. இதுவும் பரிசீலனை செய்யப்படும். இத்துடன் அங்கத்தினர்கள் இந்த மானிய கோரிக்கையை ஆதரிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

MR. SPEAKER : The question is—

" That the allotment of Rs. 1,40,86,400 under Demand VII—General Sales Tax and Other Taxes and Duties Administration be reduced by Rs. 100."

The cut motion was put and lost.

MR. SPEAKER : I now put the Demand to the vote of the House. The question is :—

" That the Government be granted a sum not exceeding Rs. 1,40,86,400 under Demand VII—General Sales Tax and Other Taxes and Duties Administration."

The Demand was put and carried and the Grant was made.

(2) DENAND X—STATE LEGISLATURE

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, on the recommendation of the Governor I move—

" That the Government be granted a sum not exceeding Rs. 23,51,700 under Demand X—State Legislature."

MR. SPEAKER : Motion moved—

" That the Government be granted a sum not exceeding Rs. 23,51,700 under Demand X—State Legislature."

I understand that all Opposition parties have agreed to support the cut motion standing in the name of the hon. Member Sri M. Kalyanasundaram. Sri M. Kalyanasundaram will now move his cut motion.

SRI M. KALYANASUNDARAM : Sir, I move—

" That the allotment of Rs. 23,51,700 under Demand X—State Legislature—be reduced by Rs. 100."

MR. SPEAKER : Cut motion moved—

" That the allotment of Rs. 23,51,700 under Demand X—State Legislature—be reduced by Rs. 100."

The motion and the cut motion are before the House for discussion.

1-30 a.m. SRI M. KALYANASUNDARAM : நம்முடைய குடியரசில் சட்டசபைகளும் பார்லிமெண்டும் மேலும் மேலும் முக்கியத்துவம் பெற்று வருகின்றன. அப்படியிருக்கும்பொழுது இந்த சட்ட சபையின் அந்தஸ்தை மேலும் மேலும் உயர்த்தக்கூடிய முறையிலும், நம்முடைய மக்களிடத்திலே சட்ட சபையின் நடவடிக்கைகள் பற்றியும் சட்ட சபை அங்கத்தினர்கள் பற்றியும் நன்மதிப்பு உயரக்கூடிய முறையிலும் இந்தச் சபையின் நடவடிக்கைகள் இருக்கவேண்டும். சபையினுடைய அதிகாரங்களும் இருக்கவேண்டுமென்பதில் எதிர்க்கட்சிகளைவிட சர்க்கார் பொறுப்பிலே இருக்கக்கூடியவர்களுக்குத்தான் பொறுப்பு அதிகம் என்பதை நான் எடுத்துக்காட்ட விரும்புகிறேன். அப்படி பார்க்கும்பொழுது இந்தச் சபையைப்பற்றி எடுக்கக்கூடிய முடிவுகளை அமைச்சர்கள் தங்களுடைய சொந்தப் பொறுப்பிலேயே எடுத்துவிடுவார்களேயானால்,

7th April 1958] [Sri M. Kalyanasundaram]

அது மிகவும் வருந்தத்தக்கது. கடந்த காலத்தில் அப்பேற்பட்ட மிக முக்கியமான ஒரு முடிவு எடுக்கப்பட்டு, அது இந்தச் சபையில் பலராலும், ஆளும் கட்சியைச் சேர்ந்த அங்கத்தினர்களாலும் கண்டிக்கப் பட்டது இந்தச் சபையின் ஞாபகத்தில் இருக்கும் என்று நான் நம்புகி றேன். சபை கூடவேண்டிய இடத்தை மாற்றுவது என்பது ஒரு சாதாரண மான விஷயமல்ல. அப்பேர்பட்ட ஒரு முடிவை அமைச்சர்கள் தங்கள் பொறுப்பிலேயே எடுத்து, சபை மவுண்டுரோடில் கூடிவந்ததை மாற்றி திடீரென்று இந்த இடத்தில் கூடுவதற்கு ஏற்பாடு செய்துவிட்டார்கள். அதனுல் ஏற்பட்ட பல கஷ்டங்களைப்பற்றி எடுத்துச் சொல்லிவந்திருக்கிரும். ஆனுல் இப்பொழுது இரண்டு வருஷங்கள் ஆகிவிட்டது தானே. இனி அதைப்பற்றி பேசுவதில் பயனில்லை என்று அங்கத்தினர்கள் விட்டுவிட் டார்கள். இம்மாதிரி ஒரு முடிவு எடுப்பதானது இந்தச் சபையின் சுதந் தரத்தை மதிப்பதாக ஆகாது என்பதை எடுத்துக்காட்ட விரும்புகிறேன். இதை ஒரு உதாரணமாகச் சொன்னேன். ஆகவே, இந்த டிபார்ட்- மெண்டு சுயேச்சையாக இயங்கவேண்டும். சபாநாயகர் பொறுப்பிலேயே பூரண அதிகாரங்களும் இருக்கவேண்டும். எடுக்கவேண்டிய முடிவு களில் அவருக்கே பூரண பொறுப்பும் அதிகாரமும் இருக்க வேண்டும். அப்பொழுதுதான் அங்கத்தினர்கள் அவர்களுடைய உரிமை களைப்பற்றி சபாநாயகருக்கு எடுத்துச் சொல்லவும், மேற்கொண்டு அவர் களுக்கு கிடைக்கவேண்டிய வசதிகளைப்பற்றி எடுத்துச் சொல்லவும், வசதி ஏற்படும் என்பதை நான் எடுத்துக்காட்ட விரும்புகிறேன். அதோடுகூட, இந்தச் சபையின் வேலைகளை துரிதமாக நல்ல முறையில் நடத்துவதற்கு கனம் அங்கத்தினர்கள் மட்டும் பொறுப்பு என்று நாம் கருத முடியாது. இந்தச் சபையின் நடவடிக்கைகள் இவ்வளவு பாராட்டத்தகுந்த முறை யில் நடைபெறுகிறது என்ருல், அதற்கு இந்த இலாகாவில் வேலை செய்யக் கூடிய சகல உத்தியோகஸ்தர்களும் சிப்பந்திகளும் பொறுப்பாளிகளாக ஆகிருர்கள். அப்படியிருக்கக்கூடிய சிப்பந்திகளின் பேரில் அமைச்சர்களோ அல்லது ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்களோ கண்காணிப்பு செலுத்துகிருர் கள் என்று ஒரு நிலைமை இருக்கக்கூடாது. இந்த இலாகா சம்பந்தப்பட்ட மட்டில் அவர்களை எல்லோரையும் சமமாக மதிக்கவேண்டும். அந்த எண்ணம் அவர்களுக்கு ஏற்படவேண்டுமானுல் இந்த இலாகா சபாநாயகரின் முழு பொறுப்பில் சுயேச்சையாக இயங்கவேண்டும். இவர்கள் சம்பந்தப்பட்ட உரிமைகளும் பிரச்சனைகளும் நிதி இலாகாவிற்கோ அல்லது பொது இலாகா விற்கோ போகவேண்டிய நிலைமை இருக்கக்கூடாது. அந்த நிலைமை இருக்கும் வரையில் இவர்களுக்கு தாங்கள் சாக்காரைச் சார்ந்திருக்கிரும் என்ற பயம் இருக்கத்தான்செய்யும். அம்மாதிரி சங்கடமான நிலைமையில் இந்த சிப்பந்திகள் இருப்பார்களேயானுல் இந்தச் சபையின் வேலைகள் நல்ல முறையில் நடப்பதற்கு குந்தகமாக இருக்கும். ஆகவே, இந்த இலாகா சபாநாயகரின் பொறுப்பிலே சுயேச்சையாக இயங்கவேண்டும் என்று பல முறை வற்புறுத்தி சொல்லி வந்தவர்களில் நானும் ஒருவன் என்ற முறையில், மீண்டும் இதை வற்புறுத்தி சொல்லுகிறேன். அதே சமயத்தில் எவ்வளவு சங்கடமான நிலைமையிலும் இந்த டிபார்ட்மெண்டைச் சேர்ந்த உத்தியோகஸ்தர்களும் ஊழியர்களும் இந்தச் சபையினுடைய நடவடிக்கைகள் நல்ல முறையில் நடப்பதற்கு ஆற்றிவந்திருக்கக்கூடிய சேவையை நான் பாராட்டாமல் இருக்கமுடியாது. அவர்களுக்கு என் நன்றியை தெரிவித்துக்கொள்ளுகிறேன். இதேபோன்று, அவர்களுக்கு மனக்குறை இருந்தபோதிலும், பல கஷ்டங்கள் இருந்தபோதிலும் இந்தச் சபையின் நடவடிக்கைகள் நன்று நடப்பதற்குரிய சேவையை செய்து, நமது தேசத்தின் லட்சியத்தைக் கருதி திறமையாக தொண்டாற்றி வரவேண்டும்மென்று நான் அவர்களை கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக இந்தச் சபையின் அங்கத்தினர்களுடைய எண்ணிக்கை யைப்பற்றி ஒரு விஷயத்தை அரசாங்கத்தின் கவனத்திற்கு கொண்டுவர விரும்புகிறேன். நம்முடைய சபையின் அங்கத்தினர்களின் மொத்த எண்ணிக்கை 205-ஆக இருந்துகொண்டிருக்கிறது. இந்த எண்ணிக்கையை மற்ற ராஜ்யங்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது, நம்முடைய ராஜ்யத்தி லுள்ள அங்கத்தினர்களின் எண்ணிக்கை மிக குறைவாக இருப்பது தெரிய வரும். அதுபற்றி நான் சில புள்ளிவிவரங்களை கொடுக்கிறேன். லோக்

[Sri M. Kalyanasundaram] 7th April 1958

சபைக்கு நாம் அனுப்பும் பிரதிநிதிகள் மொத்தம் 41. நம்முடைய சபைக்கு 205 பிரதிநிதிகளை தேர்ந்தெடுக்கிறோம். அதாவது ஒரு பார்லிமெண்டு அங்கத்தினருக்கு 5 அங்கத்தினர்கள் வீதம் நாம் இந்த சபைக்கு தேர்ந்தெடுக்கிறோம். இதை மற்ற ராஜ்யங்களோடு ஒப்பிட்டுப்பார்க்கலாம். மேற்கு வங்காளத்திலிருந்து தேர்ந்தெடுக்கப்படும் பார்லிமெண்டு அங்கத்தினர்களின் எண்ணிக்கை 34. அந்த ராஜ்யத்தில் சட்ட சபை அங்கத்தினர்களின் எண்ணிக்கை 238. அதாவது ஒரு பார்லிமெண்டு அங்கத்தினருக்கு 7 அங்கத்தினர்கள் வீதம் அவர்கள் சட்ட சபைக்கு தேர்ந்தெடுத்து அனுப்புகிறார்கள். அதேமாதிரி ஆந்திரப் பிரதேசத்தோடு ஒப்பிடலாம். நம்மை விட்டுபிரிந்த ஒரு பகுதி அந்த ராஜ்யத்தோடு சேர்ந்திருக்கிறது. அவர்கள் பார்லிமெண்டுக்கு 43 பிரதிநிதிகளை தேர்ந்தெடுக்கிறார்கள். சட்ட சபைக்கு 301 பிரதிநிதிகளை அனுப்புகிறார்கள். அதாவது ஒரு பார்லிமெண்டு அங்கத்தினருக்கு 7 அங்கத்தினர்கள் வீதம் சட்ட சபைக்கு தேர்ந்தெடுத்து அனுப்புகிறார்கள். அஸ்ஸாம் ராஜ்யத்தில் ஒரு பார்லிமெண்டு அங்கத்தினருக்கு 9 பிரதிநிதிகள் வீதம் சட்ட சபைக்கு தேர்ந்தெடுக்கிறார்கள். அதாவது ஒரு பார்லிமெண்டு அங்கத்தினருக்கு 9-லிருந்து 6 அங்கத்தினர்கள் வீதம் சட்ட சபைக்கு தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள் மற்ற ராஜ்யங்களில். நம்முடைய ராஜ்யம் ஒன்றில்தான், பெரிய ராஜ்யங்களுக்குள் சட்ட சபைக்கு பிரதிநிதித்துவம் குறைவாக இருக்கிறது. (கனம் ஸ்ரீ ஆர். வெங்கடராமன்—யு.பி. ராஜ்யத்தில்.) அது ரொம்பவும் பெரியது. ஆகையினாலே குறைந்திருக்கலாம். அப்படிப் பார்க்கும்பொழுது நம்முடைய ராஜ்யத்தில் ஒரு பார்லிமெண்டு அங்கத்தினருக்கு 5 அங்கத்தினர்கள் வீதம்தான் சட்ட சபைக்கு பிரதிநிதித்துவம் இருக்கிறது. ஆகையினால் இந்த எண்ணிக்கை ரொம்பவும் குறைந்திருக்கிறது. அமைச்சர் அவர்கள் யு.பி. ராஜ்யத்தைப்பற்றி சொன்னார்கள். அங்கு ஜனத் தொகை மிக அதிகம். அந்த ராஜ்யத்திலிருந்து 86 பார்லிமெண்டு அங்கத்தினர்கள் இருக்கிறார்கள். ஒரு அங்கத்தினருக்கு 6, 7 அங்கத்தினர்கள் வீதம் சட்ட சபைக்கு தேர்ந்தெடுத்தால் ரொம்பவும் எண்ணிக்கை அதிகமாகப் போய் விடும். அதன் காரணமாக இப்பொழுது அங்கே 430 பிரதிநிதிகள் சட்ட சபையில் இருக்கிறார்கள். அது பெரிய ராஜ்யமாக இருப்பதினால் அங்கே பிரதிநிதித்துவம் குறைவாக இருக்கலாம். ஆகவே, நம்முடைய ராஜ்யத்தில் சட்ட சபைக்கு பிரதிநிதித்துவம் மிக குறைவாக இருக்கிறது. இதன் பேரில் மந்திரி அவர்கள் நடவடிக்கை எடுக்கவேண்டும். ஒரு பார்லிமெண்டு அங்கத்தினருக்கு 6 சட்ட சபை அங்கத்தினர்கள் வீதம் பிரதிநிதித்துவம் இருக்கும்படி அங்கத்தினர்களின் எண்ணிக்கையை அதிகப்படுத்துவது மிகவும் அவசியமாக இருக்கிறது என்று நான் கருதுகிறேன். அதற்கு தகுந்த நடவடிக்கைகள் எடுக்கவேண்டுமென்று அமைச்சர் அவர்களை கேட்டுக்கொள்கிறேன்.

மற்றொரு விஷயம் நான் குறிப்பிட விரும்புவது என்னவென்றால், தேர்தல் சம்பந்தமான பிரிவைப்பற்றித்தான். இதற்கு வேண்டிய தொகையை இந்த மான்யத்தின் கீழ்கோருகிறார்கள். இந்த ஆண்டில் கூட இதற்காக ரூ 12 லட்சம் இந்தத் தலைப்பின் கீழ் கோரப்பட்டிருக்கிறது. இந்தத் தொகையை செலவழிக்கக்கூடிய அதிகாரிகளும், சிப்பந்திகளும் எந்த டிபார்ட்மெண்டின் கீழ் வேலை செய்கிறார்கள் என்றால், 'சீப் செக்ரடரியின்' கீழ் அவர்கள் வேலை செய்கிறார்கள். ஒன்று இந்த மான்யத்திலிருந்து இந்தத் தொகையைப் பிரித்து வேறு மான்யத்தோடு சேர்க்க வேண்டும். அல்லது இந்த மான்யத்தோடு இந்தத் தொகையையும் சேர்த்து கோரவேண்டுமென்றால், இந்த இலாகாவை 'லெஜிஸ்லேசர் டிபார்ட்மெண்டின்' கீழ் கொண்டுவரவேண்டும். தேர்தல் அதிகாரிகளும் அவர்களின் கீழ் வேலை செய்யக்கூடிய சிப்பந்திகளும் சட்ட சபை இலாகாவின் கீழ் கொண்டுவரப்பட்டுவிட்டால், தேர்தல், சட்ட சபை சம்பந்தமான எல்லா விஷயங்களும் ஒரே இலாகாவின் கீழ் இருக்கும். அதுவும் நிர்வாகத்தை ஒட்டி இல்லாமல் சுயேச்சையாக இருக்கும். என்னுடைய யோசனை என்னவென்றால் தேர்தல் அதிகாரிகளையும், சிப்பந்திகளையும் சட்ட சபை டிபார்ட்மெண்டோடு சேர்த்துவிடவேண்டுமென்பதுதான். இந்த ஆலோசனையை பரிசீலனை செய்யவேண்டுமென்று அமைச்சர் அவர்களை கேட்டுக்கொள்ளு

7th April 1958] [Sri M. Kalyanasundaram]

கிறேன். மேலும், சட்ட சபை அங்கத்தினர்களுக்கு இருக்கும் சில குறை 11-40 a.m.
களையும் எதிர்க்கட்சிகளுக்கு இருக்கும் காரியாலயங்கள் சம்பந்தமாக இருக்கும் சில கஷ்டங்களையும் கனம் அமைச்சர் கவனிக்கவேண்டும். இந்த அதிகாரம் பூராவும் இந்த சபையிடமே இருக்குமேயானால் நான் இதைப் பற்றிப் பேசவேண்டிய அவசியமே ஏற்பட்டிருக்காது. சட்ட சபையிலும் பூராப் பொறுப்பும் இல்லாததால் நான் இதைப்பற்றிப் பேசவேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்கிறது என்பதை நான் எடுத்துக் காட்டாமல் இருக்க முடியவில்லை. எதிர்க் கட்சிகளுக்கு காரியாலய இடங்கள் சமீபத்தில்தான் கொடுக்கப்பட்டன. அந்தக் காரியாலயங்கள் மிகவும் வசதிக்குறைவானவை யாக இருக்கின்றன. அங்கே உட்கார்ந்து அதிக நேரம் வேலை செய்ய முடியவில்லை. ராஜாஜீ ஹாலுக்குப் பக்கத்திலுள்ள கட்டிடம் எதிர்க் கட்சிகளுக்கு, காரியாலயங்களாக வைத்துக்கொள்வதற்காகக் கொடுக்கப்பட் டிருக்கிறது. அங்கே வேலை பார்ப்பது மிகவும் கஷ்டமாக இருக்கிறது. சட்ட சபை கூடும் சமயத்தில் எதிர்க் கட்சிகளுக்கு இங்கே தனி அறைகள் இல்லை. எதிர்க் கட்சித் தலைவர் ஒருவருக்குத்தான் ஒரு அறை கொடுக் கப்பட்டிருக்கிறது. காங்கிரஸ் கட்சிக்கு இங்கே அறை கொடுக்கப்பட்டிருக் கிறது. மற்றக் கட்சிகள் தனியாகக் கூடிப் பேசி இயங்கவேண்டுமென்றால், அதற்கு இங்கே இட வசதி செய்துகொடுக்கப்படவில்லை. இங்கே ஒவ்வொரு கட்சிக்கும் ஆபீஸ் இடவசதி தனித் தனியாக செய்துகொடுக்கப்படவேண்டும். மற்ற கட்சிகளுக்கு தனி அறைகள் கொடுக்கப்படாமல் இருக்கும்போது காங்கிரஸ் கட்சிக்கு நல்ல கட்டிடம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இதை நான் ஆட்சேபிக்கவில்லை. அவர்களுக்கு அந்த வசதியைப் பெறுவதற்கு உரிமை உண்டு. எங்களுக்கும் அந்த உரிமை உண்டு. எல்லாக் கட்சிகளுக்கும் இடவசதி செய்துகொடுக்கப்படவேண்டுமென்றுதான் நான் சொல்கிறேன். காங்கிரஸ் கட்சிக்கு டெலிபோன் வசதி இருக்கிறது. ' நாங்கள் 150 பேர் இருக்கிறோம் ' என்று காங்கிரஸ் அங்கத்தினர்கள் காரணம் சொல்லக் கூடும். அவர்களுக்கு இட வசதி செய்துகொடுக்கப்படவேண்டுமென்பதை நான் ஆதரிக்கிறேன். அதேபோல் மற்ற கட்சிகளுக்கும் இடவசதி செய்து கொடுக்கப்படவேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன். பல விஷயங்களில் நம் சட்ட சபை மற்ற ராஜ்யங்களுக்கு முன் உதாரணமாக இருக்கிறது. மற்ற சில ராஜ்யங்களில் ஆளும் கட்சியினரும் எதிர்க் கட்சி யினரும் சட்ட சபையில் ஒருவருக்கொருவர் நடந்துக்கொள்ளும் விதம் விநோதமாக இருக்கிறது. நம் ராஜ்யத்தில் நாம் அவ்வாறு நடந்துகொள்ள வில்லை. இந்த ராஜ்யத்தில், சட்ட சபையில் பல கட்சிகளின் அங்கத்தினர் களும், பேசும்போது கார சாரமாகப் பேசினாலும் ஒருவருக்கொருவர் பழகும்போது சுமுகமாகப் பழகுகிறார்கள். அப்படியிருக்கும்போது காரியா லய வசதிகளைச் செய்து கொடுக்கும் விஷயத்தில் கட்சிகளிடையே காட்டி யிருக்கும் தாரதம்மியத்தைப் போக்கி எல்லாக் கட்சிகளுக்கும் நல்ல காரியாலய வசதிகள் செய்துகொடுக்க வேண்டுமென்று கனம் அமைச்சரைக் கேட்டுக்கொண்டு என் வெட்டுப் பிரேரேபணையைப் பிரேரேபிக்கிறேன்.

SRI A. R. SUBBIAH MUDALIAR: கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மான்ய கோரிக்கைப் பிரேரேபணையை ஆதரிக்கிறேன். இப்போது சட்ட சபைக் காரியாலயம் ரொம்ப நன்றாக நடந்து வருகிறது. காரியாலய உத்தியோகஸ்தர்கள் சட்டசபை அங்கத்தினர்களுக்கு தங்கள் ஒத்துழைப்பைப் பூரணமாகக் கொடுக்கிறார்கள். அவர்களுடைய ஒத்துழைப்பு மிகவும் போற்றத்தக்கது. என் போன்ற புது அங்கத்தினர்களுக்கு அவர்கள் மிகவும் ஒத்தாசையாக இருக்கிறார்கள். நான் பல காரியாலயங்களைப் பார்த்திருக்கிறேன். சட்டசபைக் காரியாலய அதிகாரிகள் அவரவர்களுடைய கஷ்டங்களைத் தெரிந்துகொண்டு வேண்டிய உதவியை அளிக்கிறார்கள். இது மிகவும் திருப்திகரமான விஷயம். இவர்கள் என்போன்ற அங்கத்தினர் களுக்கு பல விஷயங்களைச் சொல்லிக் கொடுக்கிறார்கள். என் போன்ற வர்கள் 400 மைல்களுக்கு அப்பாலிருந்து இங்கே வந்திருக்கிறோம், நாங்கள் பள்ளிப் பிள்ளைகளைப்போல், இங்கே வந்து பல விஷயங்களைத் தெரிந்துகொள்கிறோம். புதிதாக பள்ளிக்குப் போகும் பிள்ளைகளைப்போல் என்போன்றவர்கள் சட்டசபைக்கு வந்திருக்கிறார்கள். சட்டசபைக் காரியாலய உத்தியோகஸ்தர்கள் கட்சி பேதம் பாராட்டாமல் எல்லாக் கட்சிகளின்

[Sri A. R. Subbiah Mudaliar] [7th April 1958

அங்கத்தினர்களுக்கு உதவி செய்கிருர்கள். இது மிகவும் போற்றத் தகுந்தது. சட்டசபைக் காரிய தரிசியின் முன்னிலையில் இந்த விஷயத்தை இங்கே சொல்வது உசிதமல்ல. இருந்தாலும் இதை நான் சொல்லாமல் இருக்க முடியவில்லே. சட்டசபைக் காரியாலயத்திலுள்ள உத்தியோகஸ்தர் களைப் போல மற்ற காரியாலயங்களிலுள்ள உத்தியோகஸ்தர்களும் செய லாற்றிலுல் ஜனங்களுக்கு எவ்வளவோ நன்மைகளைச் செய்யலாம்.

சர்க்காருக்கு ஒரு விஷயம் சொல்ல விரும்புகிறேன். ஒவ்வொரு வருட பட்ஜெட் கூட்டமும் மார்ச் மாதத்தில் நடத்தப்படுகிறது. விவசாயிகளாக இருக்கும் என்போன்ற அங்கத்தினர்களுக்கு இதனுல் பல கஷ்டங்கள் ஏற்படுகின்றன. மார்ச்சு மாதம்தான் அறுவடை நடக்கும். வருஷம் பூராவும் கஷ்டப்பட்டு சாகுபடி செய்த மகசூலை மார்ச்சு மாதம்தான் அறுவடை செய்யவேண்டும். மார்ச்சில் பட்ஜெட் கூட்டம் நடந்தால் எங்கள் தொழிலை நாங்கள் அப்போது கவனிக்க முடிவதில்லை; அப்போது அறுவடை நடப்பதை நாங்கள் மேற்பார்வை செய்ய முடிவதில்லே. ஆகவே பட்ஜெட் கூட்டத்தை இரண்டு கூட்டங்களாகப் பிரித்து ஜனவரியில் ஒரு கூட்டத்தையும் ஏப்ரலில் ஒரு கூட்டத்தையும் நடத்தலாம் என்று சொல்ல விரும்புகிறேன. ஜனவரியில் பட்ஜெட்டை சமர்ப்பித்துவிட்டு 'டோகன் கிராண்ட்' வாங்கிக்கொள்ளலாம். ஏப்ரலில் பட்ஜெட்டை விரிவாக டிமாண்டுவாரியாக விவாதிக்கலாம். நான் சுயநல எண்ணத்துடன் இவ்வாறு சொல்லவில்லே. நம் நாடு விவசாய நாடு. நம் நாட்டில் முக்கியமான தொழில் விவசாயம். ஆகவேதான் நான் இவ்வாறு கூறு கிறேன். டிமாண்டுகளை ஏப்ரலில் எடுத்துக்கொண்டு ஒவ்வொரு டிமாண்டை விவாதிப்பதற்கும் 3—4 மணி நேரம் கொடுக்கவேண்டும். ஒவ்வொரு டிமாண்டை விவாதிப்பதற்கும் 3—4 மணி நேரம் கொடுத்தால் எல்லோரும் தங்கள் கருத்துக்களைத் தெரிவிக்க முடியும். இப்போது சில டிமாண்டு களின் விவாதத்திற்கு நேரம் கொடுக்கப்படாததால் பல அங்கத்தினர்கள் தங்கள் கருத்துக்களைத் தெரிவிக்க முடியவில்லே. உதாரணமாக நீர்ப்பாசன மான்ய கோரிக்கையை விவாதிப்பதற்கு போதிய நேரம் கொடுக்கப் படவில்லே. அதன் காரணமாக பல அங்கத்தினர்கள் அந்த விவாதத்தின் போது தங்கள் கருத்துக்களைத் தெரிவிக்க முடியவில்லே. கோரிக்கைகளை விவாதிப்பதற்கு நான் கோருகிறபடி நேரம் கொடுத்தால் பட்ஜெட் கூட்டத்தின் காலம் 10 நாட்கள் அதிகரிக்கும். அவ்வாறு செய்தால், எல்லா அங்கத்தினர்களுக்கும், பேசுவதற்கு சந்தர்ப்பம் கிடைக்கும்.

மேலும், கேள்வி நேரத்தையும் அதிகரிக்க வேண்டும். இப்போது நிர்ணயிக்கப்பட்டிருக்கும் 1 மணி நேரம், கேள்விகளுக்குப் போதவில்லே. ஆகவே கேள்வி நேரத்தை அதிகரிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள் கிறேன்.

இப்போது கனம் அங்கத்தினர்களுக்கு சில சர்க்கார் பிரசுரங்கள்தான் கொடுக்கப்படுகின்றன. சர்க்கார் பிரசுரங்களில் முக்கியமான எல்லாப் பிரசுரங்களும் கனம் அங்கத்தினர்களுக்குக் கொடுக்கப்படவில்லே. சர்க்கார் அலுவலகத்தில் எல்லா முக்கியமான சர்க்கார் பிரசுரங்களேயும் போதிய எண்ணிக்கையில் அச்சடித்து சட்டசபை அங்கத்தினர்கள் எல்லோருக் கும் அவைகளின் பிரதிகளைக் கொடுக்க வேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக் கொள்கிறேன்.

சட்டசபை லேப்ரரி ரொம்ப நன்ருக நடக்கிறது. சபையில் ஒரு விஷயத்தைப் பற்றிப் பேச வேண்டியிருந்தால், அந்த விஷயம் சம்பந்தப்பட்ட எல்லா விவரங்களும் லேப்ரரியில் கிடைக்கின்றன. இப்போது லேப்ரரி கோட்டைக்கு வந்திருக்கிறது. இங்கே லேப்ரரியில் விளக்கு வசதிதான் கொஞ்சம் குறை வாக இருக்கிறது. லேப்ரரியில் இருக்கும் உத்தியோகஸ்தர்கள் கனம் அங்கத்தினர்களுக்கு வேண்டிய உதவியை அளிக்கிருர்கள்.

இன்னென்று சொல்ல விரும்புகிறேன். இப்போது பார்லிமெண்ட் அங்கத்தினர்களுக்கு ரெயில்வே பாஸ்கள் கொடுக்கப்படுகின்றன. மத்திய சர்க்கார் அவர்களுக்கு ரெயில்வே பாஸ்கள் கொடுக்கிருர்கள். சட்டசபை

7th April 1958] [Sri A. R. Subbiah Mudaliar]

அங்கத்தினர்களுக்கும் ரெயில்வே பாஸ்கள் கொடுத்தால், நாங்கள் எங்கள் தொகுதி சம்பந்தப்பட்ட குறைகளை மந்திரிகளிடம் தெரிவிப்பதற்கும், செக்ரடேரியட் லெவலில் முறையீடுகளை (ரெப்ரெஸெண்டேஷன்ஸ்) செய்யவும் அடிக்கடி சென்னைக்கு வரமுடியும். இது சம்பந்தமாக, பல சட்டசபைகளில் பலர் பேசியிருப்பதாகத் தெரிகிறது. சட்டசபை அங்கத்தினர்களுக்கு ரெயில்வே பாஸ்கள் கொடுத்தால் சர்க்காருக்கு அதிகச் செலவு ஏற்படும் என்று சொல்லப்படக்கூடும். அவ்வளவு செலவு ஏற்படும் என்று நான் நினைக்கவில்லை. சட்டசபை அங்கத்தினர்களுக்கு ரெயில்வே பாஸ்கள் கொடுக்கும் முறையை பரீட்சார்த்தமாக இரண்டு–மூன்று வருஷங்களாவது அமல் நடத்தலாம் என்றும், அந்தக் காலத்தில் இதன் மூலம் அரசாங்கத்திற்கு அதிகச் செலவு ஏற்பட்டால் பிறகு இந்த முறையை ரத்து செய்துவிடலாம் என்றும் அரசாங்கத்திற்குச் சொல்லிக் கொள்கிறேன். இந்தியாவில் எல்லா இடங்களிலும் பிரயாணம் செய்வதற்கு ரெயில்வே பாஸ்களை இந்த சட்டசபை அங்கத்தினர்களுக்கு கொடுக்க வேண்டுமென்று நான் சொல்லவில்லை. சென்னை ராஜ்யத்தில் மட்டும் பிரயாணம் செய்வதற்கு ரெயில்வே பாஸ்களை எங்களுக்கு வழங்கினால் போதும் என்றுதான் சொல்கிறேன். அவ்வாறு செய்தால், நாங்கள் அப்போதைக்கப்போது சென்னைக்கு வந்து எங்கள் தொகுதிகள் சம்பந்தமான முறையீடுகளை கனம் மந்திரிகளிடமும் ஸெக்ரெடேரியட்டிலுள்ள அதிகாரிகளிடமும் செய்ய முடியும்.

மேலும், எங்களுக்கு இப்போது கொடுக்கப்படும் தினப் படியை (டி.எ.) உயர்த்த வேண்டுமென்று பலர் சொல்கிறார்கள். அதை நான் சொல்லக் கூடாது. மற்ற பலர் சொல்கிறார்கள். அவர்கள் சொல்வது சரி என்று தான் தோன்றுகிறது. அதை கவனிக்க வேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன்.

"மன்த்லி ஸாலரி ஆப் செக்ரடேரியட் ஸ்டாப்" என்பதைப்பற்றி சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். அவர்களுடைய அலவன்ஸ் பற்றி நான் ஒரு கேள்வி கேட்டேன். "கேள்வி மூலமாகக் கேட்க வேண்டாம்; நானே நேராகப் பதில் கொடுக்கிறேன்" என்று கனம் சபாநாயகர் அவர்கள் எனக்குப் பதில் அனுப்பியிருந்தார்கள். 11-50 a.m.

MR. SPEAKER: டியானால், இப்பொழுது என் கேட்கிறீர்கள்?

SRI A. R. SUBBIAH MUDALIAR: "ஓவர்டைம் பே" கொடுக்காமல் ஏதோ நான்கு மணி நேரம் வேலை பார்ப்பதற்கு ஒன்றரை ரூபாய் டீ அலவன்ஸ் மாதிரி கொடுக்கிறார்கள், என்பதைக் கேட்கும்போது சற்று வருத்தமாக இருக்கிறது. இந்தக் காரியாலயத்தில் இருப்பவர்கள், இரவு பத்து மணிக்குப் பேசினாலும் அவர்கள் இருக்கிறார்கள். அவர்களை நான் ஏதோ தூக்கி வைத்துப் பேசுவதாக யாரும் நினைக்கக்கூடாது. விடியற் காலை எட்டு மணிக்கும் அவர்கள் காரியாலயத்தில் வேலை செய்வதைப் பார்க்கிறோம். இவ்வளவு ஒத்துழைக்கும் ஆட்களுக்கு எக்ஸ்ட்ரா அலவன்ஸ் என்ற முறையில் செஷன் காலத்தில் (during the time of the session) கொடுக்கப்பட்டால் நல்லது. ஒரு ப்ராஜெக்ட் ஏரியாவுக்குச் சென்று பார்த்தால் அங்கே வேலை செய்பவர்களுக்கு ப்ராஜெக்ட் அலவன்ஸ் என்ற முறையில் அலவன்ஸ் கொடுக்கப்படுகிறது. அதேமாதிரி சட்டசபை அலுவலகத்தில் வேலை பார்க்கிறவர்களுக்கும் எக்ஸ்ட்ரா அலவன்ஸ், செஷன் காலத்தில் கொடுக்கலாம்.

காலை 11 மணியிலிருந்து மாலை 5 மணி வரையில் வேலை பார்த்து விட்டு, அதற்குப் பிறகு இரவிலும் வேலை பார்த்தால், டைபிஸ்டுகளாக இருந்தால் ஒன்றரை ரூபாய் வீதமும், ஆனால், அட்டெண்டர்களாக இருந்தால் ஒரு ரூபாய் வீதமும் கொடுக்கப்படுகிறது. கணக்கு கேட்டதில் கணக்கு அனுப்பியிருக்கிறார்கள். அவர்கள் ஒன்றும் என்னிடம் முறையிடவில்லை—நான் அவர்களைப் பார்க்கும்போது அவர்களுடைய நிலைமையைக் கண்டு ரொம்பப் பரிதாபப்படுகிறேன். 10, 12 மணி நேரம் வேலை வாங்கிவிட்டு ஒரு ரூபாய் அளவுக்கு டீ அலவன்ஸ் மாதிரி கொடுத்தால் பிரயோஜனம் இல்லை என்றும், ப்ராஜெக்ட் அலவன்ஸ் மாதிரி கொடுப்பது நலம் என்றும் நினைக்கிறேன்.

[Sri A. R. Subbiah Mudaliar] [7th April 1958

எந்தப் பார்ட்டிக்கும் ரூம் வசதி இல்லை. கௌன்சில் கஷ்டப்படுகிறோம். நான் பொதுப்படையாகச் சொல்கிறேன். ஒவ்வொரு பார்ட்டிக்கும் ஒரு அரை இருப்பது நல்லது என்பது என்னுடைய கோரிக்கை. நான் பேசுவதற்குச் சந்தர்ப்பம் அளித்த உங்களுக்கு என்னுடைய வந்தனத்தைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

**Sri P. S. CHINNADURAI :** மதிப்பிற்குரிய சபாநாயகர் அவர்களே, நம்முடைய அரசியல் சட்டத்திலே லெஜிஸ்லேடிவ் கவுன்சிலுக்கு இடம் அளிக்கப்பட்டிருந்தாலும், என்னைப் பொறுத்தவரையில் நான் கூறுவேன்— ஜனநாயக சம்பிரதாயங்களுக்கேற்ப நாம் சரிவர இந்த சட்டசபை அலுவல்களை நடத்தவேண்டுமானால் மக்களுக்கு உரிய பூரண உரிமைகள் கொடுக்க வேண்டுமானால், லெஜிஸ்லேடிவ் கவுன்சில் என்பது அனாவசியம் என்று நான் இங்கே சொல்ல விரும்புகிறேன். லெஜிஸ்லெடிவ் கவுன்சிலுக்காக செலவழிக்கிற செலவு அவசியம் இல்லாத செலவு என்பது என்னுடைய நிச்சயமான அபிப்பிராயம்.

"அதிலே மிகப்பெரிய அறிவாளிகள், இவர்கள் எல்லாம் வந்திருப்பதற்கான வசதி செய்திருக்கிறோம்; அத்தகைய அறிவாளிகளை வேண்டாம் என்று கூறுகிறீர்கள்? அப்படி அவர்கள் இருப்பது நல்லதுதானே ?" என்று கேட்டால் நான் சொல்வேன் அவர்கள் எல்லாம் உண்மையிலேயே மேதைகளாக இருந்தால், அவர்கள் இந்த நாட்டின் அரசியலை நடத்துவதற்கு அவசியமானவர்கள் என்று மக்கள் கருதுவார்களானால், நிச்சயமாக அவர்கள் தேர்தல் மூலமாகவே மக்களை அணுகி, அந்தத் தேர்தலிலேயே அவர்கள் வெற்றி பெறுவதற்கு வாய்ப்பை உண்டாக்கிக் கொள்வதற்கு அவர்களால் இயலும் என்று நான் குறிப்பிட விரும்புகிறன்.

லெஜிஸ்லேடிவ் கவுன்சிலுக்கு தேர்தல் இருக்கவேண்டியதில்லை. தேர்தல் இருப்பதினால் பலவிதமான ஊழல்கள்கூட நடைபெறுகின்றன என்பது என்னுடைய அபிப்பிராயம். ஆகையால், லெஜிஸ்லேடிவ் கவுன்சில் இல்லாமல் செய்வதற்கு ஒரு ஏற்பாடு செய்ய முடியுமானால் அதைத் தான் செய்ய முன்வரவேண்டுமென்று இந்த ராஜ்ய அரசாங்கத்தை நான் மிகவும் கேட்டுக்கொள்வேன்.

படித்தவர்கள் அதிகமாக உள்ள கேரளம் போன்ற ராஜ்யத்திலேகூட இம்மாதிரி லெஜிஸ்லேடிவ் கவுன்சில் என்று ஒன்று இல்லை. லெஜிஸ்லேடிவ் கவுன்சில் என்று ஒன்று அவசியம் இருந்துதான் ஆகவேண்டும் என்று எதும் கிடையாது என்று நான் மறுபடியும் வலியுறுத்திச்சொல்ல விரும்புகிறேன்.

லெஜிஸ்லெடிவ் கவுன்சில் என்பதை அடியோடு எடுத்துவிடுவதற்கு ஏதாவது தடையாக இருந்து, அவசியம் அதை வைத்துக்கொள்ளத்தான் வேண்டும் என்று சொன்னால், அதை இன்னும் பிரதிநிதித்துவம் உள்ளதாக ஆக்கவேண்டும் என்பதுதான் என்னுடைய அபிப்பிராயம் ஆகும். உதாரணமாக, ஸ்தல ஸ்தாபனத் தொகுதிகள் என்று நிர்ணயிக்கப்பட்டு, அந்த ஸ்தல ஸ்தாபனத் தொகுதியிலேயிருந்து அங்கத்தினர்கள் லெஜிஸ்லேடிவ் கவுன்சிலுக்குத் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். ஆனால் "ஸ்தல ஸ்தாபனங்கள்" என்ற அந்த வரிசையிலே க்ளாஸ் 2 பஞ்சாயத்துக்கள் இப்பொழுது சேர்க்கப்படவில்லை. க்ளாஸ் 2 பஞ்சாயத்துக்கள்தான் அதிகமாக இருக்கிறது. நம்முடைய ராஜ்யத்திலே. ஏராளமான அத்தகைய ஸ்தல ஸ்தாபன வோட்டர்கள் தங்களுடைய பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுப்பதற்கு இயலாத ஒரு நிலைமை இன்று இருக்கிறது. அந்த நிலை போக்கப்படவேண்டும். ஸ்தல ஸ்தாபனத் தொகுதி வோட்டர்கள் ஜாபிதாவில் க்ளாஸ் 2 பஞ்சாயத்தைச் சேர்ந்த அங்கத்தினர்களும் சேர்த்துக் கொள்ளப்படவேண்டுமென்று நான் இங்கே சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அதுமாத்திரம் அல்ல. பட்டதாரி தொகுதி, உபாத்தியாயர் தொகுதி என்று இப்படியாக பிரிக்கப்பட்டு இருக்கும்போது, ஏன் தொழிற் சங்கங்களுக்கு என்று ஒரு தொகுதி பிரிக்கப்படக் கூடாது என்று நான் கேட்

7th April 1958] [Sri P. S. Chinnadurai]

கின்றேன். லெஜிஸ்லேடிவ் கவுன்சிலே வேண்டாம் என்பதுதான் என்னுடைய கோரிக்கை. ஆனால், லெஜிஸ்லேடிவ் கவுன்சில் என்பது இருக்கத்தான் வேண்டும் என்றால், தொழிற் சங்கங்களுக்கு ஏன் அதிலே முக்கியத்துவம் கொடுக்கக்கூடாது என்று நான் கேட்க விரும்புகிறேன். தொழிற் சங்கங்கள் இப்பொழுது அபிவிருத்தி அடைவதற்காக, தொழிற் சங்கங்கள் தங்களுடைய ஆலோசனைகளை பிரத்தியேகமாக எடுத்துக் கூறுவதற்காக, அவர்களுக்கும் தங்களுடைய பிரதிநிதிகளை அனுப்பிவைப்பதற்கு வாய்ப்பு உண்டாக்கிக் கொடுக்க வேண்டியது மிக அவசியம் என்று நான் சொல்ல விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, இந்த சட்டசபைக் காரியாலயம் சம்பந்தப்பட்டவரையில், அது முற்றிலும் சபாநாயகருடைய கட்டுப்பாட்டுக்கு உட்பட்டதாக இருக்க வேண்டும் என்று கனம் கல்யாணசுந்தரம் அவர்கள் கூறியதை நான் முழு மனதோடு ஆதரிக்கிறேன். அது எவ்வளவு அவசியம் என்பதை உண்மையிலேயே கனம் அமைச்சர் அவர்கள் உணரவேண்டும். கட்சிப் பற்று இல்லாமல் சட்டசபை அலுவலகம் தன்னுடைய கடமைகளைச் சரிவர நிறைவேற்ற வேண்டுமானால், அவசியமாக, கட்சிக் கட்டுப்பாட்டுக்கு அப்பாற் பட்டதாக இருக்கக்கூடிய சபாநாயகருடைய கட்டுப்பாட்டின் கீழே சட்ட சபை அலுவலகம் இருந்தால்தான் அது சாத்தியமாகும் என்று நான் மறுபடியும் வலியுறுத்திக் கேட்டுக்கொள்ள விரும்புகிறேன். ஒவ்வொரு ஆண்டிலும் இதற்கான ஒரு கோரிக்கை வரவேண்டுமென்று இதை வலியுறுத்தி அங்கத்தினர்கள் கூறுவதும், அதை மறுத்து கனம் அமைச்சர் அவர்கள் பதிலளிப்பதுமாகவே இதை விட்டுவிடாமல் இதற்குரிய நடவடிக்கைகளை உடனே எடுத்துக்கொள்ள வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

மேலும், சட்டசபை ரிப்போர்ட்டர்கள் சம்பந்தமாக ஒரு வார்த்தை சொல்ல நான் விரும்புகிறேன். சட்டசபை ரிப்போர்ட்டர்களைப்பற்றி நான் சொல்லும் போது இன்னும் மற்ற உத்தியோகஸ்தர்களுக்கும்கூட இது பொருந்தும். அவர்கள் மிகவும் கஷ்டப்பட்டு, அதிக நேரம் வேலை செய்கிறார்கள். நாம் சட்டங்கள் போட்டு முதலாளிகளை ஓவர் டைம் வேஜஸ் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறோம். இரண்டு மடங்கு ஓவர்டைம் வேஜஸ் கொடுக்க வேண்டுமென்று பிறரைக் கேட்டுக்கொள்ளுகிற நாம், நம்முடைய சிப்பந்திகளை எப்படி நடத்துகிறோம் என்ற விஷயத்தைக் கவனித்துப்பார்க்கக் கடமைபட்டிருக்கிறோம். இரண்டு மடங்கு சம்பளம் கொடுத்து விடுவதினாலே ஒன்றும் அதிகச் செலவு ஏற்பட்டுவிடாது. அப்படி அதிகச் செலவு ஏற்பட்டாலுங்கூட அதைத் தாங்கிக்கொள்ளுவதற்கு இந்த ராஜ்ய அரசாங்கத்தினுடைய நிதி நிலைமை இடம் கொடுக்கும் என்றுதான் நான் உறுதியாக நம்புகிறேன். ஆகையால், இந்த விஷயத்தையும் கவனிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். அடுத்த ஆண்டிலும் இதே விஷயத்தை இந்தச் சபையில் சொல்வதற்கு உரிய நிலைமையை கனம் அமைச்சர் அவர்கள் உண்டாக்கி விடக்கூடாது என்று மறுபடியும் வலியுறுத்திச் சொல்ல விரும்புகிறேன்.

மேலும், அங்கத்தினர்கள் தங்கள் தங்கள் தொகுதிகளுக்கு பிரதிநிதித்துவம் வகிக்கிறார்கள் என்றாலும் ராஜ்யத்தின் நிர்வாகம் எவ்வாறு நடைபெறுகிறது என்பதையும் திட்ட வேலைகள் ஆங்காங்கே எங்ஙனம் நிறைவேற்றப்படுகிறது என்பதையும் ஒவ்வொரு அங்கத்தினரும் அறிந்து கொண்டால்தான் நல்லது என்று நான் இந்த அரசாங்கத்திற்குக் கவனப்படுத்த விரும்புகிறேன். அதற்கு அனுசரணையாக இருக்கும் முறையிலே, ஒவ்வொரு அங்கத்தினருக்கும் ரயில்வே பாஸ் இலவசமாக ராஜ்யம் முழுதிலும் எங்கே வேண்டுமானாலும் போய் வருவதற்கு கொடுக்கக்கடமைப் பட்டிருக்கிறார்கள் என்று நான் உறுதியாகக் கூறுகிறேன். இது மிகவும் அவசியம். ஜனநாயக யுகத்தில் நாம் வாழ்ந்து, ஜனநாயக சம்பிரதாயத்தைப் பின்பற்றி இந்த அரசாங்கம் திறம்பட நடப்பதாக அங்கத்தினர்கள் ஒத்துக்கொள்ளவேண்டுமானால், இது அவசியம் என்று நான் இங்கே குறிப்பிடுவதற்கு விரும்புகிறேன். இதனால் சற்று அதிகச் செலவானாலும்கூட, அரசாங்கம் ஏற்பதற்கு அவசியம் இருக்கிறது. அரசாங்கம் செலவு முழுமைக்கும் எல்லோருமே பொறுப்பு ஏற்றுக்கொள்ளுகிறார்களே தவிர, அங்கத்கத்தினர்கள் பொறுப்பு ஏற்றுக்கொள்ளாமல் கனம் அமைச்சர் மாத்திரம்

[Sri P. S. Chinnadurai] [7th April 1958

பொறுப்பு ஏற்றுக்கொள்வது என்பது இல்லை. ஆகையால், இந்தப் பொறுப்பை அங்கத்தினர்கள் சார்பாக இருந்து நிறைவேற்றிவைக்கவேண்டுமென்று கனம் அமைச்சர் அவர்களை நான் கேட்டுக்கொள்கிறேன்.

கனம் அங்கத்தினர்கள் தங்குகிற விடுதியைப் பொறுத்தவரையில் பல சௌகரியங்கள் செய்யவேண்டியிருக்கிறது. தங்குகிற விடுதியில் ஒரே ஒரு டெலிபோன்தான் இருக்கிறது. அந்த ஒரு டெலிபோனை வைத்துக் கொண்டு எல்லா அங்கத்தினர்களுடைய வசதியையும் பூர்த்தி பண்ண முடிவது இல்லை. ஆகையால், ஒவ்வொரு அறைக்கும் டெலிபோன் வைப்பதற்கு ஏற்பாடு செய்து, ஒரு பொது டெலிபோன் எக்ஸ்சேஞ்ச் மூலமாக நிர்வகித்தால் நல்லது என்று தெரிவித்துக்கொள்கிறேன். அங்கத்தினர்கள் வருஷம் பூராவும் இந்த விடுதிகளில் உட்கார்ந்திருக்கப்போவதில்லை. ஏதோ சென்னைக்கு சட்டசபை அலுவலையொட்டி வரும்போது அவர்கள் தங்களுடைய கடமைகளைச் செய்வதற்கு அது ஒத்தாசையாக இருக்கும். இதனாலெல்லாம் அதிகமான செலவு ஏற்பட்டுவிடாது. அப்படித்தான் செலவு ஏற்பட்டாலும் அது வீண் செலவு அல்ல என்று நான் அமைசசர் அவர்களுக்குச் சொல்ல விரும்புகிறேன்.

பழைய ஹாஸ்டல் சம்பந்தபட்டவரையில் சொல்லவேண்டுமானால், அது ரொம்பப் பழுதுபார்க்கப்படவேண்டும். நல்ல கட்டிடம். இன்றைக்கு அதைக் கட்டுவதானால், பல லட்சக்கணக்கான ரூபாய்கள் செலவாகும். அது சரியான முறையில் பழுதுபார்க்கப்படவேண்டும். அதற்கான ஏற்பாடுகள் கட்டாயம் செய்யப்படவேண்டும்.

ஹாஸ்டலைச் சுற்றியிருக்கும் தோட்டம் பெயருக்குத் தான் தோட்டம் என்று சொல்லலாமே தவிர அந்தத் தோட்டத்தைப் பார்க்கும் யாருக்கும் இந்த அரசாங்கத்தைப் பற்றியும் இந்த அரசாங்கத்தை நிர்வகித்துக்கொண்டிருக்கும் அமைச்சரவையைப் பற்றியும் அவர்களுக்கு அனுசரணையாக இருக்கும் சபை அங்கத்தினர்களைப் பற்றியும் ரொம்ப தவறான அபிப்பிராயம் தான் ஏற்பட்டுவிடக்கூடும். ஆகையால் அந்தத் தோட்டத்தை சரியானபடி பாதுகாக்கவேண்டும். இப்பொழுது இருக்கும் பாழடைந்த நிலைமை சீக்கிரமாக நிவர்த்திக்கப்படவேண்டும் என்று நான் இங்கே அவசியம் சொல்லத் தான்வேண்டும். அதோடு இந்த அறைகளுக்கான வாடகை ரொம்ப அதிக
12 noon. மானது. நான் அண்மையில் பீகாருக்குச் சென்றபோது சட்டசபை அங்கத்தினர்கள் தங்கும் அறையைப் பார்த்தேன். அவர்களுக்கு மிகவும் வசதியான அறைகள் மிகக் குறைவான வாடகையில் கொடுக்கப்படுகிறது. மாத வாடகையாகட்டும், தின வாடகையாகட்டும் குறைவாகவே இருக்கிறது. ஆகவே இப்போது இருக்கிற அறை வாடகையைக் குறைக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

ஹாஸ்டல் சாப்பாடு சம்பந்தமாக பலவிதமான புகார்கள் சொல்லப் படுகின்றன. அந்தக் குறைகளை எல்லாம் நீக்கி அதை அபிவிருத்தி செய்வதற்கு நிறைய வசதி இருக்கிறது. அதைச் சரிவர கவனிப்பதற்கு ஏற்பாடு செய்யவேண்டுமென்பது என்னுடைய அபிப்பிராயம். ஹோட்டலுக்குப்போய் கண்ட சாப்பாட்டைச் சாப்பிட்டு உடலைக் கெடுத்துக் கொள்வதற்குப் பதிலாக இந்த ஹாஸ்டல் சாப்பாட்டை நல்லமுறையில் அபிவிருத்தி செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இதில் அதிகச் செலவு ஆகிவிடுமோ என்று அமைச்சர் அவர்கள் கவலைப்படவேண்டாம். (கனம் ஸ்ரீ ஸி. சுப்பிரமணியம்:—செலவு அதிகம் ஆனால் என்ன ? அங்கே இருப்பவர்கள் ஒத்துழைத்தால் சமமாக செலவை ஒப்புக்கொள்ளப்போகிறார்கள்.) அதுவும் சரி. இன்றைக்கு அங்கே அதிகமாகச் செலவு ஆகிறதென்றால் அதற்குக் காரணம் ஸ்டாப் மெயின்டனன்ஸ் என்பதாகவும் சொல்கிறார்கள். மில்களில் தொழிலாளர்களுடைய காண்டின்களை நடத்தக்கூடிய காலத்தில் ஸ்டாப் செலவை மில் முதலாளிகளே ஒப்புக்கொள்கிறார்கள். அதுபோல இங்கும் அரசாங்கத்தாரே லெஜிஸ்லேசர் ஹாஸ்டல் ஸ்டாப் செலவை ஒத்துக் கொள்ளவேண்டும் என்பதாகவும் கேட்டுக்கொள்கிறேன். மேலும் அங்கு ஆகும் செலவில் ஒரு பங்கை சப்ஸிடியாக சர்க்காரே கொடுத்து உதவுவதற்கு வந்தால் நன்றாக இருக்கும் என்பது என்னுடைய அபிப்பிராயம். இங்கே

7th April 1958] [Sri P. S. Chinnadurai]

205 மெம்பர்கள் இருக்கிறார்களே அதுபோல ஹாஸ்டலிலும் 205 அறைகள் கிடையாது. ஆகவே உறுப்பினர்களுக்குப் போதுமான இடவசதி அங்கே செய்துதரப்படவேண்டும் என்பதாகக் கேட்டுக்கொள்கிறேன்.

**Sri G. GOMATHI SANKAR DIKSHITAR :** கனம் சபாநாயகர் அவர்களே, நான் இந்த மானியத்தை ஆதரித்துச் சில வார்த்தைகள் பேசவிரும்புகிறேன். மக்களுடைய பிரதிநிதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு இந்தச் சபைக்கு வந்திருக்கிற நாம் எல்லாம் நம்முடைய கடமையை நன்றாக உணர்ந்து பொறுப்போடு செயலாற்றுவதற்கு மிக மிக உதவியாக சட்ட சபை செக்ரடரி வர்க்கத்தினர் இருக்கிறார்கள். அதற்காக அவர்களை முதலில் நான் பாராட்ட விரும்புகிறேன். சட்ட சபையில் எந்த எந்த வகையில் பணியாற்ற வேண்டுமோ அந்த அந்த வகையில் பணியாற்றுவதற்கு அவர்களி .த்தில் இருந்து நாங்கள் எல்லாவகையிலும் உதவியைப் பெற முடிகிறது. அலுப்பு சலிப்பின்றி, இந்தச் சபை உறுப்பினர்கள் தம் கருத்துக்கு ஏற்ற வகையில் பணியாற்றுவதற்கு, சட்ட சபையின் கௌரவத்திற்கும், நாட்டு மக்களின் நலனுக்கும் உகந்த வகையில் பணியாற்றுவதற்கு மிகவும் உதவியாக இருக்கும் செக்ரடரி போன்ற உத்தியோகஸ்தர்களுடைய சேவையைப் பாராட்டி நான் என்னுடைய நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அதோடு, நாம் எல்லாம் புதிய மெம்பர்கள். நமக்கு ஒரு விதமான பொறுப்பு இருக்கிறது. எந்தக் கட்சியைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும் சரி, அவர்கள் நன்றாகப் பயிற்சியைப் பெற்று, சட்ட நுணுக்கங்களை எல்லாம் நன்றாக உணர்ந்து நல்ல முறையில் மக்களுக்கு பயன அளிக்கும் சட்டங்களைச் செய்வதற்குரிய பயிற்சிகளைப் பெறுவதற்கு—முக்கியமாக வாலிபர்களுக்கு—அதிகமான வசதிகளைச் செய்து கொடுப்பதற்கு இன்னும் கொஞ்சம் சிரத்தை எடுத்துக் கொள்ளவேண்டுமென்று நான் இந்தச் சந்தர்ப்பத்தில் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

அதோடு எல்லாவிதமான வசதிகளும் இங்கே கொடுக்கப்படுகின்றன. இதில் உள்ள சிப்பந்திகள் பெரும்பாலோர் டெம்பரரியாக இருக்கிறார்கள். அவர்களை நிரந்தரமாக்குவதற்கு வகை செய்யவேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன்.

மற்றப்படி இதர ராஜ்யங்களை எல்லாம் விட, நம்முடைய ராஜ்யத்தில் பலவிதமான கட்சிகள் இருந்தாலும், கருத்துக்களில் அபிப்பிராயப் பேதங்கள் இருந்தாலும், சட்ட சபையில் சுமுகமான முறையில் பொறுப்பையுணர்ந்து ஜனநாயகப் பண்பாட்டிற்கு உகந்த வகையில் செயலாற்றுவதற்கு சட்ட சபை காரியாலயத்தார் பலவிதமான நடவடிக்கைகளை எடுத்து வருகிறார்கள். நமது மந்திரி அவர்களும் அவர்களுடைய முயற்சிக்கு பல வகையிலும் உதவி செய்யவேண்டும் நமக்குள்ள சிறிய சிறிய குறைகளை எல்லாம் நிவர்த்திப்பதற்கும் தக்க நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளவேண்டுமென்பதாகக் கேட்டுக்கொண்டு இந்த மானியத்தை முழுமனதுடன் ஆதரிக்கின்றேன்.

**Sri K. ANBAZHAGAN :** மதிப்பிற்குரிய சட்டமன்றத் தலைவர் அவர்களே, பொதுவாக சட்டமன்றங்கள் என்ற தலைப்பில் பேசுகின்ற இந்த நேரத்தில் எனக்கு முன்னாலே பேசிய பல்வேறு கட்சியைச் சார்ந்த உறுப்பினர்கள் எடுத்துக்கூறிய எல்லாக் கருத்துக்களையும் நானும் ஆதரிக்கின்ற முறையில் சில வார்த்தைகளைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

உண்மையாகவே இந்த சட்டமன்றமானது தங்களுடைய திறமையால் மிகவும் சிறந்த முறையில் இயங்கி வருகிறதென்று முதலில் குறிப்பிடுவது இன்றியமையாதது என்று நினைக்கின்றேன்.

சட்டமன்றத்திற்குள் உறுப்பினர்களாக இருப்பவர்கள் வெளியில் சென்று என்ன மாதிரியாகப் பேசியபோதிலும், வெளியில் அவர்கள் பேசுகின்ற பேச்சு மிகவும் கடுமையானதாக விஷம் தோய்ந்திருக்கிறதென்று மற்ற கட்சியைப்பற்றி அமைச்சர் அவர்கள் வெளியில் தெரி

[Sri K. Anbazhagan] [7th April 1958

வித்தபோதிலும், சட்ட மன்றத்திற்குள்ளே அப்படிப்பட்ட கருத்துக்களைத் தெரிவிக்கின்ற மனப்பான்மை வளராது ஓரளவு பண்பாட்டோடு சபை நடவடிக்கைகள் இருந்து கொண்டிருக்கின்றன என்றால் பண்பாட்டிலே சிறந்த ஒருவர் இன்றையதினம் இந்த மன்றத்திற்குத் தலைவராக இருப்பது தான் என்று நினைக்கிறேன்.

இந்த சட்டமன்றத்தின் நிர்வாகத்தில் மிக அதிகமான திறமையைக் காட்டவேண்டிய அவசியம் இருக்கிறது. ஆங்கிலத்தில் எல்லா நடவடிக்கைகளும் இருந்த சூழ்நிலை மாறி இன்று தமிழில் எல்லா நடவடிக்கைகளும் மாற்றப்படுகிற காரணத்தினால், அவையிலுள்ள 205 உறுப்பினர்களும் இன்றைக்குத் தமிழிலேயே பேசுகின்ற காரணத்தினால் அவைகளை நல்ல முறையில் அப்படியே சுருக்கெழுத்தில் எடுத்து உருவாக்குகின்ற நேரத்தில் பிழைகளின்றி அப்படியே உருவாக்கவும், பின்னர் அவை அச்சேறுகின்ற காலத்தில் கருத்துக்கள் மாற்றப்படாதிருக்கக்கூடிய நிலைமையில் அச்சேறுவதற்கு திறமையும், தகுதியும் இங்கே அதிகப்படவேண்டும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். தமிழ் துறையில் வல்லுனர்களாக இருக்கிறவர்களால் தான் சுலபமாக அந்தக் காரியத்தைச் செய்யமுடியும் என்றும், இங்கே ஆங்கிலம் தெரிந்தவர்கள் மிகவும் உற்சாகமாக அந்தக் காரியத்தைச் செய்வதில் ஈடுபட்டிருக்கிறார்கள். அவர்களைப் பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறேன். என்றாலும் அப்படிச் செய்வதிலே சில பல தவறுகள் ஏற்படுகின்றன. இங்கே பேசப்பட்டு எழுதப்படுகிற பேச்சு ஒரு வகையாகவும், அச்சேறிய பிறகு அதன் கருத்தே மாறுபாடு அடைந்ததாகவும் காணப்படுகிறது. எழுத்துப் பிழைகளைத் திருத்தலாம், இலக்கணப் பிழைகளைத் திருத்தலாம். தொடர்ச்சியை ஏற்படுத்தச் சில திருத்தங்களைச் செய்யலாம் என்றாலும், கருத்தை மாற்றக்கூடிய அளவில் அச்சேறும் போது திருத்தங்கள் செய்யப்படுவது தவறாகும். அப்படி மாற்றப்பட்டிருப்பதை அச்சேறி வந்துள்ள புத்தகங்களில் பார்க்கும்போது நான் அறிந்திருக்கிறேன். அமைச்சர் அவர்களுடைய ஆழ்ந்த கருத்துக்கள்கூட, அச்சேறும்போது ஒருவிதமான புதுப்பொருள் தோற்றும்படியாக மாறுதல் செய்யப்பட்டிருக்கிறது. அப்படிப்பட்ட மாறுதல் ஏற்படுவது ஜனநாயகப் பண்பாட்டுக்கு உகந்தது அல்ல. இன்னும் இவ்விஷயத்தில் போதிய கவனம் செலுத்தி நல்ல முறையில் அச்சேற்றுவதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ளவேண்டும் என்கிற காரணத்தினால் இதை வலியுறுத்த விரும்புகிறேன்.

12–10 p.m. செலவு அதிகமாகயிருக்கலாம். ஜனநாயகத்தில் செலவு அதிகந்தான். ஆனால் அதில் இருக்கிற கடமை பெரிது என்பதை நான் இங்கு நினைவூட்ட விரும்புகிறேன். மற்றொன்று, இங்கு பேசப்படுகிற கருத்துக்கள் பின்னால் அச்சிடப்பட்டு வெளிவருவதற்கு நீண்ட காலமாகிறது. ஏறத்தாழ சென்றாண்டு பட்ஜெட் நடவடிக்கைகள் எல்லாம் இப்பொழுதுதான் அச்சிடப்பட்டு வெளிவருகிறது என்று சொல்லும்போது அது பயனற்றனவாகிப் போய்விடுகிறது. ஆகவே, நான் கேட்டுக்கொள்கிறேன், சட்ட மன்ற நடவடிக்கைகளை அச்சிட ஒரு தனி அச்சுப் பொறி அமைப்பும் அதற்கான ஒரு தனி அலுவலகமும் ஏற்படுத்தப்பட்டாகவேண்டும். இன்றையதினம் இருக்கிற அரசாங்க அச்சுப் பொறி இலாகாவில் பல்வேறு கடமைகளோடு இதனையும் இணைத்து விடுகிறார்கள். சட்ட மன்ற நடவடிக்கைகள் உடனுக்குடன் வெளிப்படவேண்டும். அது ஜனநாயகத்தின் இன்றியமையாத கடமைகளில் ஒன்றாகும். எவ்வளவுக்கெவ்வளவு சட்ட மன்ற நடவடிக்கைகள் காலங்கடந்து அச்சியியற்றி வெளிவருகிறதோ அவ்வளவுக்கவ்வளவு ஜனநாயகம் பாதிக்கப்படுகிறது. உடனடியாக பரிசீலிக்கப்படுகிற உரிமை உணர்ச்சி மங்குகிறது. ஆகவே, அதற்கு இடம் கொடுக்காது ஒரு தனி அச்சுப் பொறி இலாகாவை நம் சட்ட மன்றத்திற்கு ஏற்படுத்த அரசாங்கம் முன்வரவேண்டும். அது ஒரு பெரிய செலவாகக்கூடயிருக்கலாம். ஆனால் அது இங்குள்ள உறுப்பினர்களின் உயர்ந்த குறிக்கோளை நிறைவேற்றுவதற்கு அவசியமாகும். மற்றொன்று, இந்த இலாகாவைப்பார்த்தால், பல அதிகாரிகளும் போதிய அளவு உயர்ந்த தகுதிகளைப் பெற்றிருந்தபோதிலுங்கூட மேலும் மேலும் பதவிகள் உயர்வதற்கான வாய்ப்பு வசதிகள் குறைவாகயிருக்கிறது என்று

7th April 1958] [Sri K. Anbazhagan]

உணருகிறேன். இங்கு குறிப்பாக லோயர் டிவிஷன் க்ளார்க்குகளின் எண்ணிக்கை மிகவும் அதிகமாகவும் அப்பர் டிவிஷன் க்ளார்க்குகளின் எண்ணிக்கை சற்று குறைவாகவும் இருப்பதால் பெரும்பாலும் பட்ட தாரிகளாக வருபவர்களுக்கு மேலும் மேலும் உத்தியோக உயர்வு பெற வாய்ப்பு குறைந்து விடுகிறது. ஆகவே, அந்தச் சூழ்நிலையில் அப்பர் டிவிஷன் க்ளார்க்குகளின் எண்ணிக்கையை உயர்த்துவதின் மூலம் அந்தக் குறைகளை போக்குவதோடு, எனக்கு முன் பேசிய உறுப்பினர்கள் கூறியது போல் கூடுமான வரையில் தாற்காலிகமாக நியமிக்கப்படுகிறவர்களை யெல்லாம் நிரந்தரமாக வேலையில் நியமிக்கப்படுவதற்கான வழிவகைகள் செய்யப்பட்டாகவேண்டும். மற்றென்று, இந்த சட்ட மன்ற நடவடிக்கைகள் நல்ல தமிழில் நடைபெறவேண்டுமானால், இன்றையதினம் இந்த சட்ட மன்றத்தில் பயன்படுத்தப்படுகிற சில சொற்கள் மாற்றப்பட்டாகவேண்டும். அப்படி மாற்றுவதற்கு அமைச்சர்களும் ஆளும் கட்சியினரும் மனமுவந்து முன்வரவேண்டும். கனம் அமைச்சர் அவர்கள் என்று சொல்லப்படுகிறது—இதற்குரிய பொருள் நம் மனதில் ஆழமாக பதியவில்லை. நிதியமைச்சர் சுப்பிரமண்யம் அவர்களைப்பற்றிச் சொல்லும்போது கனம் சுப்பிரமண்யம் என்று சொல்லவரவில்லை, ஆனால் கக்கன் அவர்களைப்பற்றிச் சொல்லும் போது கனம் கக்கன் அவர்கள் என்று என்னை அறியாமலேயேவருகிறது. பொருள் பொருத்தம் குறைவாக இருப்பதால், மதிப்பிற்குரிய என்றோ, உயர்திரு என்றோ, பெருந்தகை என்றோ, இப்படிப்பட்ட நல்ல சொற்களை அமைச்சர்கள் தயவுசெய்து இந்த மன்றத்தில் வழக்கிற்கு கொண்டுவர முன்வரவேண்டும். அதேபோல "ஸ்ரீ" என்று சொல்லி தமிழில் எழுதுவது வெட்கக்கேடாகயிருக்கிறது. ஒரு கோணல் எழுத்து காரணமாக இன்றையதினம் சிங்கள நாட்டில் ஒரு குழப்ப நிலை ஏற்பட்டிருப்பதைக் காண்கிறோம். அப்படிப்பட்ட ஒரு குழப்பநிலை இங்கு இல்லாததற்குக் காரணம், இங்குள்ள நம் மக்களின் பண்பாடுதான். இருந்தாலும் அமைச்சர்கள் தமிழ் பற்றுள்ளவர்களாக இருப்பதால் இச்சட்ட மன்றத்தில் "ஸ்ரீ" என்ற சொல்லுக்குப் பதில் "திரு" என்ற சொல்லை பயன்படுத்த முன்வரவேண்டும். இன்று வழக்கில் இருக்கிற சில சொற்கள், "சட்ட மன்றம்", "சட்டப் பேரவை", "சட்ட சபை", "சட்ட சபை சபாநாயகர்" என்ற சொற்களுக்கு எந்தெந்த தொடரை பயன்படுத்துவது நல்லது என்று தீர்மானிப்பதற்கு, சட்டமன்ற நடவடிக்கைகளில் எந்தெந்தச் சொற்கள் பயன்படுத்தப்படவேண்டும் என்பதற்கு, ஒரு "சொல் ஆய்வுக் குழு" அல்லது "சட்டசபை நடவடிக்கைகளில் இருக்க வேண்டிய சொற்களைப்பற்றிய ஒரு ஆய்வுக் குழுவை சட்டசபை காங்கிரஸ் கட்சித் தலைவர் அவர்கள் சபாநாயகரோடு கலந்து ஏற்படுத்துவார்களே யானால் சில சொற்கள் நாளடைவில் நல்ல முறையில் சட்டமன்றத்தில் இடம் பெற வாய்ப்பு ஏற்படும். அடுத்து நான் கேட்டுக்கொள்வேன், ஜனநாயக உரிமைப்படி, இச்சட்டமன்ற உறுப்பினர்களின் சலுகைகள் மிக முக்கியமாக கவனிக்கப்படவேண்டும். சலுகைகள் என்று சொல்வதைவிட "உரிமை" என்றுகூடச் சொல்வேன். பாராளுமன்ற உறுப்பினர் களுக்குள்ள வாய்ப்புகள், உரிமைகள், சட்டமன்ற உறுப்பினர்களுக்குள்ள உரிமைகளைவிட பன்மடங்கு அதிகமாகயிருக்கிறது. எல்லாக் கட்சி அங்கத்தினர்களும் இம்மன்ற உறுப்பினர்களுக்கு ரெயில்வே பாஸ் தர வேண்டுமென்று கேட்கிறார்கள். இந்த சென்னை மாநில அளவிற்காவது எந்தயிடத்திற்கும் சென்று எந்த ஒரு பிரச்னையையும் நன்கு அறிந்து கொள்ள வாய்ப்பு அளிக்கவேண்டுமானால் அப்படி பாஸ் அளிக்க இந்த அரசாங்கம் நிச்சயம் முன்வந்தாகவேண்டும். இப்படியெல்லாம் சலுகைகள் கேட்கலாமா என்று அமைச்சர்கள் கேட்கக்கூடும். நான் சொல்கிறேன், இது சட்டமன்ற உறுப்பினர்களுக்கு அளிக்கப்படும் சலுகையல்ல, இது சட்டமன்ற உறுப்பினர்களின் உரிமையாகும். பாராளுமன்ற உறுப்பினர் களுக்கு இமயமலை அடிவாரத்தில் இருந்து கன்னியாகுமரி முனை வரை எங்கு வேண்டுமானாலும் செல்வதற்குள்ள வாய்ப்பும் உரிமையும் அளிக்கப் படுமானால் இம்மாநில உறுப்பினர்களுக்கு இம்மாநில அளவாவது சுற்றி வருவதற்குள்ள உரிமை, அதற்கான வாய்ப்பு அளிக்கப்பட்டேயாக வேண்டும். அப்படிப்பட்ட உரிமைகள் அளிக்கும்போது செலவு அதிகமாகிறது என்றால் அந்தச் செலவை இந்த அரசாங்கம் மகிழ்ச்சியோடு ஏற்று

கொள்ளவேண்டும். மற்றொன்று, எதிர் கட்சிகளின் உதவிக்காக இங்கு ஒரு "இன்பர்மேஷன் சென்டர்"—அவர்களுக்கு எந்தப் பிரச்னைபற்றியும் கருத்து தெரிவிப்பதெற்கென்று ஒரு நிலையம் ஏற்படுத்தப்படும் என்று முன்னுளில் அமைச்சர் அவர்கள் தெரிவித்தார்கள். அந்த நிலையம் இன்னும் ஏற்படுத்தப்பட்டதாக நான் அறியவில்லை. அப்படி ஒன்று ஏற்படுத்தப்படுமானல் அது மிகவும் நன்மை பயக்கும் என்பதில் ஐயமில்லை. எதிர்கட்சி அங்கத்தினர்கள் தங்கிப்பேச சட்டமன்றத்தை யொட்டி தனி அறைகள் தரப்பட்டாகவேண்டும். ஆளும்கட்சியினருக்கு இதில் குறை இல்லாமலிருக்கக் காரணம், அவர்கள் கூடிப்பேச எட்டு அமைச்சர்களின் அறைகளும் ஒரு கொரடாவின் அறையும் இருக்கின்றன. ஆனல் எங்களைப் பொறுத்தவரையில், மாற்றுக் கட்சியினரைப் பொறுத்த வரையில் நாங்கள் கூடிப்பேசுவதற்கு உள்ள இடம் வராந்தாவும், பிறர் போக்குவரத்திற்கு பயன்படுத்தும் இடமுந்தான். எதிர்கட்சித் தலைவர் அவர்களுக்கு தரப்பட்டிருக்கும் ஒரு அறை இருக்கிறது, அவர்களிடம் சென்று கொஞ்ச நேரம் நாங்கள் கூடிப்பேச இடம் தாருங்கள் என்று கேட்கும் நிலைதான் இன்று மாற்றுக் கட்சியினருக்கு இருக்கின்றது. ஆகவே, மாற்றுக் கட்சியினருக்கு அறை தேடித் தருவதை அரசாங்கம் ஒரு கடமையாகக்கருதவேண்டும். அடுத்து, நூல நிலையத்திற்குத் தரப்பட்டிருக்கும் இடம், அங்கு சென்று உறுப்பினர்கள் படிப்பதற்கு வசதியில்லை. இன்றுள்ள நெருக்கடியான சூழ்நிலையில் அந்த இடந்தான் நூல் நிலயத்திற்குக் கிடைத்தது என்று சொன்னுலும், நல்ல காற்றோட்டமும் இயற்கை ஒளியும் உள்ள இடமாக அது இருந்தால்தான் மூன்றல்லது நான்கு மணி நேரம் தொடர்ச்சியாக அங்கிருந்து படிக்க முடியும். அதற்கு வாய்ப்பு தேடித்தருவது அரசாங்கத்தின் கடமையாகும். மாற்றுக் கட்சியினர்கள் நன்கு படித்துவிட்டு பேசவேண்டும் என்று சொல்லும்போது நூல் நிலையத்தை ஒழுங்கு படுத்தித்தரவேண்டும், அப்படித் தந்தால்தான் அது முழு அளவிற்குப் பயன்படும். மற்றொன்று, எதிர்கட்சியைச் சார்ந்த உறுப்பினர்களின் கருத்துக்களை நல்ல முறையில் மக்களுக்கு பரப்பவேண்டுமானுல், ஆளும் கட்சியினருக்குள்ள வாய்ப்பு எதிர்க்கட்சிகளுக்கு கிடைக்கவேண்டுமானல் அவர்களின் சொற்பொழிவுகள் உடனுக்குடன் அரசாங்கத்தாரால் வெளியிடப்படுவதோடுகூட உறுப்பினர் களின் பேச்சுகளின் 1,000, 2,000 பிரதிகள் எளிய விலைக்கு கிடைக்க ஏற்பாடு செய்யப்படவேண்டும், ஒருவரின் சொற்பொழிவை தாமாகவே அச்சிடுவதாக யிருந்தால் எவ்வளவு செலவாகுமோ அச்செலவுதான் இப்பொழுதாகிறது. ஆகவே, மக்களிடையே உறுப்பினர்களின் கருத்துக்களைப் பரப்பவேண்டு மென்ற ஜனநாயகக் கொள்கை இந்த அரசாங்கத்திற்கு இருக்குமேயானல் அவர்களின் பேச்சுப் பிரதிகளை எளிய விலைக்கு அச்சிட்டுத்தர அரசாங்கம் முன்வரவேண்டியது ஜனநாயக ஆட்சியின் இன்னொரு கடமையாகும் என்பதை நினைவூட்டிக்கொண்டு இச்சட்டமன்ற நடவடிக்கைகள் மிகவும் செம்மையாக நடைபெறுகிறது என்ற கருத்தை மறுபடியும் நினைவூட்டிக் கொண்டு எனது உரையை முடித்துக்கொள்கிறேன்.

Sri N. R. THIAGARAJAN : தலைவர் அவர்களே, சட்டசபை அங்கத்
12–20 p.m. தினராக இங்கு வந்தபோது நான் மிகவும் பெருமிதத்தோடு வந்தேன். ஏதோ ஒரு புதிய உலகத்திற்குப் போகிறோம், அங்கு காரியங்கள் வெகு வேகமாகவும் செம்மையாகவும் நடைபெறும் என்றெல்லாம் நினைத்துக் கொண்டு இங்கு வந்து சேர்ந்தேன். ஆனல் இங்கு வந்து ஹாஸ்டலைப் பார்த்தவுடன், அது சாதாரணமாக உள்ள ஹோட்டல் எவரெஸ்ட் போன்று கூட இல்லாததைக் கண்டேன். உதாரணமாக, சட்டசபை மெம்பர்களை வந்து பார்ப்பதற்கு காலையில் தினசரி 10, 15 பேர்கள் வந்து கொண்டிருக் கிறர்கள். அதுவும் காலையில் நாம் அறையைத் திறந்தவுடன் உடனே அதற்குள் நுழைந்து விடுகிறர்கள். அதனல் காலைக்கடன்களைச் செய்ய முடியாத ஒரு நிலை ஏற்படுகிறது. அது குறித்து அப்பொழுதே, மராமத்து இலாகா அமைச்சர் அவர்களிடம் சொன்னேம், மூன்று ரூம்களை இரண்டாக்கி குறுக்கே ஒரு "பாத் ஆண்ட் லெட்ரீன் அட்டாச்ட்"-ய் இருக்க வேண்டுமென்று சொன்னேம். அப்படிக் கேட்டுக்கொண்டும் இதுவரையிலும் அது நிறை வேற்றப்படவில்லை. அக்கட்டிடம் கட்டும்போதே அதைச் செய்திருக்கலாம். அதை விட்டு விட்டார்கள். நண்பர்கள் வடக்கு வாழ்கிறது என்று சொல்

7th April 1958] [Sri N. R. Thiagarajan]

கிறார்களே, ஒரு விஷயத்தில் வடக்கு வாழ்கிறது என்பதை ஒப்புக்கொள்ளத் தான் வேண்டும். பஞ்சாப் சட்டசபை மெம்பர்களுக்கு மாதம் 300 ரூபாய் சம்பளம், தினசரி 10 ரூபாய் அலவென்ஸ்-ம் கொடுக்கிறார்கள். அங்குள்ள சட்டசபை மெம்பர்களுக்கு கொடுக்கப்பட்டுள்ள இடம், நல்ல காற்றோட்டமும், நல்ல கட்டில் முதலிய சௌகரியங்கள் உள்ள ரூம்களாகும். அவர்களுக்கு, வென்னீர் வேண்டுமானால் வென்னீர் கிடைக்க சௌகரியம் செய்து கொடுக்கப்பட்டுள்ளது. இந்தியாவில் வைத்தே பஞ்சாப் சட்டசபை மெம்பர் களுக்கு கிடைக்கும் வசதி வேறு எந்தயிடத்திலும் இல்லை. அவ்வளவு சௌகரியமாக இருக்கிறது அவர்களுக்கு கொடுக்கப்பட்டிருக்கும் ரூம்கள். வெளியில் "விஸிட்டேர்ஸ்" உட்கார நல்ல வசதியும் அளிக்கப்பட் டிருக்கிறது.

இதைப் போன்ற மற்ற மாகாணங்களிலுள்ள சட்டசபை மெம்பர்களுடைய ஹாஸ்டல்களில் மெம்பர்களுக்கு அதிகமான வசதிகள் செய்து கொடுக்கப் பட்டிருக்கிறது என்று கேள்விப்பட்டேன். நம்முடைய ஹாஸ்டல்களில் அதிக வசதி இருக்கிறது என்று கூற முடியாது. இப்போது 10 ரூம்களுக்கு ஒரு வேலைக்காரன் என்று போட்டிருக்கிறார்கள். நான் பாதுகாப்பு கைதியாக இருந்த சமயத்தில் கூட, ஒரு கிரிமினல் கைதியை எனக்கு மாத்திரம் தனியாக வேலைக்காரனாக போட்டிருந்தார்கள். வேலைக்காரன் வேண்டும் என்று விரும்புவன் அல்ல நான். ஏதோ ரூமில் இருந்து கொண்டு ஒரு காப்பி வேண்டும், அல்லது சிகரெட் வாங்கிவர வேண்டுமென்றால் அவசரத் திற்கு வாங்கி வருவதற்கு ஆள் கிடையாது. பத்து ரூம்களுக்கு என்று போடப்பட்டிருக்கும் வேலைக்காரனிடத்தில் சொல்லி அனுப்பினால் குறைந்தது அவன் திரும்பி வருவதற்கு 10 மணி நேரம் ஆகிவிடுகிறது. ஒரு நாள் காலையில் ஒரு ஆளிடம் காப்பி வாங்கிவரும்படி கூறி அனுப்பினேன். அன்று பகல் 12 மணி வரையிலும் அவன் வரவில்லை. அவனிடம் கேட்டதற்கு "நான் காப்பி வாங்கிகொண்டு வரும்பொழுது இன்னொரு ஆள் வேறொரு இடத்திற்கு போகச்சொன்னார், அங்கே போனேன், அதனால் இவ்வளவு நேரமாகி விட்டது" என்று ஆறு மணிக்கு வாங்கின காப்பியை பகல் 12 மணிக்கு கொண்டு வந்து கொடுத்தான். இவ்விதம் இந்த ஹாஸ்டலில் இருப்பதை விட ஹோட்டல்களில் இருப்பதே மேல் என்ற முறையில், இந்த பட்ஜெட் ஸெஷனுக்குக்கூட ஹோட்டலில்தான் தங்கி வருகிறேன். ஹாஸ்டலில் தங்கவில்லை. அதோடு ஆபீஸ் நிர்வாகத்தைப் பொறுத்தவரையில் அது திருப்திகரமான முறையில் நடைபெறுவதாக சொல்லமுடியாது. பலரும் திருப்திகரமாக நடைபெற்று வருகிறது என்று சொன்னார்கள். என்னைப் பொறுத்தவரையில் எனக்கு மாத்திரம்தான் இந்த குறைகள் இருக்கிறதோ என்னவோ தெரியவில்லை. என்னைப் பொறுத்த வரையில் பல குறைகள் இருக்கின்றன. சிலர் பெயரளவுக்கு இருந்து கொண்டு தன்னுடைய தலைமை பதவி மாறாமல் இருக்கும் விதத்தில் ஆபீஸ் காரியங்களை பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். டி.எ. பில்லை பொறுத்தவரையில் என்னுடைய பில் இன்னும் பாஸாகி வரவில்லை. பலருக்கு பாஸாகி வந்திருக்கிறது. இதைப்பற்றி கனம் சபாநாயகர் அவர் களிடம் எழுதிக்கொடுத்திருக்கிறேன்.

**Mr. SPEAKER :** டி.எ. பில்லைப்பற்றி எனக்கு எழுதி என்ன பிரயோ ஜனம் ?

**Sri N. R. THIAGARAJAN :** சம்பள விஷயத்திலும் என்னைப் பொறுத்தவரையில் பல கஷ்டங்கள் ஏற்படுகிறது. அதாவது என்னுடைய சம்பளத்தை தேனியிலிருந்து 12 மைல் தூரத்தில் இருக்கும் பெரியகுளம் என்னும் இடத்தில் போய்தான் வாங்க வேண்டியிருக்கிறது. பெரிய குளத்தில் தான் சர்க்கார் கஜானாஇருக்கிறது. அங்கு போய் க்யூ வரிசையில் நிற்க வேண்டும். இதை விட்டு விட்டு உள்ளே போய் டோக்கன் வாங்கினால் வெளியே நிற்கிறவர்கள் அதையும் ஆட்சேபிப்பார்கள். இவ்விதம் ஒரு நாள் பூரா நின்று டோக்கன் வாங்கிவிட்டு ஸ்டேட் பாங்கில் போய் பணம் வாங்க வேண்டும். இவ்விதம் சம்பளம் வாங்குவதற்கு மூன்று நான்கு நாட்கள் ஆகிவிடுகிறது. இதையாரும் நம்ப மாட்டார்கள். ஆனால் உண்மையில் இப் படித்தான் நடந்துவருகின்றது. இதைப் பற்றி நிதி அமைச்சர் அவர்களிடமும்

[Sri N. R. Thiagarajan] [7th April 1958

கூறியிருக்கிறேன். இவ்விதம் பாங்கில் போய் கேட்கும்போது அங்கே சில வேளைகளில் பில்வரவில்லை என்று சொல்லிவிடுவார்கள். அதோடு அதில் ஏதாவது சின்னஞ்சிறு எழுத்துப்பிழைகள் இருந்தால் கூட அதை திருப்பி அனுப்பி விடுவார்கள். இவ்விதம் இரண்டு மூன்று முறை திருப்பி அனுப்பி விடுவார்கள். இவ்விதம் பல கஷ்டங்கள் ஏற்படுகின்றன. இந்த முறையை மாற்ற வேண்டும் என்று சொன்னேன். அல்லது இதை மணியாடர்களாக அனுப்பிவிடுங்கள் என்று காரியதரிசி அவர்களிடம் சொன்னேன். இவ்விதம் 206 மணியாடர்களையும் எழுதி அனுப்ப முடியுமா என்று காரியதரிசி அவர்கள் கேட்டார்கள். நான் ஜில்லா போர்டு தலைவராக இருந்த சமயத்தில் சுமார் 4,000 மணியாடர்கள் எழுதி அனுப்பியிருக்கிறேன். இப்பொழுது செக் வேண்டும் என்று கேட்டிருக்கிறேன். உள்ளூர் பாங்குக்கு செக் வேண்டும் என்று கேட்டிருக்கிறேன். சட்டசபை மெம்பர்களுக்கு செக்குகள் எளிதான முறையில் கிடைக்கச் செய்யவேண்டும். இவ்விதம் ஒரு மாதம் சம்பளம் வாங்குவதற்கு நான்கு நாட்கள் செலவு செய்ய வேண்டியிருக்கிறது என்றால் 60 மாதங்கள் சம்பளம் வாங்குவதற்கு 250 நாட்கள் செலவு செய்ய வேண்டியிருக்கிறது. டி.எ. பில்கள் எல்லாம் மெம்பர்களுக்கு லெகுவாக வந்து சேரும்படியான விதத்தில் இருக்க வேண்டும். உதாரணமாக நான் டெல்லியில் ஒரு பார்லிமெண்ட் மெம்பர் ரூமுக்கு சென்றிருந்தபொழுது ரூமை திறந்த உடனே அங்கு ஒரு செக் போடப்பட்டிருந்தது. அது எந்த செக் என்று விசாரித்தபொழுது டி. எ. செக் என்று தெரிய வந்தது. இவ்விதம் டி.எ. செக்கள் எல்லாம் மெம்பர்களுடைய கைக்கு தேடி வர வேண்டும். மெம்பர்கள் போய் அலையக்கூடிய பழக்கம் இருக்கக் கூடாது அங்கே எல்லாம் டி.எ. செக் வாங்குவதற்கு அந்த இடத்தில் போய் சில மணி நேரங்களுக்குள்ளாக செக்-கை வாங்கி வந்து விடுகிறார்கள். ஆகவே அந்த முறையில் செக்கள் எல்லாம் லெகுவான முறையில் அங்கத்தினர் களுக்கு கிடைக்கக்கூடிய வகையில் சட்டங்களை திருத்தி அமைக்கவேண்டும். முப்பது வருடங்களாக இருந்து வருகிற முறையை எப்படி மாற்றி யமைப்பது என்று பார்க்கக்கூடாது. சட்டசபையைப் பொறுத்தவரையில் சில வித்தியாசங் களும் இருக்கிறது. இங்குள்ள அங்கத்தினர்களுக்கு 150 ரூபாய் சம்பளம் இருக்கிறது. பார்லிமெண்ட் மெம்பர்களுக்கு 400 ரூபாய் சம்பளம் இருக்கிறது. மத்திய என்.ஜி.ஓ.க்களுக்கும் மாகாண என்.ஜி.ஓ.க்களுக்கும் வித்தியாசம் இருப்பது போல் நம்மிடையிலும் சம்பள வித்தியாசம் இருக்கிறது. அது போல்தான் மத்திய சர்க்கார் மந்திரிகளுக்கு 3,500 ரூபாய் சம்பளம் இருக்கிறது. நம்முடைய மாகாண சர்க்கார் மந்திரிகளுக்கு 1,000 ரூபாய்தான் சம்பளம் இருக்கிறது. நமக்கும் 400 ரூபாய் வேண்டும் என்று நான் கேட்கவில்லை. அவர்களுக்கு கொடுக்கப்படுவது போல் நமக்கும் ரயில்வே பாஸ் தரவேண்டும். இதைப்பற்றி பல மெம்பர்களும் சொன் னார்கள். இந்த மாதிரி ரயில்வே பாஸ் கொடுத்தால் மாகாணத்திலுள்ள பல இடங்களுக்கு சென்று விவரங்களை அறிந்துகொள்வதற்கு லெகுவாக இருக்கும் என்பதை சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். அடுத்ததாக கனம் அங்கத்தினர் அன்பழகன் அவர்கள் சொன்னார்கள், சட்டசபை நடவடிக்கைப் புத்தகங்கள் சரியான சமயங்களில் கிடைக்கவில்லை என்று, அதையேதான் நானும் குறிப்பிட விரும்புகிறேன். கழிந்த ஜூலை மாதத் திலுள்ள நடவடிக்கைப் புத்தகம் இன்னும் எனக்கு கிடைக்கவில்லை சுமார் ஒரு ஆண்டு காலம் ஆகப்போகிறது. இன்னும் ஐந்து ஆண்டுகள் இப்படியே போய்விட்டால் அதன் பின்னால் நீங்கள் மெம்பர் அல்ல, அதனால் நடவடிக்கை புத்தகம் அனுப்ப முடியாது என்று சொல்லி விடுவார்களோ என்று பயப்படுகிறேன். ஆக்வே இதை சீக்கிரமாக அச்சடித்து அனுப்பு வதற்காக சட்டசபைக்கு என்று ஒரு அச்சாபீஸ் வைத்தால் நல்லது என்ப தையும் தெரிவித்துக்கொள்கிறேன். அதோடு சர்க்கார் வெளியிடும் சில புத்தகங்கள்தான் கொடுக்கப்படுகிறது. சர்க்கார் வெளியிடும் எல்லா புத்தகங்களும் மெம்பர்களுக்கு கொடுக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அதே போல் தான் லெட்டர் பேப்பர்கள் மெம்பர்களுக்கு அதிகமாக கொடுக்க வேண்டும், ஒரு நாளைக்கு இரண்டு பேப்பர் என்று கருமித்தனமாக கொடுக்கப்பட்டு வருகிறது. 40 நாட்களுக்கு நான்கு பாட்-கள் உண்டு என்று சொல்கிறார்கள். நான் தினசரி 100 லெட்டர் பேப்பர்கள் எழுதிக்கொண்டிருக்கிறேன். இங்கே அதிகமாக கொடுக்கப்

7th April 1958] [Sri N. R. Thiagarajan]

படுவதில்லை. ஆதலால் ஊரிலிருந்து வரும்பொழுதே சட்டசபை கூடும் நாட்களை எண்ணிக்கொண்டு அதற்கு தகுந்தாற்போல் லெட்டர் பேப்பர்களை அச்சடித்துக்கொண்டு இங்கு வரவேண்டியிருக்கிறது. ஆகவே சட்டசபை மெம்பர்களுக்கு லெட்டர்பேப்பர் விஷயத்தில் கருமித்தனம் இல்லாமல் கொடுக்க ஏற்பாடு செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அதே போன்று காலி கவர்களும் அதிகமாக கொடுக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். ஆகவே அடுத்த வருடத்தில் இந்த மான்யம் கொண்டு வருகின்ற சமயத்தில் இந்த குறைகள் எல்லாம் இல்லாதவாறு நீக்கி விட்டோம் என்று நாமே எண்ணிக்கொள்ளவேண்டும். ஏதோ மக்களுக்கு எல்லாம் என்னவெல்லாமோ செய்யவேண்டும் என்று சொல்லுகிறவர்கள், நமக்குள்ள காரியங்களையாவது நிறைவேற்றிக்கொள்ளவேண்டும். வெளி யிலுள்ளவர்கள் மக்களுடைய குறைகளை நிவர்த்தி செய்யவேண்டிய நீங்கள், உங்களுடைய குறைகளையே தீர்த்துக்கொள்ள முடியவில்லையே என்று கேட்கிறார்கள். ஆகவே இந்த குறைகளை எல்லாம் நிவர்த்தி செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொண்டு முடித்துக்கொள்கிறேன். ஜெய் ஹிந்த்.

Sri A. GOVINDASAMY : சட்டமன்றத் தலைவர் அவர்களே, இந்த மான்யத்தின் மீது கொடுக்கப்பட்டிருக்கும் வெட்டுத் தீர்மானத்தை ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இந்த சபையின் கௌரவம் திரு. சிவஷண்முகம் பிள்ளை அவர்களுடைய காலத்திலிருந்து தங்கள் காலம் வரையிலும் நல்ல முறையில் காப்பாற்றப்பட்டு வருகிறது. மற்ற ராஜ்யங் களுக்கெல்லாம் வழிகாட்டியாக, எடுத்துக்காட்டாக பெருமைக்குரிய வகையில், நம்முடைய சட்டசபை விளங்குகிறது என்பதை என் அனுபவத்திலிருந்து சொல்ல ஆசைப்படுகிறேன். சில சட்டசபைகளை நாம் நேரடியாக பார்க்கிற நேரத்தில் நம்முடைய சட்டசபை கண்ணியமாகவும், பெருமையாகவும், நல்ல முறையில் மற்றவர்களுக்கு எடுத்துக்காட்டாக இருக்கின்ற முறையில் நடை பெற்று வருகிறது. குறிப்பாக சபாநாயகர் அவர்கள் கட்சி வித்தியாசம் இல்லாமல் எல்லோருக்கும் பேசுவதற்கு சம சந்தர்ப்பம் அளித்து நமது சபையின் கௌரவம் காப்பாற்றப்பட்டு வருகிறது என்று சொல்லுகின்ற நேரத்தில் என்னுடைய பாராட்டுதலை தெரிவித்துக்கொள்கிறேன். இதுவரை சபாநாயகர்களாக இருந்தவர்களின், புலுசு சாம்பமூர்த்தி, சிவசண்முகம் பிள்ளை, கோபால மேனோன் இவர்களது படங்கள் சபாநாயகர் அவர்களுடைய அறையில் வைக்கப்பட்டிருக்கிறது. அந்த (ரோவில்) வரிசையில் தங்களுடைய படத்தையும் வைக்கவேண்டும் என்று கேட்டுகொள்கிறேன்.

Mr. SPEAKER : நான்தான் இங்கு இருக்கிறேனே . . .

Sri A. GOVINDASAMY : தாங்கள் இருந்தாலும் தங்களின் படம் அந்த வரிசையில் இருக்கவேண்டியது அவசியம் என்று நான் கருது கிறேன். இருக்கிற ஆட்களின் படங்கள் எத்தனையோ இடங்களில் வைக்கப் பட்டிருக்கின்றன. உயிரோடு இருக்கிறவர்கள்கூட எத்தனையோ பேர் புகைப் படங்களை எடுத்து அவர்களுடைய வீடுகளில் மாட்டிவைக்கிறார்கள். தங்களுடைய படமும் இங்கே வைக்கப்பட வேண்டுமென்று சொல்லு கிறேன். அந்தப் படமும்கூட இந்த சபையில் தொங்கப்பட வேண்டும். தங்கள் அறையில் இருக்கக்கூடாது. இந்த சபையிலே இடமிருக்கிறது. இன்னார் இன்னார் சபாநாயகர்களாக இருந்திருக்கிறார்கள் என்று எல்லோரும் தெரிந்துகொள்ளும் பொருட்டு, அவர்களுடைய படங்கள் இங்கே தொங்கப்படவேண்டுமென்ற கருத்தினைத் தெரிவித்துக் கொள் கிறேன். 12-30 p.m.

அடுத்தபடியாக விசிட்டர்கள் காலரியைப் பற்றி ஒரு வார்த்தை சொல்ல விரும்புகிறேன். விசிட்டர்கள் அன்றாடம் வந்து கொண்டிருக்கிறார்கள் என்று சொல்லிவிட முடியாது. சில பேர் கிராமங்களிலிருந்து வரு கிறார்கள். இங்கே அமலில் இருக்கிற சட்ட திட்டங்கள் அவர்களுக்குத் தெரியாது என்கிற காரணத்தால் ஒரு சில அங்கத்தினர்கள் பேசுகிறபொழுது உற்சாகப்பட்டு, ஆரவாரம் செய்து கை தட்டுகிற நிலைமை ஏற்படுகிறது.

[ Sri A. Govindasamy] [7th April 1958

அந்த நேரத்திலே போலீஸ்காரர்கள் அவர்களை போலீசில் ஒப்படைக்க வேண்டிய துர்ப்பாக்கிய நிலைமை ஏற்படுகிறது. அதைத் தடுப்பதற்கு ஒரு வழி செய்யலாம். விசிட்டர்கள் காலரிக்கு நுழையும் இடத்தில், காலரியில் உட்கார்ந்திருக்கும்பொழுது என்னென்ன முறையில் நடந்துகொள்ள வேண்டுமென்று அறிக்கை எழுதி வைக்கலாம். விசிட்டர்களுக்குக் கொடுக்கும் பாஸ்களின் பின் புறத்தில் எப்படி எப்படி ஒழுங்கைக் காப்பாற்ற வேண்டுமென்று சொன்னால், இங்கே இருக்கிற போலீஸ்காரர்களுக்கோ, ஸார்ஜண்டுகளுக்கோ தொந்தரவு இருக்காது, விசிட்டர்களுக்கும் தொல்லை ஏற்படாது என்று நினைக்கிறேன். முக்கியமான வாதம் நடக்கிறபொழுது, இரண்டு மணி நேரம் சட்டசபையில் இருக்கலாம், இரண்டு மணி நேரம் கீழே இருக்க வேண்டுமென்ற நெருக்கடி ஏற்படுகிறது. இந்த நெருக்கடியை சபாநாயகர் ஒருவிதமாக சமாளித்துக் கொண்டாலும், பார்வையாளர்கள் சட்டசபை உறுப்பினர்களிடத்தில் கோபித்துக்கொண்டு போகவேண்டிய நிலைமை ஏற்படுகிறது. ஒரு உறுப்பினர் இரண்டு பேர்களுக்கு கையெழுத்துப் போட்டுக் கொடுக்கலாமென்றிருக்கிறது. ஆகையால் என் மீண்டும் சட்டசபையை மவுண்டு ரோட்டுக்கு கொண்டு போகக் கூடாது என்று கேட்கிறேன். நிச்சயமாக இந்த சபை இங்கே நீடித்து இருக்க முடியாத நிலைமை ஏற்படப்போகிறது. துறைமுக விஸ்தரிப்பு வேலை பூராவும் முடிவு பெற்றால், இங்கே சட்டசபை நடப்பது மிகமிக கஷ்டமாக யிருக்கும். அந்த நேரத்திலே அங்கே போவதற்கு முயற்சி செய்வதை விட, இப்பொழுது முன்கூட்டியே, இந்த சபையை மாத்திரமல்ல, இங்கேயிருக்கிற காரியாலயத்தையும் மவுண்டு ரோடுக்குக் கொண்டுபோவது நல்லது.

இப்பொழுதிருக்கிற கட்டிடத்தை குழந்தைகள் சினிமாவுக்காக ஏற்பாடு செய்துவிட்டாலும், அங்கே புதிதாக ஒரு கட்டிடத்தைக் கட்டலாம். நண்பர் தேனீ தியாகராஜன் அவர்கள் பஞ்சாபிலே சட்டசபை உறுப்பினர்களுக்கு ஹாஸ்டலிலே எவ்வளவு வசதிகள் செய்து கொடுத்திருக்கிறார்கள் என்பதைப் பற்றிச் சொன்னார்கள். அந்த முறையில் ஒரு புதிய ஹாஸ்டலை நிறுவலாமென்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். நானும் அங்கே சென்று பார்த்தேன். வீட்டிலே இருக்கிற சௌகரியம் இருக்கிறது. "வுட்லண்ட்ஸ் காட்டேஜ்" என்று சொல்லுகிறார்களே, அதிலே இருக்கிற சௌகரியத்தை அங்கே இருக்கிற உறுப்பினர்களுக்குச் செய்து கொடுத்திருக்கிறார்கள். "வடக்கு வாழ்கிறது, தெற்கு தேய்கிறது" என்று நாங்கள் மட்டும் சொல்லவில்லை. நண்பர் தியாகராஜன் அவர்களும் தன்னுடைய சௌகரியம் குறைகிறபொழுது, "வடக்கு வாழ்கிறது" என்பதை ஒப்புக்கொண்டதைக் குறித்து நான் மகிழ்ச்சி அடைகிறேன். அங்கு இருக்கிற சௌகரியங்களைப் பார்த்த பொழுது அந்த சௌகரியங்கள் நமக்கும் வரக்கூடாதா என்று பேசினார்கள். அந்தக் கருத்தை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

சபையிலே இப்பொழுது வோட்டிங் நடக்கும்பொழுது அங்கத்தினர்கள் நின்று வோட்டு அளிக்கும்படியான நிலைமை இருக்கிறது. டில்லி பாராளுமன்றத்திலே, ஒரு நவீன வோட்டிங் முறையைக் கையாளுகிறார்கள். ஒரு பட்டனை அமுக்கினால் பச்சை லைட் தெரியும். இன்னொரு பட்டனை அமுக்கினால் சிவப்பு லைட் தெரியும். பச்சை லைட் "ஏஸ்" (Ayes) என்பதைக் குறிக்கும். சிவப்பு லைட் "நோஸ்" (Noes) என்பதைக் குறிக்கும். அந்த முறையை இங்கே கையாளலாமென்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

சட்டசபை உறுப்பினர்கள் "செக்" மாற்றவேண்டுமென்று சொன்னால், மவுண்டு ரோட்டிலுள்ள ஹாஸ்டலுக்குச் சென்று மாற்றவேண்டிய நிலைமை இருக்கிறது. சட்டசபை நடவடிக்கைகள் முடிந்து பாங்குக்குப் போய் செக்கை கொடுக்கிற நேரத்திலே பாங்கு மூடப்படுகிறது. ஆகையினால் இந்தக் கட்டிடத்திலேயே பாங்குக்கு ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

7th April 1958] [ Sri A. Govindasamy]

நம்முடைய மாகாணத்திலே தமிழ் ஆட்சி மொழியாக வந்துவிட்டது. ஆனால் சட்டசபையில் பெருவாரியான நடவடிக்கைகள் இன்னும் ஆங்கிலத்தில் தான் நடந்து கொண்டிருக்கின்றன. மூல கேள்விக்கு பதில் சொல்லும்பொழுது அமைச்சர் அவர்கள் ஆங்கிலத்தில் தான் பதில் கொடுக்கிறார்கள். இதனால் உப கேள்விகள் போடும்பொழுது ஆங்கிலம் தெரியாத சட்டசபை உறுப்பினர்களுக்கு சங்கடம் ஏற்படுகிறது. அமைச்சர் என்ன சொன்னார் என்பதைத் தெரிந்து கொள்ள முடியாமல் அதையே மீண்டும் உப கேள்வியாகக் கேட்கக்கூடிய தர்ம சங்கடம் ஏற்படுகிறது. மூல கேள்விக்கு முதலில் பதில் கொடுக்கும்பொழுது, அந்த பதிலும் தமிழில்தான் இருக்கவேண்டும். அதோடு சட்டசபை நடவடிக்கைகள் பூராவும் தமிழில் இருக்கவேண்டும். உப கேள்விகளுக்குப் பதில் சொல் லும்பொழுதும் தமிழிலேயே சொல்ல வேண்டும். தமிழ் தெரிந்தவர்கள் கூட ஆங்கிலத்தில் உப கேள்விகளைப் போடுவதன் காரணமாக, அமைச்சர் அவர்களும் ஆங்கிலத்தில் பதில் கொடுக்க வேண்டிய நிலைமை ஏற்படு கிறது. அவர்கள் என்ன கேட்டார்கள், அமைச்சர் அவர்கள் என்ன பதில் சொன்னார்கள் என்பதைப் புரிந்து கொள்ளமுடியாமல் அதே கேள்வியைத் திரும்பவும் கேட்க வேண்டிய நிலைமை ஏற்படுகிறது. எல்லா நடவடிக்கையுமே தமிழில் நடக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக இந்த ஆண்டில் நமக்கு தேர்தல் செலவுக்காக கொடுக்க வேண்டிய பணத்தை ரூ. 1,13,000 ஐக் குறைத்திருக்கிறார்கள். மத்திய சர்க்கார் நமக்கு ரூ. 14,13,000 கொடுக்க வேண்டும். ஆனால் ரூ. 13,00,000 தான் கொடுத்திருக்கிறார்கள். ஏன் பூராத் தொகை யையும் கொடுக்கவில்லை என்பது தான் கேள்வி. மக்கள் சபை தேர் தலையும் சேர்த்துத் தான் நடத்தியிருக்கிறோம். ஆகவே அந்தத் தொகை யைப் பெறுவதற்கு அமைச்சர் அவர்கள் நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

தேர்தல் பட்டியல் தயார் செய்வதற்கும், உப தேர்தல் இருந்தால் அந்த ஆண்டு அதிகமாகச் செலவு செய்யவேண்டிய நிலைமை இருக் கிறது. தேர்தல் பட்டியல் தயார் செய்யும் தொழிலில் பெருவாரியாக ஆசிரியர்கள் தான் ஈடுபடுகிறார்கள். அப்படி வேலை செய்கின்ற நாட் களுக்கு அவர்களுக்கு "அலவன்ஸ்" கொடுத்தால் இன்னும் திறமை யாக அவர்கள் வேலை செய்ய முடியும். தேர்தல் காலத்தில் வேலை செய்தவர்களுக்கு இன்னும் டி. ஏ. கொடுக்கப்படாமல் இருக்கிறது. அதை எல்லோருக்கும் காலதாமதம் இல்லாமல் கொடுப்பதற்கு ஏற்பாடு செய்யவேண்டும்.

அடுத்தபடியாக, இந்த சட்ட மன்றத்திலே வேலைபார்க்கும் எல்லா என். ஜி. ஓ. க்களுக்கும், கீழ்த்தர சிப்பந்திகளுக்கும் போதுமான சம்பள உயர்வு இல்லாத நிலைமை இருக்கிறது. அவர்களுக்கு வேலைப் பளு அதிகரித்துக்கொண்டே போகிறது. நண்பர் தேனீ தியாகராஜன் அவர்கள் தனிப்பட்ட முறையில், இங்கேயுள்ள அதிகாரிகள் ஒத்துழைக்கவில்லை என்று சொன்னார். தனிப்பட்ட முறையில் குற்றச்சாட்டு இருந்தாலும், இங்கே இருக்கிற காரியதரிசிகளும், குமாஸ்தாக்களும, மற்றவர்களும் சட்டசபை உறுப்பினர்களுக்குத் தேவையான வசதிகளைச் செய்து தான் கொடுக்கிறார்கள். நாம் கேட்கிற குறிப்பிட்ட வேலைகளைச் செய்து கொண்டு தான் வருகிறார்கள். தனிப்பட்ட முறையில் இந்தமாதிரிக் குற்றச்சாட்டு வந்தாலும் அதைத் தீர்க்கவேண்டிய பொறுப்பு ஆட்சியாளருக்கு உண்டு. ஆனால் என்னைப் பொறுத்த வரையில் நான் பழி சுமத்தத் தயாரா யில்லை. சட்டசபை வேலைப் பளுவைக் குறைக்கவேண்டும். இங்கே வேலை பார்க்கிறவர்களின் சம்பளத்தை உயர்த்த வேண்டும், இங்கே டெம்பரரி யாக வேலை பார்க்கின்ற பியூன்கள் சட்டசபை நடக்கின்ற நாட்களைத்தவிர, மற்ற நேரங்களிலே வேலையை இழக்கும்படியான நிலைமை ஏற்படு கிறது. அவர்கள் வேலையில்லாமல் கஷ்டப்படுகிறார்கள். அதனால் அவர்கள் குடும்பமும் கஷ்டப்படுகிறது. இதை தவிர்ப்பதற்கு வழி செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

[ Sri A. Govindasamy] [7th April 1958

இந்த சட்டசபைக் கட்டிடத்துக்குள்ளேயே பார்ட்டி ஆபீஸ்கள் இருக்க வேண்டும். ஒவ்வொரு கட்சிக்கும் ஒரு தனி அரை இருக்க வேண்டும். இந்தமாதிரி வசதியில்லாத காரணத்தால் லாபியிலே உட்கார்ந்து பேசிக்கொண்டிருக்கிறபொழுது பல சங்கடங்கள் ஏற்படுகின்றன. ஒரு குறிப்பிட்ட விஷயத்தைப் பற்றி முடிவு செய்யவேண்டுமென்று சொன்னால் தனியாக இடமில்லாத நிலைமை ஏற்படுகிறது. சட்டசபை உறுப்பினர்கள் கட்சிக்கூட்டம் நடத்துவதற்கு தனி அறைகள் ஒதுக்கப்பட்டாலும், போதுமான சௌகரியம் இல்லை. சென்ற சட்டசபை இருந்த காலத்தில் பழைய ஹாஸ்டலிலே ஒதுக்கியிருந்தார்கள். ஏன் இந்த சட்டசபை நடக்கிற பொழுதும் ஹாஸ்டலிலே வசதி செய்து கொடுக்கக்கூடாது என்று கேட்கிறேன். " உங்கள் சம்மதத்தின் பேரில்தானே ரூம்கள் ஒதுக்கியிருக்கிறோம் " என்று கேட்கலாம். ஒன்றுமே யில்லை என்ற காரணத்திற்காகத் தான் கொடுத்ததை ஒத்துக்கொண்டிருக்கிறோம். ஆகவே, சட்டசபை நல்ல முறையில் நடப்பதற்கும், சட்டசபை உறுப்பினர்கள் தங்களுடைய வேலைகளைத் திறமையாகச் செய்வதற்கும் வேண்டிய வசதிகளைச் செய்து தர வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இப்பொழுது ஹாஸ்டல் வாடகை ரூ. 2½ ஆக இருக்கிறது. இதைக் குறைக்கலாம். சௌகரியக் குறைவு இருக்கிற காரணத்தினாலே, வாடகையைக் குறைக்கவேண்டும். அப்படிக் குறைத்தால் நஷ்டம் ஒன்றும் ஏற்படாது. இந்த ஹாஸ்டலில் சாப்பாட்டு வசதி சரியாக இல்லை.
12-40 p.m. ஆகையால் வேறு ஒட்டலுக்குப் போய் சாப்பிடும்படியான நிலைமை இருக்கிறது. ஏதோ ஒரு சிலருக்கு அங்கு கிடைக்கும் சாப்பாடு பிடிக்கிறது. மற்றவர்களுக்கு அது பிடிப்பது இல்லை. ஆகையால் எல்லோரும் அங்கேயே சாப்பிட வேண்டும் என்று நிர்ப்பந்தம் செய்யக் கூடாது. மொத்தத்தில் சாப்பாடு வசதி சரியாக செய்து கொடுக்கப்பட வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

உறுப்பினர்கள் தங்கும் அறைகளில் அவர்கள் நண்பர்களோ அல்லது உறவினர்களோ வந்து தங்கும்படி நேர்ந்தால் ஒரு ரூபாய் கட்டணம் வாங்கிக்கொண்டால் போதும். இதற்குத் தகுந்தவாறு விதிகளை மாற்றி அமைக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டு என்னுடைய உரையை நிறுத்திக் கொள்கிறேன்.

* **Sri V. K. RAMASWAMY MUDALIAR** : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த வெட்டுப் பிரேரேணையை நான் ஆதரிக்கிறேன். 1957-ம் வருஷம் மார்ச் மாதம் புதிய சட்ட சபைக்கு தேர்தல் நடந்து ஒரு வருஷ காலமாக இந்தக் கட்டிடத்தில் வேலை நடந்து வருகின்றது. ஆரம்பக் காலத்தில் திடீரென்று சட்டசபையின் அனுமதியில்லாமல் மௌண்ட் ரோடிலிருக்கும் நல்ல கட்டிடத்தை விட்டுவிட்டு இங்கு வந்து பல கஷ்டங்களுக்கு உள்ளாகியிருக்கிறோம் என்று முன்பே சொன்னேன். இப்போதும் சொல்கிறேன். ஆகையால் அதிகமாக சொல்லவேண்டிய அவசியம் இல்லை, இந்த ஒரு வருஷ காலமாக சட்டசபை அங்கத்தினர்கள் படும் கஷ்டத்தைப் பார்த்து கனம் அமைச்சர் அவர்களுடைய மனது மாறி அங்கத்தினர்களுக்கு பல வித சலுகைகள் கொடுப்பதற்கு முன் வர வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இந்த சட்டசபை மௌண்ட் ரோடிலிருந்து இவ்விடம் வந்திருப்பதில் இரண்டு, மூன்று லட்சம் ரூபாய் நம்முடைய சர்க்காருக்கு செலவாகியிருக்கிறது என்பதைப்பற்றி யாருக்கும் சந்தேகம் இருக்கமுடியாது. இந்தக் கட்டிடத்தில் மெம்பர்களுக்கு போதுமான வசதிகள் கிடையாது. 'லௌஞ்ச்' கிடையாது நூல் நிலையத்தில் இருந்து ஒரு புஸ்தகம் வேண்டும் என்று சொன்னால் அது மௌண்ட் ரோட் பகுதியில் இருக்கிறது என்று 'லைப்ரேரியன்' சொல்லுகிறார்கள். இம் மாதிரி பலவித கஷ்டங்கள் இருக்கின்றன. இங்கு கட்சிகளுக்காக தனிப்பட்ட ஒரு அறை கிடையாது. சுமார் ஒரு வருஷம் கழித்து எதிர் கட்சித் தலைவர் என்கிற முறையில் எனக்கு ஒரு சிறிய அறை கொடுக்கப்பட்டிருக்கிறது. அதில் நான்கு பேருக்குமேல் உட்கார முடியாது. அந்த அறையில்

7th April 1958] [Sri V. K. Ramaswamy Mudaliar]

அதிக நேரம் உட்கார முடியாது. எனென்றால் சிறு நீர் கழிக்கும் இடம் பக்கத்தில் இருக்கிறது. அதிக நாள் கழித்துத்தான் அந்த அறைக்கு டெலிபோன் கொடுத்திருக்கிறார்கள். அங்கு 'லௌட் ஸ்பீகர்' இன்னும் வைக்கவில்லை. அந்தப் பேப்பர் இன்னும் சுற்றிக்கொண்டிருக்கிறது. இம்மாதிரி பலவித கஷ்டங்கள் இருக்கின்றன. இப்படியே கஷ்டங்களை அனுபவித்துக் கொண்டு 4, 5 வருஷங்களுக்கு இருப்பதா என்பதை நாம் சற்று யோசிக்கவேண்டும். சமீபத்தில் நான் மைசூருக்கும், பம்பாய்க்கும் போயிருந்தேன். அங்கு அங்கத்தினர்களுக்கு எல்லா விதமான வசதிகளும் செய்து கொடுத்திருக்கிறார்கள். இப்போதும் இங்கு ஒன்றும் மிஞ்சிவிடவில்லை. மத்திய சர்க்காரிடமிருந்து சுமார் 30 லட்சம் ரூபாய் நம் சட்ட சபைக் கட்டிடங்களுக்காக கிடைத்திருக்கிறது என்று நான் நினைக்கிறேன். இதில் ஏதாவது தவறு இருக்குமானால் அமைச்சர் அவர்கள் என்னை திருத்துவார் என்று நினைக்கிறேன். மௌண்ட் ரோடில் முன்பிருந்த கட்டிடம் திரும்பி கிடைப்பதற்கு சௌகரியம் இல்லாவிட்டால் ஒரு புதிய கட்டிடத்தை சீக்கிரத்தில் கட்டவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அப்படி இல்லாவிட்டால் இப்பொழுதிருக்கும் அறையை குளிர்ச்சி அறையாக மாற்றி அமைக்கலாம் என்று கேட்டுக் கொள்ளுகிறேன், கௌன்சில் மெம்பர்கள் அதிகமாகிக்கொண்டு வருவதினால் இடம் போதாத காரணத்திற்காக வேறு இடம் கட்டப்போவதைப் பற்றி சர்க்கார் முயற்சிகள் எடுத்துக்கொண்டிருக்கிறார்கள் என்று தெரிகிறது. ஆகையால் இவைகளை யெல்லாம் தீர்க்கமாக யோசித்து நல்ல முறையில் ஒரு கட்டிடத்தை அமைத்து அந்த இடத்திற்கு சட்டசபையை மாற்றலாம் என்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம்.

அங்கத்தினர்கள் காப்பி, டிபன் சாப்பிடுவதற்குகூட சரியான வசதி கிடையாது. கூட்டத்தோடு கூட்டமாகப்போய், இடிப்பட்டு கஷ்டப்பட்டு சிற்றுண்டி சாப்பிடவேண்டிய நிலைமை இருக்கிறது. இதையெல்லாம் சர்க்கார் யோசிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். மத்திய சர்க்கார் லோக் சபை அங்கத்தினர்களுக்கு எவ்வளவோ வசதிகள் செய்து கொடுத்திருக்கிறார்கள். அதே மாதிரி நம் ராஜ்ய சர்க்காரும் இங்குள்ள அங்கத்தினர்களுக்கும் வசதிகள் செய்து கொடுக்கவேண்டும் என்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம், ஹாஸ்டலில் தங்கி இருப்பவர்களுக்கு சரியான சாப்பாட்டு வசதி இல்லை என்று புகார்கள் வந்து கொண்டு இருக்கின்றன. இந்த குறைகளை கவனித்து நல்ல முறையில் ஹாஸ்டல் நடக்கவேண்டிய ஏற்பாடுகளை செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

ஹைதராபாத்தில் அங்கத்தினர்களிடம மாதத்திற்கு ரூபாய் 25 விகிதம் குடிக்கூலி வாங்கிக்கொண்டு 'Family Quarters' கொடுத்திருக்கிறார்கள். இங்குள்ள அங்கத்தினர்களுக்கும் அம்மாதிரி கொடுக்கலாம் என்று நினைக்கிறேன். எல்லா அங்கத்தினர்களும் இதைப் பயன்படுத்திக்கொள்ளப்போவதில்லை. தேவைப்படுகிரவர்கள் இதை பயன்படுத்திக்கொள்ளலாம் என்றும் இந்த வசதியை அரசாங்கம் செய்து கொடுக்கவேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அங்கத்தினர்களுக்கு இந்த மாகாணத்தில் சுற்றுப்பிரயாணம் செய்ய ரெயில்வே டிக்கெட் சலுகை கொடுக்கவேண்டும். சமீபத்தில் நடந்த பிசினஸ் அட்வைசரி கமிட்டி கூட்டத்தில் இதைப் பரிசீலனை செய்வதாக அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். இதை சீக்கிரம் பரிசீலனை செய்து முடிவு செய்யவேண்டும். இம்மாதிரி சலுகைகள் கொடுத்தால் அங்கத்தினர்கள் 365 நாட்களும் பிரயாணம் செய்து கொண்டிருப்பார்கள் என்ற எண்ணத்தையும் கைவிடவேண்டும். அங்கத்தினர்கள் பொறுப்பு வாய்ந்தவர்கள். 75,000 ஓட்டர்களின் பிரதிநிதிகள். ரயில் சலுகை கொடுத்தாலும், சாப்பாடு இன்னும் மற்ற செலவுகள் இருக்கும். ஆகையால் அங்கத்தினர்களுக்கு மாகாணம் முழுவதும் சுற்றுப்பிரயாணம்செய்ய 'இலவச பாஸ்' கொடுகக அரசாங்கம் முன்வரவேண்டும். லெஜிஸ்லேசர் டிபார்ட்மெண்டைப் பற்றி பல அங்கத்தினர்கள் பேசினார்கள். மற்ற டிபார்ட்மெண்டுகளில் இருப்பதைப் போல், சட்ட இலாகா, நிதி இலாகா போன்று இந்த இலாகாவில் இருப்பவர்

[Sri V. K. Ramaswamy Mudaliar] [7th April 1958

களுக்கும் சலுகை கொடுத்து அவர்களுடைய 'ஸ்டேட்டஸை உயர்த்துவதற்காக முயற்சிகளை எடுத்துக்கொள்ளவேண்டும். 'லெஜிஸ்லேசர் பாடி' ஒரு 'சாவரின் பாடி' என்று சொல்வார்கள். அங்கத்தினர்களுக்கு மட்டும் சலுகை கொடுப்பதோடு நிற்காமல் இலாகாவின் ஸ்டேட்டஸை உயர்த்தி அதை ஒரு தனி இலாகாவாக ஆக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

எலெக்ஷன் செலவுகள் இதில் காட்டப்பட்டிருக்கின்றன. இந்த அம்சத்தை இதிலிருந்து நீக்கிவிடவேண்டும். தனி அம்சமாக இதைக் காட்டலாம் என்று நிதி அமைச்சரைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அரசியல் சட்டம் பற்றி முன்பே ஒரு தரம் சொன்னேன். இப்பொழுதும் வற்புறுத்துகிறேன். ஒன்றுக்கு ஒன்பது என்ற விகிதம்
12-50 வேண்டும். 1 : 9 என்ற ரேஷியோவில் போடலாம். சர்க்காருக்கு அந்த உரிமை இருக்கிறது. அதேமாதிரி திருத்தி அமைக்கலாம். மற்ற மாகாணங்களில், அஸ்ஸாம், மைசூர் போன்ற மாகாணங்களில், ஒன்றுக்கு எட்டு, ஒன்பது என்று இருக்கிறது. அந்த ரீதியில் டீலிமிடேஷன் பண்ணவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அதாவது அங்கத்தினர்களுடைய எண்ணிக்கையை அதிகப்படுத்தவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அங்கத்தினர்களெல்லாம் சொல்ல வேண்டிய குறைகளை சொன்னார்கள். நான் கடைசியாக கேட்டுக்கொள்வது ஒன்றே ஒன்றுதான். அங்கத்தினர்கள் கோரும் சலுகைகளையெல்லாம் கூடிய சீக்கிரம் கொடுக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். அங்கத்தினர்கள் படும் கஷ்டங்களை நிவர்த்திக்க சர்க்கார் ஆவன செய்ய வேண்டும்.

அங்கத்தினர்கள் அனுப்பும் பெட்டிஷன்களுக்கும், லெட்டர்களுக்கும் அனேக டிபார்ட்மெண்டுகளிலிருந்து பதில் வருவதில்லை. அங்கத்தினர்கள் பொறுப்பு வாய்ந்தவர்கள். அவர்கள் சர்க்காருக்கோ அமைச்சருக்கோ எழுதும் கடிதங்களுக்கு உடனுக்குடன் பதில் தரப்பட்டு அவை கவனிக்கப்பட வேண்டும். நாங்கள் சொன்னதையெல்லாம் ஏற்றுக்கொண்டு தக்க நடவடிக்கை எடுக்கப்படுமென்று எதிர்பார்க்கிறேன்.

**The Hon. Sri C. SUBRAMANIAM** : சபாநாயகர் அவர்களே ! இந்த மான்யத்தின்மீதுநடந்த விவாதத்தில் பல கருத்துகள் தெரிவிக்கப் பட்டன. முதன்முதலில் இந்த சபையில் இருக்கக்கூடிய அங்கத்தினர்களின் எண்ணிக்கையை உயர்த்தவேண்டும் என்பதைப்பற்றி சில அங்கத்தினர்கள் வற்புறுத்தினார்கள். அதற்கு மேற்கோளாக மற்ற சபைகளிலே இருக்கும் எண்ணிக்கையையும் எடுத்துக் காட்டினார்கள். நான் அவர்களுக்கு ஒன்று சொல்ல விரும்புகிறேன். நம்முடைய தமிழ் நாட்டை பொருத்த வரையில் எண்ணிக்கையை உயர்த்தித்தான் காரியங்களை செய்யவேண்டும் என்ற மறபிலே நாம் இயங்கவில்லை என்பதை தெரிவித்துக்கொள்கிறேன், நமது சட்ட சபையில் அங்கத்தினர்களும் குறைவு நமது மந்திரிகளின் எண்ணிக்கையும் குறைவு. நமது காரியாலயங்களிலேயே வேலை செய்பவர்களும் குறைவு. குறைவானவர்களை வைத்துக் கொண்டே அதிகமான வேலையை செய்யும் திறமை நமக்குத்தான் இருக்கிறது என்பதை சொல்ல வேண்டியது அவசியமில்லை. நம் சர்க்கார் இல்லை, மத்திய இலாகா ஒன்றில் நடக்கும் நிகழ்ச்சிக்கு நான் தலைமை வகித்தேன். அங்கே இருந்த—தமிழ் அதிகாரி அல்ல—வேறு பாகத்திலிருந்து வந்திருந்த ஒரு அதிகாரி சொன்னார்கள். ஒரு காரியத்திற்கு ஒரு பகுதியிலிருந்து இத்தனை எண்ணிக்கை வேண்டுமென்றால் நம் பகுதிகளிலிருந்து மிக குறைந்த எண்ணிக்கை இருந்தாலே போதும், என்பதைப்பற்றி சொன்னார்கள்.

**Sri K. ANBAZHAGAN** : அமைச்சர் அவர்கள் தமிழர்களின் திறமையையும் ஆற்றலையும் பற்றிகுறிப்பிட்டார்கள். ஜனநாயக தத்துவத்தில் மக்களுக்கு கொடுக்க வேண்டிய பிரதிநிதிகளை கோருகின்றபோது தனிப்பட்ட மக்களின் பிரதிநிதித்துவம் சீர் கெட்டுவிடும் என்று அமைச்சர் கருதுகிறார்களா ?

7th April 1958]

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்பொழுது கனம் அன்பழகன் 75,000 பேர்களுக்கு பிரதிநிதியாக செயலாற்ற முடியாது என்றால், அப்படித் தன்னைக் குறைவு படித்திக்கொள்வது தமிழ் பணபின் காரணத்தால் என்று நினைக்கிறேன். 75,000 ஆனால் என்ன ஒன்று அல்லது ஒன்றரை இலட்சமானால் என்ன ? பிரதிநிதியாக செயலாற்ற முடியும் என்று சொல்லுவேன். ஆகையினால் பிரதிநிதி நல்ல முறையிலே பிரதிநிதியாக விளங்க முடியும். குறைந்தால் தான் நன்றாக விளங்க முடியும் என்பது பூராவும் ஒத்துக்கொள்ளக்கூடிய கருத்து அல்ல என்பது என் அபிப்பிராயம் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். ஆகவே இன்னும் எண்ணிக்கையை கூட்டுவதால் சிறந்த சபையாகவோ நல்ல முறையிலே இயங்க முடியும் என்றோ நான் கருதவில்லை. எப்படி இருந்தாலும் நல்ல முறையிலே பணியாற்ற வேண்டும் என்று முடிவு செய்து கொண்டால் போதுமானது. இதை எதற்காக சொல்லுகிறேன் என்றால் இப்பொழுது நாம் 205 பேர்கள் இருக்கிறோம். இதற்கே போதிய சௌகர்யங்களை செய்துகொள்ள முடியாமல் இத்தனை புகார்களும் வருகின்றன. இதை இன்னும் 300 பண்ணிக்கொண்டு அதற்கு சௌகர்யங்களை செய்துகொள்ள முடியாமல் கஷ்டப்படுவானேன், என்று தான். 205-க்கே இவ்வளவு புகார்கள் என்றால், 300-க்கு இன்னும் அதிக குறைகள் ஏற்படும். ஆகவே நம் எண்ணிக்கையை இன்னும் 100 அதிகம் ஆக்க வேண்டும் என்பது இப்பொழுது இருக்கும் நிலையில் சரியான யோசனையாக இருக்க முடியாது.

இன்னொரு கருத்தையும் சொல்லுகிறேன். இதை பல சமயங்களில் சொல்லியிருக்கிறேன். இப்பொழுதும் சொல்ல விரும்புகிறேன். இந்த சபையானது நல்ல முறையிலே இயங்குவதற்கு எல்லாவிதமான சௌகர்யங்களையும் அங்கத்தினர்களுக்கு செய்து கொடுக்க கடமை பட்டிருக்கிறோம். அந்த முறையிலே அதற்கென்று இருக்கும் கமிட்டியிலே முடிவுகள் வருகின்றன. ஆனால் அதிலும் கருத்து வேறுபாடுகள் ஏற்படுகின்றன. முதன் முதலில் அங்கத்தினர்கள் தங்கும் விடுதிகள் நல்ல முறையிலேயே இயங்க வேண்டும். அதற்கு ஒரு தனிக்கமிட்டி இருக்கிறது. அவர்களே காரியங்களை முடிவு செய்து கண்காணிக்க அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இருந்தாலுங்கூட அதிலே பல குறைகள், புகார்கள் வந்துகொண்டே இருக்கின்றன. நான் ஒரு உறுதியை கொடுக்க முடியும். ஹௌஸ் கமிட்டியின் தீர்மானத்தை நான் நிராகரித்து இருப்பதாக நினைவில்லை. சௌகரியங்களைப் பொறுத்த வரையில் நான் நிராகரித்து இருந்தால்கூட—வாடகையில் வேண்டுமானாலும் ரூ. 2–8–0-ஐ ரூ. 2–0–0 ஆக குறைக்க சம்மதித்து இருக்க மாட்டேன். அவை தொடர்ந்து வரும்போது கோரும் சௌகர்யங்களை செய்வதில் எதையும் நிராகரித்து இருப்பதாக ஞாபகமில்லை.

சாப்பாட்டு வசதி சௌகர்யமாக இல்லை என்பதைப்பற்றி இந்த வருஷத்தில் அல்ல 5 வருஷமாகவே ஒரு ஏற்பாடு செய்ய வேண்டும் என்று சொல்லிக்கொண்டு வந்திருக்கிறேன். ஒரு தனி ஏற்பாட்டை செய்து, ஹோட்டல் நடத்துபவரைக் கொண்டு ஏற்பாடு செய்யலாமா என்று யோசனை கேட்டேன். அதிகச் செலவு ஆனாலும் சர்க்காரிலிருந்து ஓரளவு கொடுத்து அங்கத்தினர்களிடம் குறைந்த அளவில் பெறலாமா என்று யோசிக்கப்பட்டது. ஆனால் அங்கத்தினர்கள் அதை மறுத்து விட்டார்கள். இதற்கு பிறகு இப்பொழுது உணவு ஏற்பாட்டை அங்கத்தினர்கள் ஒரு கமிட்டியின் மூலமாகவே செய்து நல்ல முறையிலே நடத்த வேண்டும் என்ற ஏற்பாட்டை செய்தார்கள். இதை சர்க்கார் ஏற்றுக்கொண்டு கண்காணிக்கவும் ஏற்பாடு செய்தது. இதிலே பல தகராறு அபிப்பிராயபேதம் கருத்துவேற்றுமைகள். இன்றைக்கு தரம் குறைந்துவிட்டது என்று பல புகார்கள். ஆகையால் ஹௌஸ் கமிட்டிக்கு முழு பொறுப்பும் கொடுத்து அதிகமான செலவானாலும் சர்க்காரிலிருந்து போட்டுக்கொள்ள தயார். எந்த ஏற்பாட்டை செய்து கொள்வதானாலும் என்னைப் பொறுத்த வரையில் ஏற்றுக்கொள்ள தயார். ஆனாலும் இதிலும் கட்சி, பிரதிக் கட்சி வந்துவிடுகிறது. அரசியல் கட்சி

[Sri C. Subramaniam] [7th April 1958

அடிப்படையில் அல்ல, சாப்பாட்டு கட்சி அடிப்படையில் வந்துவிடுகிறது
1 அங்கத்தினர்கள் சாப்பாட்டிற்கு நல்ல முறையில் ஏற்பாடு செய்ய
p.m. வேண்டியது அவசியம். ஆனால் இதை எந்த முறையில் செய்வது என்பது பற்றி எனக்குக்கூட ஒரளவு புரியாமல் இருக்கிறது. அதன் காரணமாக திக்குமுக்கலாட வேண்டியிருக்கிறது. இது பற்றி கமிட்டி இல்லாவிட்டாலும், கட்சித் தலைவர்களெல்லாம் கூடி ஒரு திட்டத்தை வகுத்து ஆலோசனை சொன்னால் அதை எல்லோரும் ஒப்புக்கொள்ளுவதா யிருந்தால், அதையும் ஏற்றுக்கொள்ள தயாராக இருக்கிறேன். 1 மாதம் 1½ மாதம் அங்கத்தினர்கள் இங்கு தங்கவேண்டியிருக்கும்பொழுது அவர்கள் சாப்பிடும் உணவு நல்ல உணவாக இருப்பது, ஆரோக்கியத்தை பாதிக்காத உணவாக இருக்கவேண்டியது மிகவும் அவசியம். அதை எந்தமுறையில் ஏற்படுத்தவேண்டுமென்று அங்கத்தினர்கள் விரும்பு கிறார்களோ அந்த முறையில் ஏற்படுத்தி, அதற்கான செலவையும் சர்க்கார் ஏற்றுக்கொள்ள தயாராக இருக்கிறது. இன்னும் அங்கத்தினர் களுக்கு வேண்டிய மற்ற சௌகரியங்களையும் பரிசீலித்து அது சம்பந்தமாக முடிவு செய்தால், அந்த முடிவுகளை நிறைவேற்றி வைப்பதற்கு எல்லாவிதமான நடவடிக்கைகளும் எடுத்துக்கொள்ளப்படும்.

சட்டசபை அங்கத்தினர்கள் விடுதியில் இருக்கக்கூடிய அரை வசதிகளைப் பற்றி தியாகராஜன் அவர்கள் குறை கூறினார்கள். பண நெருக்கடியாக இருந்த காலத்திலே 1950–51-ம் வருஷத்தில் இந்தக் கட்டிடம் கட்டப்பட்டது. அப்பொழுது தனித்தனி அரைகளாக இருந்தால் போதும், ஒவ்வொரு அரைக்கும் பாத் ரூம் அவசியமில்லை என்ற முறையிலே கட்டிடத்தை கட்டி முடித்தார்கள். அதிலும் இப்பொழுது ஏதாவது மாறுதல் செய்யவேண்டு மென்று அங்கத்தினர்கள் எல்லோரும் கருதுவார்களேயானால், அந்த மாறுதல்களை செய்வதில் ஒன்றும் கஷ்டம் இருக்காது. அந்த மாறுதல் எவ்வளவு தூரம் அவசியம் என்பதை அங்கத்தினர்கள் எல்லோரும் யோசித்து ஒரு முடிவுக்கு வரும்படி கேட்டுக்கொள்ளுகிறேன். இது விஷயமாக ஒரு முடிவான யோசனையை அங்கத்தினர்கள் தெரிவிப்பார்க ளேயானால், அடுத்த கூட்டத்திற்கு முன்னால் செய்யவேண்டிய மாறுதல்களை செய்துவிடலாம். அந்த அளவிற்கு அரைகள் குறையும். அதை ஈடு செய்வது எப்படி என்பது பற்றி யோசித்து அதற்கும் ஏதாவது ஏற்பாடு செய்யமுடியும் என்று கருதுகிறேன். அது ஒன்றும் நாம் சமாளிக்க முடியாத காரியம் அல்ல. அதேமாதிரி அந்த விடுதியில் மற்றும் அங்கத் தினர்களுக்கு என்னென்ன சௌகரியங்கள் வேண்டும் என்பது பற்றி முடிவு செய்து, முடிவான கருத்துகளை தெரிவிப்பார்களேயானால், அந்த சௌகரியங் களை செய்து கொடுப்பதற்கு என்னைப் பொறுத்த வரையில் தயக்கம் இருக்காது என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இன்றைக்கு நான் இதைச் சொல்லவில்லை. பல தடவைகள் நான் இதைச் சொல்லியிருக் கிறேன். இருந்தாலும், உருவான திட்டம் ஒன்றை நான் பார்த்ததாக எனக்கு ஞாபகம் இல்லை. அப்படி முன்பு ஏதாவது ஒரு திட்டம் சமர்ப் பிக்கப்பட்டு அதை நான் கவனிக்காமல் இருந்தால்கூட, இனி இம்மாதிரி வரக்கூடிய திட்டங்களை நிறை வேற்றுவதற்கு, அமுல் நடத்துவதற்கு சகல முயற்சிகளையும் செய்கிறேன். பணம் ஒதுக்கினாலும்கூட, அதற்கு வேண்டிய நடவடிக்கை எடுத்து உத்தரவுகள் போட்டாலும்கூட, அதை நிறைவேற்றக் கூடியது அங்கத்தினர்களுடைய பொறுப்பாக இருக்கிறது, இந்த இலாகா வினுடைய பொறுப்பாக இருக்கிறது. அதிலும்கூட தாமதம் ஏற்படுகிறது என்பதையும் நான் கவனிக்கிறேன். ஆகவே, அங்கத்தினர்களுடைய சௌகரியத்திற்கு முதல் இடம் கொடுக்கவேண்டுமென்பதை ஒப்புக்கொள்ளு வதற்கு நான் தயாராக இருக்கிறேன். அங்கத்தினர்களுக்கு இருக்கக்கூடிய வசதிகளை எந்தமுறையில் அதிகப்படுத்தவேண்டும், திருத்தவேண்டும், மாற்ற வேண்டுமென்ற முடிவுகளை தெரிவித்துவிட்டால், அந்த முறையில் மாற்று வதற்கோ, திருத்துவதற்கோ, அதிகப்படுத்துவதற்கோ வேண்டிய நடவடிக் கைகளை சர்க்கார் உடனே எடுத்துக் கொள்ளும். இதனால் ஆகக்கூடிய சிறிய செலவுத் தொகை பட்ஜெட்டை அதிகமாக பாதித்துவிடாது. அங்கத்தினர் கள் இது பற்றி சிபார்சு செய்யும்பொழுது இதையும் மனதில் வைத்துக் கொண்டு தான் செய்வார்கள். பொது மக்களுடைய பிரதிநிதிகளாக இருப்பதினாலே அதிகப்படியாக வீண் செலவு செய்யவேண்டுமென்று

7th April 1958] [Sri C. Subramaniam]

அவர்கள் சிபார்சு செய்யமாட்டார்கள் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது. ஆகவே அந்தப் பொறுப்பை அங்கத்தினர்களுக்கே விட்டுவிடுகிறேன். அவர்கள் இது விஷயமாக சொல்லக்கூடிய திட்டத்தை நான் ஏற்றுக் கொள்ளுவேன் என்று உறுதி கூறுகிறேன்.

அதே முறையில்தான் சபை நல்ல முறையில் நடப்பதற்கு சபை நடக்கின்ற நேரத்தில் எல்லாவிதமான சௌகரியங்களுக்கும் ஏற்பாடு செய்யவேண்டு மென்பதில் கருத்து வேற்றுமை இருப்பதற்கு இடமில்லை. பலர் இந்தச் சபை கட்டிடத்தை முன்பிருந்த இடத்தை விட்டு இங்கே மாற்றியது தவறு என்ற கருத்தை திரும்பதிரும்ப சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். அங்கே இருந் தாலும் சிலகுறைகள் இருக்கின்றன, சில நன்மைகள் இருக்கின்றன. இங்கே இருந்தாலும் சில குறைகள், சில நன்மைகள், இருக்கின்றன. அந்த முறையில் பார்க்கும் பொழுது அங்கே சபை கூடுவதினால் சில நன்மைகளும் அதற்குத் தகுந்த சில கெடுதல்களும் இருந்தன. பெருவாரியாக மொத்தத் தில் நாம் கணக்கிட்டுப் பார்க்கும்பொழுதும், மற்ற அங்கத்தினர்களின் அபிபபிராயத்தைக் கேட்ட பிறகும், சபை இங்கு கூடுவதிலே சபை நன்றாக நடப்பதற்கு ஒரு சூழ்நிலை இங்கு இருக்கிறது என்பதைத் தான் எல்லோரும் தெரிவித்திருக்கிறார்கள். அங்கத்தினர்களுக்கு ஏதாவது ஒரு தகவல் வேண்டுமானால், காரியாலயம் இன்னொரு பக்கத்தில் இருக்குமானால், அந்தத் தகவல் வந்துசேருவதற்குள் சபையின் கூட்டமே முடிந்துபோய் விடும். இப்பொழுது இங்கு சபை கூடுவதால், அவசரமாக ஏதாவது தகவல் வேண்டுமானாலும் சரி, விவாதத்திலே பல பிரச்னைகள் எழுப்பப்படும் பொழுது, உடனடியாக பதில் அளிப்பதற்கு காரியதரிசிகளிடமிருந்தோ, அல்லது வேறு அதிகாரிகளிடமிருந்தோ புள்ளி விவரங்கள் அல்லது வேறு தகவல்கள் வேண்டுமானாலும் சரி, அவைகளை உடனடியாக பெற முடிகிறது. சபை மவுண்டு ரோடில் கூடியிருந்த பொழுது, அந்த சௌகரியம் இருக்க வில்லை என்று நான் சொல்ல முடியும். ஏனென்றால் பல சமயங்களில் ஏதாவது ஒரு விஷயத்தைப் பற்றி பதில் சொல்லுவதற்கு விவரங்கள் வேண்டுமென்றால் அவைகள் காலாகாலத்தில் வந்து சேருவதில்லை. ஆனால் அந்தக் குறை இங்கு இல்லை. அதே சமயத்தில் இங்கு அங்கத்தினர் களுக்கு வேண்டிய பல சௌகரியங்களை ஏற்படுத்திக்கொடுக்கவேண்டு மென்று சொல்லும்பொழுது, அவைகள் அனைத்தையும் சிறிது சிறிதாக ஏற்படுத்திக்கொண்டிருக்கிறோம். ஆனால் இன்னும் இங்கே இட நெருக்கடி கொஞ்சம் இருக்கிறது. அதற்காக புதிய கட்டிடங்களை கட்டிக்கொண்டிருக் கிறோம். அந்தக் கட்டிடங்கள் கட்டி முடிந்த பிறபாடு எல்லாவிதமான வசதிகளையும் பெருக்கிக்கொள்ள முடியும். இந்தச் சபையை பொறுத்த வரையில் இதிலே கொஞ்சம் மிச்சம் பிடித்து அங்கத்தினர்களுக்கு அசௌ கரியத்தைக் கொடுத்து பட்ஜெட்டை சரிக்கட்டவேண்டிய நிலைமையில் நாம் இல்லை. அங்கத்தினர்களுக்கு வேண்டிய எல்லாவிதமான சௌகரியங் களையும் செய்துகொடுக்க முடியும். இந்தச் சபையை 'ஏர் கண்டிஷன்' செய்யவேண்டுமென்று எதிர்க்கட்சித் தலைவர் அவர்கள் சொன்னார்கள். எல்லாக் கட்சியினருக்கும் இது விஷயத்தில் ஏகோபித்த அபிப்பிராயம் இருக்குமானால் இது பற்றி ஆலோசிக்கலாம். ஆனால் இதை ஒரு அரசியல் பிரச்னையாக வைத்து கொண்டு, ஏதோ 2, 3 லட்ச ரூபாய் செலவில் அங்கத் தினர்கள் 'குளு, குளு' என்று உட்காருவதற்கு வேண்டிய வசதிகளை செய்து கொண்டுவிட்டார்கள் என்று சொல்லி இதை அரசியல் பிரச்னையாக உபயோகப்படுத்திக்கொள்ள முன்வருவார்கள். அப்படியில்லாமல் இங்கு அங்கத்தினர்கள் நன்றாக தங்குவதற்கு, சபை நன்றாக நடப்பதற்கு சௌகரியங்கள் இருக்கவேண்டும் என்பதில் ஒன்றுபட்ட கருத்து இருக்குமே யானால், அதை ஏற்று நடத்துவதற்கு தயாராக இருக்கிறோம். அதே மாதிரி சபை உதகமண்டலத்தில் கூடவேண்டுமென்று கருத்து தெரிவிக்கப்பட்டது. சர்க்காரைப் பொறுத்தவரையில், இது விஷயமாக சபையினரிடையே ஒன்று பட்ட அபிப்பிராயம் இருக்குமானால், அதற்கு சர்க்கார் தடையாக இருக்க விரும்பவில்லை. ஆகவே இதை நீங்கள் யோசித்துப் பார்த்துச்சொல்லுங்கள் என்று கட்சித் தலைவர்களுக்கு விட்டுவிட்டோம். ஆனால் திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் அவர்கள் மட்டும் அந்தப் பொறுப்பை அரசாங்கமே ஏற்றுக் கொள்ளவேண்டும், அதை நாங்கள் எங்களுடைய அரசியல் பிரச்னையாக உபயோகித்துக்கொள்ளும் உரிமையை நீங்கள்

[Sri C. Subramaniam] [7th April 1958

பரிக்கக்கூடாது. ஆகையால் என்னுடைய சம்மதத்தை நீங்கள் கேட்கக் கூடாது. ஆனால் அந்த முடிவுப் பிரகாரம் நாங்கள் ஊட்டிக்கு வருகிறோம். அங்கு இருக்கக்கூடிய சௌகரியங்களை அனுபவிப்பதற்கு தயார். அதை என்னுடைய அரசியல் பிரசாரத்திற்கு உபயோகப்படுத்திக் கொண்டால் அதற்கு ஏன் நீங்கள் தடையாக இருக்கிறீர்கள். நான் சம்மதம் கொடுக்க மாட்டேன். நீங்கள் வேண்டுமானால் முடிவு செய்யுங்கள் என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். சபை நல்ல முறையிலே கூடவேண்டுமென்பதற்காக மற்ற கட்சித் தலைவர்கள் இதை ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். சபை ஊட்டியில் கூடுவதால் வீண் செலவு கூடாது என்பது மற்ற எதிர்க் கட்சி தலைவர்களுக்கு தெரிந்ததே. எதிர்க் கட்சி தலைவர், கம்யூனிஸ்டு கட்சி தலைவர், சோஷலிஸ்டுகட்சி தலைவர் இவர்களுக்கு வீண்செலவு செய்யவேண்டு மென்ற கருத்து இருக்க முடியாது. இவர்களெல்லாம் இதற்கு சரி என்று சொல்லும்பொழுது, திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் அவர்களுக்கும் இதுதான் சரி என்று மனதில் பட்டாலும், சர்க்கார் அந்த முடிவை செய்தால், அதை நான் ஏற்றுக் கொள்ளத் தயார். நான் மட்டும் சம்மதத்தை வெளிப் படையாக தெரிவிக்க மாட்டேன் என்று சொல்லுவது ஒரு தைரியம் இல்லாத காரணத்தினால் தான் என்று நினைக்கவேண்டியதாக இருக்கிறது. இது ஒரு சரியான முடிவு என்று சொன்னால் அந்த முடிவுக்கு சம்மதம் கொடுப்பதற்கு தைரியம் இல்லாத காரணத்தினால், இதை வேறு வகையிலே அரசியலில் பயன் படுத்திக்கொள்ளுவதற்காக இவ்வாறு நாங்கள் சம்மதம் கொடுக்கமாட்டோம் வெளிப்படையாக என்ற முறையில் சொல்லுவது சரியல்ல. தவறு என்று நினைத்தால், ஊட்டிக்கு போவது தவறு, ஆகையினால் போகக்கூடாது, என்று சொன்னால் அதை நான் புரிந்து கொள்ள முடியும். ஊட்டிக்கு போகலாம். ஆனால் அதை சர்க்கார் முடிவு செய்தால் போகலாம். நாங்கள் அதற்கு சம்மதம் தெரிவிக்க முடியாது என்று சொல்லக்கூடாது என்ற அளவில் நான் சொல்லுகிறேன். சரி என்ற ஒரு காரியத்திற்கு சம்மதம் தருவதில் என்ன கஷ்டம் இருக்க முடியும் என்பது எனக்கு புரியவில்லை. அவர்களுடைய அரசியலில் அது வேறு விதமாக இருக்கலாம். என்னுடைய அரசியலில் அதில் இருக்கக்கூடிய கஷ்டத்தை புரிந்துகொள்ள முடியவில்லை.

1-10 pm SRI C. N. ANNADURAI : சட்டமன்றத் தலைவர் அவர்களே, ஊட்டிக்கு போவது பற்றி சொல்லும்பொழுது, சட்டமன்றம் அங்கே கூடினால், நான் வருவதற்கு தயாராக இருக்கிறேன், ஆனால் அது விஷயத்தில் முடிவு மட்டும் எடுப்பதற்கு நான் தயங்குவதாக நிதி அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். சர்க்கார் அந்தப் பொறுப்பை ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று நான் சொன்னதிலே, திராவிட முன்னேற்றக் கழகம் ஊட்டிக்கு வரும் என்ற அர்த்தம் உள்தொக்கி இல்லை என்பதை நிதி அமைச்சர் அவர்களுக்கு தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : இதுதான் கஷ்டமாக இருக்கிறது. திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் என்ன பேசுகிறார்—அவர் பேசுவதன் அர்த்தம் என்ன—என்பதை நான் புரிந்துகொள்ள முடியவில்லை. என்னை விட்டு விடுங்கள். மற்ற கட்சிகளின் தலைவர்களும் அவர் பேசுவதைப் புரிந்துகொள்ள முடியவில்லை. அவர் அன்று பேசியதைப் பொறுத்தவரையில், "நாங்கள் உதகமண்டலத்திற்கு வர மறுக்கவில்லை. ஆனால் எங்கள் முடிவைக் கூறுவதற்குத் தயாராயில்லை." என்று கூறினர் என்றுதான் நானும் மற்றெல்லோரும் கருதினோம். ஆகையால், சட்டசபை விஷயங்களில் தம் கருத்தை எல்லோரும் புரிந்து கொள்ளக்கூடிய முறையில் தயவுசெய்து விளக்கமாகத் தெரிவிக்கவேண்டு மென்று அவரைக் கேட்டுக்கொள்கிறேன்.

SRI C. N. ANNADURAI : இந்தப் பிரச்னை முதன் முதலாக வந்தபோது, உதகமண்டலத்திற்கு நாம் போவது சரியில்லை என்று நான் தெளிவாகச் சொல்லியிருக்கிறேன். இந்தப் பிரச்னை மேலும் மேலும் கிளப்பப்பட்டதால், பொறுப்பை சர்க்கார் ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று சொல்லியிருக்கிறேனே தவிர, விளக்கமாக இல்லாமல் எதையும் நான் பேசவில்லை. நான் கூறியதை, தாம் புரிந்துகொண்ட மாதிரியே மற்ற எதிர் கட்சிகளின் தலைவர்களும் புரிந்துகொண்டார்கள் என்று கனம்

அமைச்சர் கூறினர். அவர்களும் கனம் அமைச்சரும் மட்டும் இதைப்பற்றிப் பேசினார்களா என்று தெரியவில்லை. எல்லோரும் கூடிப்பேசியபோது, உதகமண்டலத்திற்கு நாம் போகவேண்டாம் என்ற கருத்தை நான் வலியுறுத்திச் சொல்லியிருக்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: எப்படியும் இப்போதாவது அதைப் பற்றி விளக்கம் கூறியதற்காக ஸ்ரீ. அண்ணதுரை அவர்களுக்கு நான் நன்றி தெரிவித்துக்கொள்கிறேன். சர்க்காரைப் பொறுத்தவரையில், உதகமண்டலத்திற்குப் போவதும் போகாமலிருப்பதும் ஒன்றுதான். உதகமண்டலத்திற்குப் போகும் விஷயத்தில் சர்க்காருக்கு எவ்வித அக்கரையும் இல்லை. சட்டசபைக் கூட்டம் உதகமண்டலத்தில் நடக்கலாமா என்பதுபற்றி சட்டசபை முடிவுசெய்யவேண்டும். சட்டசபைக் கூட்டத்தை உதகமண்டலத்தில் நடத்தலாம் என்ற யோசனையை சபையின் ஒரு பகுதியினர் எதிர்த்தாலும், சட்டசபைக் கூட்டத்தை சர்க்கார் உதக மண்டலத்தில் நடத்தாது. தமிழ்நாட்டு மக்களின் நலன்களைப் பொறுத்த வரையில், நாம் உதகமண்டலத்திற்குச் செல்வது தவறு என்ற தன் கருத்தை ஸ்ரீ அண்ணதுரை விளக்கியது குறித்து நான் சந்தோஷப் படுகிறேன். உதகமண்டலத்திற்கு சட்டசபை அங்கத்தினர்கள் வந்து அங்கே சபைக் கூட்டத்தை நடத்தவேண்டுமென்று தாம் கூறுவதை வற்புறுத்த வேண்டாமென்று உதகமண்டலத்தைச் சேர்ந்த கனம் அங்கத்தினரைக் கேட்டுக்கொள்கிறேன். மற்ற கனம் அங்கத்தினர்கள், அங்கே கூடவேண்டு மென்று வற்புறுத்தினார்கள். என்னைப் பொறுத்தவரையிலும், 'நீங்கள் எல்லோரும் செய்யும் முடிவை ஒத்துக்கொள்வதற்கு நான் தயாரா யிருக்கிறேன்' என்று அவர்களிடம் நான் உறுதியாகச் சொல்லிவிட்டேன். நான் இந்தப் பிரச்னையைத் திரும்பத் திரும்ப எழுப்பி அவர்களைச் சங்கடப் படுத்த விரும்பவில்லை. இந்தப் பிரச்னைகுறித்து எதிர்க் கட்சிகள்தான் இனிமேல் முடிவுசெய்யவேண்டும் என்று சொல்லிக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, சட்டசபை நன்றாக இயங்கும்படி செய்வதன்பொருட்டு கனம் அங்கத்தினர்களுக்கு பல்வேறு சௌகரியங்களைச் செய்துகொடுக்கும் விஷயத்தில், எல்லாக் கட்சிகளின் தலைவர்களுக்கும் தனி அறைகள் கொடுக்கவேண்டுமென்ற கருத்து தெரிவிக்கப்பட்டது. அந்த அறைகள் இங்கே இருக்கவேண்டுமா அல்லது தங்கும் இடத்தில் (மவுண்ட் ரோடில்) இருக்கவேண்டுமா என்ற பிரச்னையைப் பொறுத்தவரையில், தங்கும் இடத்தில்தான் இருக்கவேண்டுமென்று முதலில் சொல்லப்பட்டது. ஆகவேதான், அவசர அவசரமாக நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு அங்கே அந்த அறைகள் கொடுக்கப்பட்டன. இங்கே வேண்டுமென்றால் அதற்கும் ஏற்பாடு செய்கிறோம். அந்த அறைகள் எங்கே வேண்டுமென்று முதலில் கேட்கப்பட்டபோது, "விடுதி இருக்கும் இடத்திலேயே இந்த அறைகள் இருந்தால்தான் எங்களுக்கு சௌகரியமாக இருக்கும். இவை அங்கே இருந்தால்தான், கட்சிகள் கூடி இயங்குவதற்கு சௌகரியமாக இருக்கும். ஏனென்றால், சட்டசபைக் கூட்டம் நடக்கும்போதுதான் இங்கே வருகிறோம்; மற்ற சமயங்களில் அங்கேதான் இருக்கிறோம்" என்று எதிர்க்கட்சிகளைச் சேர்ந்தவர்கள் சொன்னார்கள். ஆகவேதான் அங்கே இந்த அறைகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அந்த அறைகள் கூட சௌகரியமாக இல்லை என்று சொல்லப்பட்டது. அவை சௌகரியமாக இல்லை என்றும், இங்கே அறைகள் வேண்டுமென்றும் சொன்னால், இங்கே அறைகள் கொடுப்பதற்கு ஏற்பாடு செய்கிறோம். சில காரியங்களுக்காக இங்கேயுள்ள சில இடங்களை வேறு ஸ்தாபனங்களுக்குக் கொடுத்திருக்கிறோம். அந்த ஸ்தாபனங்களை அங்கே அனுப்பிவிட்டு அந்த இடங்களை கட்சிகளுக்குக் கொடுப்போம். அதற்கான ஏற்பாட்டைச் செய்யவேண்டுமென்று சட்டசபைக் காரியதரிசி யிடமும் சொல்லியிருக்கிறேன். அந்த இடங்களை கட்சிகளுக்குக் கொடுப்பதில் கஷ்டம் இராது.

சட்டசபை நன்றாக இயங்கவேண்டுமென்றால், சட்டசபை இலாகாவும் நன்றாக இயங்கவேண்டுமென்றும், அந்த இலாகா சுதந்திரத்துடன் இயங்கவேண்டுமென்றும் கருத்தறிவிக்கப்பட்டது. நம் ராஜ்யத்தில் சட்டசபை இலாகாவிற்கு இதுவரையிலும் எவ்வளவு சுதந்திரம் கொடுக்கப்பட்டிருக்

[Sri C. Subramaniam] [7th April 1958

கிறது என்பதையும், அது சர்க்காரில் ஒரு தனி அங்கமாக இயங்குவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது என்பதையும் கனம் அங்கத்தினர்கள் அறிந்திருப்பார்கள் என்று நம்புகிறேன். சென்னையில் நடந்த சபாநாயகர் களின் மகாநாட்டிற்கு வந்த சபாநாயகர்களில் பலர் இங்கே செய்யப் பட்டிருக்கும் இந்த ஏற்பாட்டை அறிந்தபோது ஆச்சரியப்பட்டார்கள். அவர்கள் "உங்கள் ராஜ்யத்தில் இவ்வளவு முன்னேற்றமான ஏற்பாட்டைச் செய்திருக்கிறீர்களே! வேறு பல ராஜ்யங்களில் இருக்கும் சர்க்கார்கள் இப்படிப்பட்ட ஏற்பாட்டைப்பற்றி நினைக்கவே இல்லையே!" என்று சொன்னார்கள். வேறு ஏற்பாடுகளும் ஏதாவது அவசியமாக இருந்தாலும் அவைகளையும் செய்யலாம். வேறு ஏதாவது ஏற்பாட்டைச் செய்வதன் மூலம் இந்த இலாகாவினரின் வேலைத் திறனை அதிகரிக்க முடியுமானால், அந்த ஏற்பாட்டையும் செய்யலாம்; அந்த ஏற்பாட்டிற்கான யோசனையைப் பரிசீலித்து அந்த அடிப்படையில் அவசியமான மாறுதலைச் செய்யலாம். எந்த ஏற்பாடாக இருந்தாலும் செலவிற்கான பொறுப்பு கடைசியில் சர்க்காருக்குத்தான் வந்துசேருகிறது; அந்தப் பொறுப்பு சர்க்காரில் நிதி மந்திரிக்கு இருக்கிறது. செலவு புதியதாக இருந்தாலும், அந்தச் செலவிற்கான பொறுப்பு நிதி மந்திரிக்கு இருக்கிறது, அந்தச் செலவு எந்தப் பகுதியில் செய்யப்பட்டாலும்—தனியாக இயங்கும் பப்ளிக் ஸெர்விஸ் கமிஷன் செலவழித்தாலும் சரி, தனியாக இயங்கும் ஹைக்கோர்ட் செலவழித்தாலும் சரி—அதற்கான பொறுப்பு நிதி மந்திரியைத்தான் சாரும். அந்தச் செலவிற்கு இந்த சபையில் பதில் சொல்லவேண்டிய பொறுப்பு நிதி மந்திரிக்குத்தான் இருக்கிறது. ஆகவேதான், எந்தத் திட்டத்தைப்பற்றியோ ஏற்பாட்டைப்பற்றியோ ஆலோசனை கூறப்பட்டாலும், அந்த ஆலோசனை நிதி மந்திரியின் பார்வைக்குக் கொண்டுவரப்பட்டு, அது நிதி மந்திரியால் அங்கீகரிக்கப்பட்ட பிறகுதான், அது சம்பந்தமான புதுச் செலவுகள் செய்யப்படவேண்டுமென்பது நம் நிர்வாக அமைப்பில் ஒரு அடிப்படையான அம்சமாக இருக்கிறது. எந்த ஒரு இலாகாவும், அது தனிப்பட்ட இலாகாவாக இருந்தாலும் அதன் புதிய செலவுகளுக்கு என் சம்மதம் பெறப்பட வேண்டியிருக்கிறது. என் சம்மதம் பெறப்படு வதற்காக எந்தக் காரிய யோசனைகளும் என் பரிசீலனைக்குக் கொண்டு வரப்படும்போது, அவைகளை நான் மட்டும் நேரிடையாகப் பரிசீலிப்பதில்லை. நிதி இலாகாவினர் அவைகளைப் பரிசீலித்து எனக்கு ஆலோசனை கூறுகிறார்கள். அதற்கு நிதி இலாகா காரியதரிசியும் மற்ற உத்தியோகஸ் தர்களும் இருக்கிறார்கள். அந்தக் காரியங்களை ஏற்றுக்கொள்ளலாமா வேண்டாமா என்பதுபற்றி அவர்கள் எனக்கு ஆலோசனை கூறுகிறார்கள். அவர்கள் ஆலோசனை சொன்ன பிறகு கடைசியாக தீர்ப்புக் கூற வேண்டிய பொறுப்புத்தான் எனக்கு இருக்கிறது. சட்டசபை இலாகாவைப் பொறுத்த புதிய காரியங்களுக்கான யோசனைகள் என் பார்வைக்குக் கொண்டுவரப் படுகின்றனவென்றால், இந்த இலாகாவின் சுதந்திரத்தைக் கட்டுப்படுத்தும் அதிகாரம் எனக்கு இல்லை. இந்த இலாகாவின் அதிகாரிகள் நன்றாக வேலை செய்வதற்கு வகைசெய்யக்கூடிய பல்வேறு யோசனைகள் தெரிவிக்கப்படவேண்டும். இந்த இலாகா தனி இலாகாவாக ஆனதில் சில நன்மைகளும் இருக்கின்றன. சில சங்கடங்களும் இருக்கின்றன. நன்மைகளை அடைய விரும்பும்போது சில சங்கடங்களையும் ஏற்கத்தான் வேண்டும். இலாகா தனியாக ஆக்கப்பட்டதன் காரணமாக இலாகாவிலுள்ள உத்தியோகஸ்தர்களுக்கு இருக்கும் உத்தியோக உயர்வு வாய்ப்புகள் குறையுமானால் அந்தச் சங்கடத்தை அவர்கள் ஏற்கத்தான்வேண்டும் இந்த இலாகா நன்றாக இயங்கும்படி செய்வதற்கு எல்லா முயற்சிகளையும் எடுத்துக்கொண்டுதான் இருக்கிறோம். இந்த இலாகா நன்றாக இயங்கினால்தான் சட்டசபையும் நன்றாக இயங்கமுடியும். இதை உணர்ந்துதான், இதற்கான பல காரியங்களைச் செய்துவருகிறோம். இவை எல்லாவற்றையும்விட சர்க்காரின் முழுப் பொறுப்பும் இந்த சபையில்தான் இருக்கிறது. மந்திரிகளிடம் சர்க்காரின் பொறுப்பு இருந்தாலும் அந்தப் பொறுப்பு எல்லாம் இந்த சபையில்தான் இருக்கிறது. ஆகவே இந்த சபை எவ்வளவுக்கெவ்வளவு நன்றாக இயங்குகிறதோ அவ்வளவுக்கவ்வளவு சர்க்காரும் நன்றாக இயங்கும். சர்க்காருக்கு சபையின் ஆதரவுவேண்டும். சபையின் ஆதரவு இல்லாவிட்டால் நாங்கள் சர்க்காரை நடத்தமுடியாது.

7th April 1958] [Sri C. Subramaniam]

ஆகவே சர்க்காரை நன்முக நடக்கச்செய்யும் பொறுப்பு சட்டசபைக்கு இருக்கிறது. சட்டசபை என்று சொல்லும்போது, சட்டசபையிலுள்ள எல்லாக் கட்சிகளேயும்தான் நான் குறிப்பிடுகிறேன். எந்தத் தனியொரு கட்சியையும் நான் குறிப்பிடவில்லே. சட்டசபை அங்கத்தினர்கள் எவ்வளவுக் கெவ்வளவு திறமையாகத் தங்கள் பொறுப்பை நிறைவேற்றுகிருர்களோ அவ்வளவுக்கவ்வளவு சர்க்காரின் திறமையும் நிர்வாகத்தின் திறமையும் மேலும் மேலும் அதிகரிக்கும். ஆகவே சட்டசபை அங்கத்தினர்கள் சபையில் எந்தக் குற்றச்சாட்டைச் சொல்லும்போதும் சரியான புள்ளிவிவரங்களுடனும் ஆதாரங்களுடனும் அதைச் சொல்லவேண்டும் என்று சொல்லிக்கொள்கிறேன். அவ்வாறில்லாமல், பொதுப்படையாக, மொட்டையாக குற்றச்சாட்டுகளேச் சொன்னுல், அவைகளால் நாங்கள் பாதிக்கப்படுவதில்லே என்பதை சபை அங்கத்தினர்களுக்கு நான் தெரிவிக்கவேண்டியது மிகவும் அவசியம். இங்கே எடுத்துச் சொல்லப்படும் குறைகளெல்லாம் தீரவேண்டுமானுல், அவைகளே மந்திரிகளும் நிர்வாகத்தில் உள்ளவர்களும் உணரவேண்டும். ஆகவே அவைகளே அவர்களுக்கு உணர்த்தக்கூடிய வகையில், ஆதாரங்களுடனும் புள்ளிவிவரங்களுடனும் அவைகளே இங்கே சொல்லவேண்டும். அப்படியின்றி, ' வெறும் வாதத்திற்காகவும், அந்த வாதம் எங்கள் கட்சிப் பத்திரிகையில் வருவதற்காகவும் பேசுவோம் ' என்று கனம் அங்கத்தினர்கள் சொன்னுல் அதற்கு நாங்கள் ஒத்துக்கொள்ளவில்லே.

சட்டசபை அங்கத்தினர்கள், அவர்கள் சட்டசபையில் சொல்லும் விஷயங்களேயும், குற்றச்சாட்டுகளேயும் நல்லமுறையில் எடுத்துச்சொல்வதற்கு அவர்களுக்கு உதவக்கூடிய வகையில் பல சௌகரியங்களே செய்துகொடுக்கவேண்டியது அவசியம் என்று நான் முன்பே சொன்னேன். அதற்கு என்ன என்ன சௌகரியங்கள் வேண்டுமென்று சொல்ல நான் முற்படவில்லே. எதிர் கட்சி அங்கத்தினர்கள் திட்டம்போட்டு, தங்களுக்கு என்ன என்ன சௌகரியங்கள் வேண்டுமென்பதைக் குறிப்பிட்டால் அவர்கள் கூறுவதை கவனித்துவேண்டிய சௌகரிகங்களே நாங்கள் செய்து கொடுப்போம். எந்த எந்த சௌகரியங்கள் செய்துகொடுப்பதற்கு ஆகக்கூடிய செலவுகளே நாங்கள் ஏற்றுக்கொள்ள முடியுமோ, அந்த அந்த சௌகரியங்களே செய்துகொடுப்போம். ஒரு ' இன்பர்மேஷன் ஸெண்டர் ' வேண்டுமென்று சொல்லப்பட்டது. அதாவது, இங்கே நன்முகப் பேசுவதற்கு கனம் அங்கத்தினர்களுக்கு உதவும் வகையில் பல விவரங்களேயும், ஆதாரங்களேயும், செய்திகளேயும் அவர்களுக்குக் கொடுத்து உதவக்கூடிய ஸ்தாபனம் வேண்டுமென்று சொல்லப்பட்டது. அதை அமைப்பதில் கஷ்டம் இருக்காது.

இந்த ஸ்தாபனத்தை ஏற்படுத்துவது மூலமாக கனம் அங்கத்தினர்களுக்கு பல விஷயங்களேப்பற்றிப் படிப்பதற்கும் அறிவதற்கும் சௌகரியமாக இருப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளேயும் செய்யமுடியும். ஆனுல், அது எந்தவிதமான ஏற்பாடாக இருக்கவேண்டும் என்பதை இந்தச் சபையிலுள்ள கனம் அங்கத்தினர்கள் எல்லோரும் ஆலோசனே செய்து சொன்னுல், அப்படிச் சொல்லியதற்குப் பிறகு, எல்லோரும் உட்கார்ந்துகொண்டு பரிசீலனே செய்து, விவாதித்து எந்த முறையில் இருக்கவேண்டும் என்ற முடிவு ஏற்படலாம். அதற்கும் வெகு சுலபமாக ஏற்பாடு செய்ய முடியும். 1-20 p.m.

அந்த முறையில் நாம் எல்லோரும் விரும்புவது, அதுதான் எல்லோருடைய விருப்பமாகவும் இருக்கமுடியும். இந்த சபையிலே இன்னும் நல்ல முறையிலே, திறமையான முறையிலே, மக்கள் பாராட்டுகிற முறையிலே பாராட்டுவது மட்டுமல்ல, மக்களுக்கு நன்மை கொடுக்கிற முறையிலே விவாதங்கள் நடைபெறவேண்டும், குறைகள் எடுத்துச் சொல்லப்படவேண்டும், கேள்விகள் கேட்கப்படவேண்டும், அந்த முறையிலே கனம் அங்கத்தினர்கள் இயங்கவேண்டும். இந்தச் சபை மேன்மேலும் நல்ல முறையிலே பணியாற்றுவதற்கு எந்தவித உதவியும் செய்வதற்கு சர்க்கார் தயாராக இருக்கிறது என்ற உறுதியை மட்டும் சொல்லிக்கொண்டு, இந்த மான்யத்தை ஏற்று எந்த விதமான கருத்து வேற்றுமையும் இல்லாமல் நிறைவேற்றி வைக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அந்த முறையிலே இந்த

[Sri C. Subramaniam] [7th April 1958

வெட்டுப் பிரேரேபணையை வற்புறுத்துவது அவசியமா என்பதையும் அவர்கள் யோசித்துப் பார்க்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு என்னுடைய உரையைமுடித்துக்கொள்கிறேன்.

**Sri K. ANBAZHAGAN :** அமைச்சர் அவர்கள் பேசுகிறபோது, கட்சித் தலைவர்கள் எல்லோரும் ஒரு சேர வற்புறுத்துவார்களானால், எந்தச் செலவையும் சர்க்கார் ஏற்றுக்கொண்டு, அவர்களுடைய விருப்பத்தை நிறைவேற்றத் தயாராக இருக்கும் என்று பலதடவை எடுத்துச் சொன்னார்கள். 'இன்பர்மேஷன் ப்யூரோ ஒன்றை ஏற்படுத்துவேன்' என்று அமைச்சர் அவர்கள் ஏற்கெனவே இந்த சட்டசபையில் சொன்னார்கள். ஆனால், காலதாமதம் ஆகிறது. ரயில்வே பாஸ் வழங்குவது குறித்தும் எல்லாக் கட்சியிலிருந்தும் வற்புறுத்தியிருக்கிறார்கள். ஆனால், அமைச்சர் அவர்கள் எல்லோரும் வலியுறுத்திய அந்தக் கருத்துக்குப் பதில் சொல்லாமல் விட்டு விட்டார்கள். அதற்கான பதிலை, எல்லோரும் ஒருமித்துக் கூறியதற்கான பதிலை நான் எதிர்ப்பார்க்கிறேன்.

**The Hon. Sri C. SUBRAMANIAM :** இன்பர்மேஷன் ப்யூரோ இப்பொழுதே ஒன்று ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அதை விரிவுபடுத்த வேண்டுமென்று சொன்னால் அதை விரிவுபடுத்துவதற்குத் தயாராயிருக்கிறோம்.

கனம் அங்கத்தினர்களுக்கு ரயில்வே பாஸ் வழங்குவது பற்றி, அந்தக் கூட்டத்தில் பேசும்போது அப்போதே நான் பதில் சொன்னேன். ஆகையால், இப்பொழுது சொல்லவேண்டியது அவசியம் இல்லை என்று விட்டு விட்டேன். ஏனென்றால் அது எல்லோரும் அறிந்திருப்பது.

முன்பு இந்தப் பிரச்னை வந்தபோது, அது மந்திரிசபை முன்னால் வைக்கப்பட்டு, 'இது அவசியம் இல்லை' என்று மந்திரிசபையில் முடிவு செய்திருக்கிறார்கள், அந்த முடிவை மாற்ற வேண்டுமானால், அந்தச் சபை முன்பு வைத்துதான் மாற்றவேண்டும். ஆகையால், இதைப் பரிசிலனை செய்து, மறுபடியும் மந்திரி சபை முன்னால் வைத்து, அதில் ஏற்படும் தீர்ப்பை கனம் அங்கத்தினர்களுக்குத் தெரிவிக்கலாம். பிஸினஸ் அட்வைசரி கமிட்டியில் சொல்லியிருக்கும்போது, சொன்னதையே திருப்பித் திருப்பிச் சொல்ல வேண்டியது அவசியமில்லை என்ற காரணத்திலேயே அதைப் பற்றி இங்கே பதில் சொல்லவில்லையே தவிர வேறு ஒன்றும் இல்லை என்று நான் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

ஆனால் ரயில்வே பாஸைப் பொறுத்த வரையில் இதிலே நாம் செய்ய வேண்டிய முடிவு மட்டும் அல்ல, மத்திய அரசாங்கத்தையும் ரயில்வே நிர்வாகத்தையும் கேட்டுச் செய்யவேண்டிய ஏற்பாடாக இருப்பதால் நாம் அதற்குத் தயாராய் இருந்தாலும்கூட, எந்த அளவு அந்த வசதி அங்கே கிடைக்கும் என்பதைப் பரிசீலனை செய்து, அவர்களுடைய ஒப்புதலையும் பெற்றுதான் இந்தக் காரியம் செய்யவேண்டுமென்று நான் தெரிவித்துக் கொள்கிறேன். நாம் முடிவு எடுத்தவுடனேயே எல்லோருக்கும் பாஸ் வழங்கி, அந்தப் பாஸைக் காண்பித்து விட்டு ரயிலிலே பிரயாணம் செய்ய வேண்டுமென்று சொன்னால், அது நாம் செய்யக்கூடியதல்ல. ரயில்வே நிர்வாகத்தையும் கலந்தாலோசித்துத்தான் செய்யவேண்டியதாக இருக்கிறது.

இது நம்முடைய ராஜ்யத்தில் மட்டும் கைவிடப்படவில்லை. எல்லா ராஜ்யங்களும் இந்தப் பிரச்னைப்பற்றி யோசித்து, நடை முறையில் சாத்தியம் இலலை என்று எல்லா ராஜ்யங்களிலும் கைவிடப்பட்டிருக்கிறது. நாமும் அந்த முறையில்தான் கைவிட்டிருக்கிறோம். மறுபடியும் கனம் அங்கத்தினர்கள் இதை மறு பரிசீலனை செய்யவேண்டுமென்று சொல்வதால் மறு பரிசீலனை செய்கிறோம். மறுபடியும் மந்திரி சபையின் முன்னால் கொண்டு வந்து, மறுபடியும் வேண்டுமானால் ரயில்வே நிர்வாகத்திற்கும் எழுதி இதில் ஏதாவது செய்யமுடியுமா என்று யோசித்துப் பார்த்து முடிவு செய்கின்ற முறையில்தான் அதற்குப் பதில் சொல்லாமல் விட்டுவிட்டேனே தவிர அதை அலட்சியம் செய்யவேண்டுமென்ற மனப்பான்மையினால் அல்ல. அதிலே என்னுடைய கருத்தை இதற்கு முன்பும் தெரிவித்து இருக்கிறேன்.

7th April 1958]

**Mr. SPEAKER :** கனம் அங்கத்தினர்கள் ஸ்ரீ எம். கல்யாணசுந்தரம் அவர்கள் வெட்டுப் பிரேரேபணையை வற்புறுத்துகிருரா ?

Sri M. KALYANASUNDARAM : I am not pressing my cut motion, Sir.

The cut motion was, by leave, withdrawn.

**Mr. SPEAKER :** கனம் அமைச்சர் அவர்கள் கொண்டுவந்த 10-வது மான்யக் கோரிக்கை—ஸ்டேட் லெஜிஸ்லேசர்-யை ஆதரிக்கிறவர்கள் ‘ ஆம் ’ என்று சொல்லுங்கள். எதிர்க்கிறவர்கள் ‘ இல்லே ’ என்று சொல்லுங்கள்.

‘ ஆம் ’ என்று சொன்னவர்களுக்கு வெற்றி. அரசாங்கத்திற்கு இந்தப் பணம் வழங்கப்படும்.

இந்தச் சபையை நாளே காலே 8-30 மணி வரை ஒத்திவைக்கிறேன்.

The House then adjourned.



## Appendix I.

[Vide answer to starred question No. 568 asked by Sri K. B. S. Mani on behalf of Sri P. G. Manickam) at the meeting of the Legislative Assembly held on 7th April 1958, page 276 supra.]

*Statement showing the number of persons in each district who have committed offences in contravention of the Madras Prohibition Act and the nature of such offences in* 1957.

| District. | Smuggling of liquor from other States. | Smuggling of liquor from district to district. | Illicit distillation. | Possession of illicit distilled spirits. | Sale of illicit distilled spirits. | Tapping of trees for fermented toddy. | Permitting sweet toddy to ferment. | Tapping of trees for sweet toddy without licences. | Illicit transport of liquor. | Unlicensed sale of liquor. | Unlicensed possession of liquor. | Unlicensed possession of intoxicating drugs. | Cultivation of hemp plants. |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) | (7) | (8) | (9) | (10) | (11) | (12) | (13) | (14) |
| Chingleput .. .. .. | .. | .. | 3,761 | 4,050 | 5 | 452 | 30 | .. | 1 | 11 | 377 | .. | 2 |
| South Arcot .. .. .. | 175 | .. | 835 | 2,011 | 6 | 98 | 62 | 29 | .. | .. | 101 | .. | .. |
| Tanjore .. .. .. | 51 | .. | 2,151 | 2,475 | .. | 119 | 56 | 148 | .. | 10 | 1,081 | .. | 1 |
| Tiruchirappalli .. .. | .. | .. | 939 | 1,976 | 10 | 113 | 6 | 60 | .. | .. | 44 | .. | 3 |
| Madurai (North) .. .. | .. | .. | 1,044 | 1,584 | .. | 16 | .. | 54 | .. | .. | 5 | .. | .. |
| Madurai (Urban) .. .. | .. | .. | 437 | 1,364 | .. | .. | .. | 159 | .. | .. | 21 | .. | .. |
| Ramanathapuram .. .. | 3 | .. | 287 | 1,113 | .. | 282 | 47 | 537 | .. | .. | 320 | .. | .. |
| Tirunelveli .. .. .. | .. | .. | 889 | 1,624 | 5 | 263 | 70 | 712 | .. | 19 | 822 | .. | .. |
| North Arcot .. .. .. | .. | .. | 3,805 | 3,839 | 9 | 290 | 24 | 38 | .. | 1 | 198 | .. | 4 |
| Salem .. .. .. | 7 | .. | 2,572 | 4,921 | 13 | 470 | 6 | 85 | .. | .. | 433 | .. | 3 |
| Coimbatore .. .. .. | 1 | .. | 2,608 | 4,175 | 11 | 868 | 8 | 494 | 4 | .. | 288 | .. | 4 |
| The Nilgiris .. .. .. | .. | .. | 434 | 644 | .. | .. | .. | .. | .. | .. | 95 | .. | 2 |
| Government Railway Police, Tiruchirappalli. | .. | .. | .. | .. | .. | .. | .. | .. | 799 | .. | .. | .. | .. |
| Madras City .. .. .. | .. | .. | 1,456 | 6,000 | .. | .. | .. | .. | .. | .. | .. | .. | .. |

| District. | Smuggling of drugs from district to district. | Smuggling of drugs from other States. | Illicit transport of drugs. | Unlicensed sale of drugs. | Unlicensed possession of drugs. | Miscellaneous. | Rendering denatured spirit potable. | Smuggling of opium. | Transport of opium. | Possession of opium. | Sale of opium. | Offences under Dangerous Drugs Act. | Total. |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | (15) | (16) | (17) | (18) | (19) | (20) | (21) | (22) | (23) | (24) | (25) | (26) | (27) |
| Chingleput .. .. .. | .. | .. | .. | .. | 15 | 4,504 | 47 | .. | .. | 7 | 5 | .. | 13,267 |
| South Arcot .. .. .. | .. | .. | .. | .. | 21 | 5,544 | 3 | .. | .. | 7 | .. | 2 | 8,894 |
| Tanjore .. .. .. | .. | .. | .. | .. | 17 | 2,665 | 1 | .. | .. | 32 | .. | 8 | 8,815 |
| Tiruchirappalli .. .. | .. | .. | .. | .. | 65 | 5,668 | 1 | .. | .. | 60 | .. | .. | 8,945 |
| Madurai (North) .. .. | .. | .. | .. | .. | 714 | 1,515 | .. | .. | .. | 15 | .. | 3 | 4,950 |
| Madurai (Urban) .. .. | .. | .. | .. | 78 | 589 | 1,551 | .. | .. | .. | 28 | .. | 23 | 4,250 |
| Ramanathapuram .. .. | .. | .. | .. | .. | 264 | 658 | .. | .. | .. | 16 | .. | .. | 3,527 |
| Tirunelveli .. .. .. | .. | .. | .. | .. | 101 | 3,710 | .. | .. | .. | 45 | .. | 14 | 8,274 |
| North Arcot .. .. .. | .. | .. | .. | .. | 59 | 9,513 | 34 | .. | .. | 8 | .. | .. | 17,822 |
| Salem .. .. .. .. | .. | .. | .. | .. | 116 | 13,205 | .. | .. | .. | 16 | .. | .. | 21,847 |
| Coimbatore .. .. .. | .. | .. | .. | .. | 107 | 8,952 | 8 | .. | .. | 38 | .. | 108 | 17,674 |
| The Nilgiris .. .. .. | .. | 1 | .. | .. | 3 | 1,018 | 34 | .. | .. | .. | .. | .. | 2,231 |
| Government Railway Police, Tiruchirappalli. | .. | .. | .. | .. | .. | 1,956 | .. | .. | .. | .. | .. | .. | 2,755 |
| Madras City .. .. .. | .. | .. | .. | .. | .. | 9,000 | .. | .. | .. | .. | .. | .. | 16,456 |

[7th April 1958

## Appendix II.

**[Vide answer to starred question No. 569 asked by Sri A. Vedarathnam (on behalf of Sri P. G. Manickam) at the meeting of the Legislative Assembly held on 7th April 1958, page 276 supra.]**

*Statement showing the number of persons given liquor permits in 1956–57.*

| Name of district. | *Number of persons given liquor permits in 1956.* | | | | |
|---|---|---|---|---|---|
| | Indian (annual permits on health grounds). | Visitors (on grounds of health). | Officials, seamen, etc., of merchant Navy. | Military officials. | Non-Indians. |
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) |
| Coimbatore .. .. | 14 | .. | .. | .. | 24 |
| Nilgiris .. .. | 14 | .. | .. | 100 | 10 |
| Madurai .. .. .. | 7 | .. | .. | .. | 18 |
| Salem .. .. .. | 3 | .. | .. | .. | 3 |
| Tiruchirappalli .. .. | 2 | .. | .. | .. | .. |
| Tanjore .. .. .. | .. | .. | .. | .. | .. |
| Ramanathapuram .. | 1 | .. | .. | .. | 1 |
| Chingleput .. .. | 1 | .. | .. | 6 | .. |
| South Arcot .. .. | .. | .. | .. | .. | 4 |
| Tirunelveli .. .. | 3 | .. | .. | .. | 5 |
| North Arcot .. .. | 2 | .. | .. | .. | 1 |
| Madras .. .. | 71 | 2,047 | 11,437 | 24 | 438 |
| Total .. | 118 | 2,047 | 11,437 | 130 | 504 |

| Name of district. | *Number of persons given liquor permits in 1957.* | | | | |
|---|---|---|---|---|---|
| | Indian (annual permits on health grounds). | Vistors (on goounds of health). | Officials, seamen, etc., of merchant Navy. | Military officials. | Non-Indians. |
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) |
| Coimbatore .. .. | 7 | .. | .. | .. | 4 |
| Nilgiris .. .. | 13 | .. | .. | 74 | 16 |
| Madurai .. .. | 3 | .. | .. | .. | 9 |
| Salem .. .. | 3 | .. | .. | .. | 5 |
| Tiruchirappalli .. .. | 2 | .. | .. | .. | 2 |
| Tanjore .. .. | 1 | .. | .. | .. | .. |
| Ramanathapuram .. | 4 | .. | .. | .. | .. |
| Chingleput .. .. | .. | .. | .. | 18 | 2 |
| South Arcot .. .. | 3 | .. | .. | .. | .. |
| Tirunelveli .. .. | 3 | .. | .. | .. | 2 |
| North Arcot .. | 3 | . | .. | .. | .. |
| Madras .. .. .. | 139 | 2,525 | 14,434 | 30 | 405 |
| Total .. | 178 | 2,525 | 14,434 | 122 | 445 |

